# வாடகை விடுதி

— முதலிய கதைகள் —

(Short Stories Volume VIII)

தமிழாக்கம்:

ஜி. மங்கயர்க்கரசி B. Sc.,



பழனியப்பா பிரதர்ஸ்

சேப்பாக்கம்
சென்னை-5 :: தெப்பக்குளம்
திருச்சி-2

[விலை ரூ. 1-50]

## உள்ளுரை

# 1. வாடகை விடுதி

## ஓ. ஹென்றி

[வில்லியம் சிட்னி போர்ட்டர் (ஓ. ஹென்றி) 1902-இல் நியூயார்க் நகருக்கு வந்தார். அப்போது அவரைப் பற்றி யாருக்குமே தெரியாது. எட்டு ஆண்டுகளுக்குப் பின்—அவர் இறந்தபோது—அமெரிக்காவில் மிகப் புகழ்பெற்ற சிறுகதை ஆசிரியராக இருந்தார். அவருடைய சிறுகதைகளில் வருவது போலவே அவரது சொந்த வாழ்க்கையும் எத்தனையோ ஏற்ற இறக்கங்களும் துரதிருஷ்ட சம்பவங்களும் நிறைந்தது ஆகும். வட கரோலினவில் உள்ள கிரீன்ஸ்பரோவில் அவர் 1862, செப்டம்பர் 11-ஆம் தேதி பிறந்தார். அவர் செய்யாத வேலையே இல்லை எனலாம். இருபதாவது வயதில் அவர் டெக்ஸாஸில் ஒரு கால்நடைப் பண்ணையில் வேலை பார்த்தார். பிறகு ஆஸ்ட்டினில் குமஸ்தாவாகவும், பத்திரிகை ஆசிரியராகவும், பேரேட்டுக் கணக்குப் பிள்ளையாகவும், பிளான் வரைபவராகவும், நடிகராகவும் கார்ட்டூன் சித்திரம் வரைபவராகவும், பாங்குக் குமஸ்தாவாகவும் இருந்திருக்கிறார். அவர் சொந்தமாகப் பத்திரிகை ஒன்றை விலைக்கு வாங்கி நடத்தினர். அது நல்ல முறையில் நடைபெருது போகவே நிறுத்திவிட்டு ஹவுஸ்டனுக்குச் சென்று, பத்திரிகை நிருபராகச் சேர்ந்தார். ஆஸ்ட்டினில் அவர் பாங்குக் குமஸ்தா வேலையை விட்டு வந்த ஒரு வருஷ காலத்திற்குப் பின்னர், அவர் எழுதிய கணக்குகளில் பெரும் தவறுகள் இருப்பது

கண்டுபிடிக்கப்பட்டன. தம்மைத் தண்டித்து விடுவார்கள் என்ற பயத்தினால் அவர் மத்திய அமெரிக்காவிற்கு ஓடி விட்டார். பிறகு மனைவியின் தேகநிலை மோசமாகி வரு வதைக் கேள்விப்பட்டு அவர் ஆஸ்டினுக்குத் திரும்பி வந்தபோது குற்றவாளி எனப் பிடிக்கப்பட்டு, ஒகியோ சிறைக்குள் மூன்று ஆண்டுகளுக்குமேல் தள்ளப்பட்டிருந் தார். இந்தக் காலத்தில் அவர் அநேக கதைகளை எழுதி முடித்திருந்தார். விடுதலைக்குப்பின், பத்திரிகை ஆசிரியர் ஒருவர் அவரை நியூயார்க்கிற்கு வரும்படி தூண்டினார். அதுமுதல் நியூயார்க்கிலே அவர் நிரந்தரமாகத் தங்கிவிட் டார். அவருடைய கதாபாத்திரங்களெல்லாம் குமஸ்தா, போலீஸ்காரன், ஹோட்டல் வேலையாள், வழிப்போக் கன்—இதுபோன்ற சாதாரண மனிதர்களாகத்தான் இருக்கும். அவரது கதைகள் எல்லாம், முடிவில் எதிர் பாராத திருப்பம் உடையனவாக இருக்கும். ''வாடகை விடுதி'' என்ற இக்கதை மனச்சாட்சியின் பிரதி பலிப்பைக் கிண்டலாகவும், ரத்தினச் சுருக்கமாகவும், படம் பிடித்துக் காட்டும் ஓர் அற்புதச் சிருஷ்டியாகும்.]

* * *

தாழ்ந்த மேற்குப் பிரதேசத்தில் உள்ள ரெட்பிரிக் வட்டார மக்களில் ஒரு பெரும் பகுதியினர்—காலத்தைப் போல் ஒய்வு ஒழிச்சல் இல்லாமல்—சதாகாலமும் இடம் விட்டு இடம் மாறிக்கொண்டே யிருந்தனர். கட்டினவனுக்கு ஒரு வீடு; கட்டாதவனுக்குப் பல வீடுகள் அல்லவா ? வாழ்வதற்கு மிக வசதியான அறைகளை அவாவி அவர்கள் வீட்டுக்கு வீடு மாறிக்கொண்டே யிருந்தனர். சதாகாலமும் இடம் மாறிக்கொண்டிருந்த அவர்களது மனமும் கூட இதேபோல்தான் மாறிக்கொண்டேயிருந்தன. " இல்லம் இனிய இல்லம் " என்று அவர்கள் பாடுவார்கள். ஆனால்

அவர்களது உடைமைகளெல்லாம் ஒரு பெட்டிக்குள் அடக்கம். அவர்களது வாழ்க்கையின் பெருமையோ அவர்களின் சித்திரத் தொப்பிகளுக்குள் அடக்கம். ரப்பர்ச் செடியைப் பார்த்து அத்திமரம் என்று ஆனந்திப் பவர்கள் அவர்கள்!

ஆயிரக் கணக்கில் குடித்தனக்காரர்களைப் பார்த்து விட்ட இந்த வட்டார விடுதிகள் ஆயிரக்கணக்கான வர்களின் சரிதையை அறிந்திருக்கும். ஆனால், அவை பெரும்பாலும் உப்புச் சப்பற்ற கதைகளாகத்தான் இருக்கும். ஆனால், இதுபோல் ஆயிரக்கணக்கில் குடியிருந்துபோன நபர்களில் ஓரிருவர் பேய்களாகவும் இருந்திருக்கக் கூடும் என்றால் அது ஆச்சரியப்படத் தக்கது தானே?

ஒருநாள் மாலை — இருள் கவிந்த பின் — ஒரு வாலிபன் பழைய விடுதிகளில் ஒவ்வொன்றாக நுழைந்து வெளிவந்து கொண்டிருந்தான். கடைசியில் அவன் பன்னிரண்டாவது விடுதிப் படியில் தன் சிறிய மூட்டையை இறக்கி வைத்துவிட்டு, தொப்பியின் விளிம்பில் ஒட்டியிருந்த தூசியையும் வியர்வையையும் துடைத்துக்கொண்டான். பிறகு அழைக்கும் அறிவிப்பு மணியை அழுத்தினான். அது எங்கேயோ ஒரு கிடங்கிற்குள் ஒலிப்பது போல் சன்னமாகக் கேட்டது. சிறிது நேரத்திற்குப் பிறகு, அந்தப் பன்னிரண்டாவது வீட்டின் சொந்தக்காரி வாயிற்பக்கம் வந்தாள். அவள், தோலிருக்கச் சுளை விழுங்கி என்றும், குடியிருக்க வருபவர்களையே தின்று தன் தீராப் பசியைத் தீர்த்துக் கொள்ளக் கூடியவள் என்றும் அவனுக்குத் தோன்றியது.

"வாடகைக்கு ஏதேனும் அறை இருக்குமா?" என்று அவன் கேட்டான்.

"கனத்த குரலில் இருக்கிறது; உள்ளே வாருங்கள்" என்றாள் வீட்டுக்காரி.

"மூன்றாவது மாடியின் பிற்பகுதியில் ஓர் அறை சென்ற வாரம் தான் காலியாகி இருக்கிறது. அதை வேண்டுமானால் பார்க்கிறீர்களா?"

அவள் வழிகாட்ட, வாலிபன் பின்னால் படியேறிச் சென்றான். கூடத்தின் இருளை எங்கிருந்தோ வந்த மங்கலான ஒளி சிறிதளவு விலக்கிக் கொண்டிருந்தது. மாடிப் படிமீது விரிக்கப்பட்டிருந்த ஐமுக்காளத்தின் மேல் அவர்கள் சந்தடியின்றி நடந்து சென்றனர். அந்தப் பழைய ஜமுக்காளம் நூல் நூலாகவும், பொடிப் பொடியாகவும் பிய்ந்துபோய் மாடிப் படியின்மீது திட்டுத் திட்டாகப் பாசிபோல் ஒட்டிக்கொண்டிருந்தது. அதன்மீது நடந்து செல்பவர்களின் காலில் பிசின் மாதிரி ஏதோ ஒட்டிக்கொண்டது. அந்தச் ஜமுக்காளத்தை—இந்த நிலையில்—அதை நெய்த தறி பார்த்திருக்குமானால் "இது நான் நெய்ததேயில்லை" என்று சத்தியம் கூடச் செய்துவிடும்! படிக்கட்டின் ஒவ்வொரு திருப்பத்திலும் சுவரில் பல பொந்துகள் இருந்தன. அவைகளில் ஒரு காலத்தில் செடிகள் வைக்கப்பட்டிருந்திருக்கலாம். அப்படியிருப்பின் அவை அந்த அறையிலுள்ள கெட்ட காற்றினால் நசித்துப்போயிருக்கும். ஒரு வேளை அப்பொந்துகளில் மகான்களின் உருவச் சிலைகள் வைத்திருந்திருக்கவும் கூடும். அப்படி யிருப்பின் குட்டிச் சாத்தான்களும், பிசாசுகளும் பாதாளத்தில் உள்ள தங்களின் புனிதமற்ற குழிகளுக்கு அச்சிலைகளை இருட்

டோடு இருட்டாக இழுத்துச் சென்றிருக்குமோ என நாம் சுலபத்தில் முடிவுக்குவரலாம்.

"இதுதான் இந்த அறை" என்று வீட்டுக்காரி ஒருவிதமான குரலில் சொன்னுள்

"இது சௌகரியமான அறை. இது அடிக்கடி காலியாக இருப்பதில்லே. மிக நல்ல மனிதர்கள் சிலர் கடந்த கோடை காலத்தில் தங்கி இருந்தார்கள். அவர்களால் ஒரு தொந்தரவும் இல்லே. காலி செய்யும் வரையில் வாடகையை முன்பணமாகவே கொடுத்து வந்தார்கள். அதோ கூடத்தின் கோடியில் தண்ணீர்க் குழாய் இருக்கிறது. ஸ்பிரௌல்ஸூம், மூனியும் மூன்று மாதம் இதில் தங்கி இருந்தார்கள். அவர்கள் வாதுவில்லி நாடகமொன்றில் நடித்தார்கள். மிஸ். பிரெட்டாஸ்பிரௌல்ஸ் நீங்கள்கூட அவளேப் பற்றிக் கேள்விப்பட்டிருப்பீர்களே-இதுதான் அவளது நாடக உலகப் பெயர். அதோ அந்த உடைப்பெட்டிக்கு நேர் மேலாகத்தான் அவள் தன் கல்யாண அத்தாட்சிப் பத்திரத்தைக் கண்ணுடி போட்டு மாட்டி வைத்திருந்தாள். இதோ கியாஸ் அடுப்பு இருக்கிறது. அதோ பாருங்கள் மறைவான தனிப் பகுதியும் இருக்கின்றது. யாருமே விரும்பும் அறை இது. இது எப்பொழுதுமே அதிக நாள் காலியாக் கிடந்தது கிடையாது."

"நாடகக்காரர்கள் நிறையப்பேர் இங்கே தங்கி இருக்கிருர்களோ?" என்று அவள் பேச்சில் குறுக்கிட்டுக் கேட்டான் வாலிபன்.

"அவங்க வருவாங்க போவாங்க. இங்கு தங்கு கிறவர்களில் நிறையப்பேர் நாடக மேடை சம்பந்தப் பட்டவர்கள் தான். ஆமாம், அய்யா, இது நாடகக்

காரர்களின் கேந்திரம் இல்லையா? நாடகக்காரர்கள் எங்குமே அதிக நாள் தங்கி இருக்கமாட்டார்கள். அவர்கள் வருவதாலும் போவதாலும் நிறையப் பணம் கிடைக்கிறது.''

ஒரு வார வாடகையை முன்பணமாகக் கொடுத்து அந்த அறையை வாலிபன் எடுத்துக்கொள்ள நினைத்தான். மிகவும் களைத்திருப்பதால் அறையை உடனே சுவாதீனப்படுத்திக்கொள்ள வேண்டும் என்றான். பின்பு பணத்தை எண்ணிக்கொடுத்தான். துண்டு, தண்ணீர் முதற்கொண்டு அறையில் எல்லாம் தயாராக இருக்கிறது என்றாள். வீட்டுக்காரி போக முயற்சித்த போது, அவன் அந்தக் கேள்வியை—தன் நாக்கின் நுனியில் துடித்துக்கொண்டிருக்கும் அந்தக் கேள்வியை—ஆயிரத்தொன்றும் முறையாகக் கேட்டான்.

"ஓர் இளம் பெண். மிஸ் வாஸ்னர்—மிஸ் எலாய்ஸி வாஸ்னர் என்பது அவள் முழுப் பெயர். இங்கு தங்கியவர்களில் அந்தப் பெயருடையவர் யாரையாவது உங்களுக்கு நினைவிருக்கிறதா? அவள் பெரும்பாலும் நாடகத்தில் பாடிக்கொண்டிருப்பாள். நடுத்தர உயரமும்' மெலிந்த தேகமும் உடையவள். செம்பட்டையான தங்கநிறத் தலைமயிருடைய அழகான பெண். அவளது இடது புருவத்தின் அருகில் ஒரு கரிய மச்சம் இருக்கும்.''

"இல்லை. இந்தப் பெயரை நான் கேள்விப்பட்டதேயில்லை. நாடகக்காரர்கள் வழக்கம்தான் தெரியுமே. வீடு மாற்றுவதுபோல் பெயர்களையும் அடிக்கடி மாற்றிக் கொண்டுவிடுவார்கள். எத்தனையோ பேர் வர்ருங்க போருங்க. இந்தமாதிரிப் பெயரை நான் கேட்டிருப்பதாக நினைவில்லை.''



இல்லை! இல்லை!—எப்பொழுதும் இந்த இல்லைப் பதில்தானு! சென்ற ஐந்து மாதங்களாக இடைவிடாமல் கேட்கப்பட்டு வரும் இந்தக் கேள்விக்கு இடைவிடாமல் இந்த இல்லைப் பதில்தான் கிடைத்திருக்கிறது! இந்தக் கேள்வியைக் கேட்காத இடமே இல்லை. நாடக மானேஜர்கள், ஏஜண்டுகள், பள்ளிக்கூடங்கள், சங்கீதக்கோஷ்டிகள், நாடகம் பார்ப்பவர்கள், சங்கீதம் கேட்பவர்கள் இப்படியாக எல்லோரிடமும் கேட்டாகிவிட்டது. இதற்காக இரவு பகல் எவ்வளவு காலம் செலவாகியிருக்கிறது. ஆனுல் ஒருவர்கூட அந்தப் பெயரைக் கேட்டதாகக் கூறவில்லையே! தான் விரும்பிக் காதலிக்கும் அவளைக் கண்டுபிடிக்க அவன் கடும் முயற்சி செய்துவந்தான். வீட்டிலிருந்து வெளியேறிய பிறகு நீர் சூழாத இப்பெரிய நகரில்தான் அவள் எங்கோ ஓரிடத்தில் இருக்கிருள் என்று அவன் திடமாக நம்பினுன். ஆனுல், தினம் தினம் இடம் மாற்றிக் கொண்டிருக்கும் கூட்டம்நிறைந்த இந்நகரில் எங்கே என்று அவளைத் தேடுவது?

அந்த அறை, ஒரு விலைமாதின் தொழில்முறைச் சிரிப்பைப்போல், பொய்யான ஆதரவுடன் அமிதமாகவும், கபடமாகவும், முறையைக் கழிக்கச் செய்வது போன்றதுமான வரவேற்பையே அந்த வாலிப விருந்தாளிக்கு வழங்கியது.

உருக்குலைந்துபோன தட்டுமுட்டுச் சாமான்களும் வேலைப்பாடமைந்த—ஆனுல் கந்தலான உறையால் மூடப்பட்ட ஒரு சாய்மனையும், இரு நாற்காலிகளும், இரண்டு ஜன்னல்களுக்கு இடையே ஓரடி அகல நீளமான மலிவான முகம்பார்க்கும் ஒரு கண்ணுடியும்,

முலாம் பூசிய சட்டங்களோடு தொங்கிக் கொண்டிருந்த
இரு படங்களும், மூலை ஒன்றில் கிடந்த இரும்புக் கட்டி
லும்—அந்த அறையில் வசிக்க வருபவர்களின்
‘ சௌகரியத்திற்காக !’ இடம் பெற்றிருந்தன.

அந்த ‘ வாலிபன் ’ நாற்காலியில் சாய்ந்து சவம்
போலக் கிடந்தான். பேபல் கோபுரத்தில் உள்ள
அறையைப்போல இந்த அறை ஒருவித இரைச்ச
லுடன்—அதற்கு முன் வந்து அங்கு தங்கியிருந்த பல
தரப்பட்ட மக்களைப் பற்றியும் அவனிடம் சொல்ல
முயற்சித்தது.

கடல்நீர் சூழ்ந்த நிலப்பரப்பைப்போல, அந்த
அறையில் விரிக்கப்பட்டிருந்த பாயின் மத்தியில் ஒரு
கம்பளம் அமைக்கப்பட்டிருந்தது. அதன் பூச்சித்திர
வேலை கண்ணைப் பறிக்கும் வர்ணத்திலிருந்தது. வழ
வழப்பான காகிதங்கள் ஒட்டிய சுவர்களில் தொங்கிய—
கியூஜிநாட் காதலர்கள், முதல் சண்டை, மணவிருந்து,
ஊற்றில் ரதிதேவி—ஆகிய வழக்கமான படங்கள்
சொந்த வீடில்லாதவர்களை வீட்டுக்கு வீடு பின்தொடர்
வதேபோல் தோன்றியது. கணப்படுப்பைச் சுற்றி
யுள்ள திரையின் தோற்றம், அமேசான் பகுதி கிராமீய
நடனம் ஆடுவோரின் இடைக் கச்சைகளைப்போல
இலை மறைவு, காய் மறைவாக கண்யமற்ற வகையில்
காட்சியளித்தது. ஜன சஞ்சாரமற்ற இடத்தில் பிய்ந்து
பிய்ந்து அனாதரவாக ஒதுக்கப்பட்ட ஒருவன் அதிர்ஷ்ட
வசமாக அந்த இடத்திற்கு வந்த கப்பலில் ஏறி வேறொரு
துறைமுகத்திற்குச் செல்லும்பொழுது, முன்பு தன்
உயிரைக் காக்க உதவிய உடைந்த மரக்கலத்தை அலட்
சியமாக விட்டுச் செல்லுவதைப்போல், அந்த அறையில்



குடியிருந்துவிட்டு, வேறு நல்ல அறைக்குச் சென்ற
குடித்தனக்காரார்களால் விட்டுச் செல்லப்பட்ட—நடிகை
களின் படங்கள், ஒரு மருந்துப் பாட்டில், சில உதிரிச்
சீட்டுகள், பூச்செண்டு சொருகும் உடைந்த கண்ணாடிப்
பாண்டம் இவை அறையில் இருந்தன.

மறை மொழியின் பொருள் சிறிது சிறிதாக விளங்
குவதேபோல், அந்த அறையில் முன்பு வசித்துவிட்டுச்
சென்றவர்கள் விட்டுச் சென்ற சில குறிகளிலிருந்து
அவர்களது குணவிசேஷங்களை ஊகிப்பது சாத்திய
மாயிற்று. உடைகள் அணியும் பகுதியில் இருந்த கம்
பளத்தில் செய்யப்பட்ட பூ வேலைப்பாடானது, அழகிய
பெண்ணும் அந்த அறையில் வசித்திருக்கிறாள்
என்பதை விளக்கியது. சுவரில் உள்ள சிறிய விரல்
குறிகள் கதிரவனைக் காணவும் நல்ல காற்றை நுகர
வும் முயன்ற சிறுவர்களைப் பற்றிக் கூறிற்று. வெடி
குண்டுச் சிதறல்போல் சுவரில் படுந்திருந்த மற்றொரு
கறை—திரவம் நிறைந்த ஒரு கண்ணாடி டம்ளரோ,
பாட்டிலோ எறியப்பட்டதைப் பறைசாற்றியது. முகம்
பார்க்கும் கண்ணாடியின்மேல் “மேரீ” என்ற பெயர்
தெளிவற்ற முறையில் வைரத்தால் கிறுக்கப்பட்டிருந்
தது. அந்த அறையில் வாழ்ந்தவர்கள்—அதன்
பொறுக்க முடியாத குளிரின் காரணமாக ஏற்பட்ட கடுங்
கோபத்தைப் பலவிதத்தில் வெளியிட்டிருந்தது தெரிந்
தது. தட்டுமுட்டுச் சாமான்கள் மீதெல்லாம் செதுக்
கல்களும், கீறல்களும் விகாரமாகக் காட்சியளித்தன.
இழுப்பு வியாதியால் அசந்து கிடந்த ஒரு பயங்கர மிரு
கத்தை வெட்டிப் போட்டாற்போல், ஸ்பிரிங்குகள்
வெளியே பிதுக்கிக்கொண்டு சாய்மணை அலங்கோல

மாகக் காட்சியளித்தது. பளிங்குக் கல்லின் ஒரு சிறு பகுதி பிளந்து எடுக்கப்பட்டிருந்தது. அடித்தளத்தில் பாவப்பட்டிருந்த ஒவ்வொரு பலகையும், மானிடர்கள் தனித்தனியே புலம்புவதுபோல் பல விதமாகக் கிரீச்சிட்டன. அந்த அறையில் காணப்பட்ட இவ்வளவு சேதமும் பழுதும்—கொஞ்ச காலத்திற்காவது அந்த அறையை தங்களுடைய வீடு என்று சொல்லிக்கொண்டிருந்தவர்களால் ஏற்படுத்தப்பட்டிருக்கும் என்று நம்பவே முடியவில்லை ; ஒருவேளை சௌகரியக் குறைவினால் ஏற்பட்ட கோபம் காரணமாக வீட்டுக்காரர்கள் மீது அவர்கள் இந்தவிதமாகப் பழிதீர்த்துக்கொள்ள முற்பட்டிருக்கவும் கூடும். குடிசை ஆனாலும் அது நமக்குச் சொந்தமானதாக இருந்தால் அதைக் கூட்டுவோம், அலங்கரிப்போம், எல்லாம் செய்வோம் அல்லவா ?

நாற்காலியில் சாய்ந்திருந்த இளைஞனின் மனத்தில் மெதுவாக இதுமாதிரியான சிந்தனைகள் ஊடுருவிக்கொண்டிருந்தன. அப்போது, மற்ற குடியிருப்பு அறைகளிலிருந்து எழுந்த ஓசைகளும், வாசனைகளும் அந்த அறைக்குள் நுழைந்தன. அங்கே ஓர் அறையிலிருந்து கலகலவென்னும் வெண்கலச் சிரிப்பொலி விட்டு விட்டுக் கேட்டது. இன்னொன்றிலிருந்து தன்னைத் தானே யாரோ வைது கொள்வதும், வேறொரு பக்கமிருந்து தாயக் கட்டை உருட்டும் சப்தமும், மற்றும் தாலாட்டுப் பாட்டும், யாரோ மெதுவாக அழும் குரலும் கேட்டன. அவனுக்குத் தலைக்கு மேலே உள்ள அறையில் உற்சாகமாக மீட்டப்பட்ட பேஞ்சோ வாத்திய ஒலியும் கேட்டது. எங்கோ படார் படார் என்று கதவு



மோதும் சப்தமும், பின்புறத்து மதில் சுவரின்மேல் பரிதாபமாகக் கத்தும் பூனையின் கூக்குரலும், சிறிது நேரத்திற்கொரு முறை ஓடும் ரயில்களின் பேரிரைச்சலும் கேட்டுக்கொண்டிருந்தன. அந்த அறையின் காற்றை அவன் சுவாசித்தான். அது பாதாள அறையிலிருந்து கிளம்பும் நாற்றத்தைப் போல, மண்ணோடு சேர்ந்து மக்கிப் பூஞ்சைக் காளான் பூத்து, புளிப்பேறிய வாடை கலந்த குளிர்ந்த காற்றாக இருந்தது.

சிறிது நேரத்திற்குப் பிறகு திடீரென்று, அந்த அறை முழுவதும் மருக்கொழுந்து வாடை நிரம்பியது. அந்த வாசனைக் காற்று, சுழன்று அடித்து உள்ளே தள்ளப்பட்ட வேகத்தைப் பார்த்தால், மருக்கொழுந்து தலையில் வைத்து யாரோ அறைக்குள் வந்திருப்பது மாதிரி தோன்றியது. உடனே அந்த வாலிபன் "என்ன, அன்பே ?" என்று உரக்கக் கேட்டுவிட்டு, அவனை யாரோ கூப்பிட்டது போல், குதித்தெழுந்து, அறையில் சுற்றுமுற்றும் பார்த்தான். அந்த வாசனை அவனைச் சுற்றிச் சூழ்ந்துகொண்டு ஆலிங்கனம் செய்தது. அதைக் கட்டித் தழுவ கைகளை அகல விரித்தான். அந்நேரத்தில் அவனுடைய புலன்களெல்லாம் ஒடுங்கி, ஒன்றும் புரியாமல் குழம்பியிருந்தன. அந்தச் சுகந்த வாசனை தன்னை எப்படி அழைத்திருக்கக் கூடும் ? ஒருவேளை அது ஓர் ஒலியாகத்தான் இருக்க வேண்டும். ஆனால் அவனைத் தொட்ட மாதிரியும் தழுவிய மாதிரியும் இருந்ததே ? வெறும் ஒலி எப்படி அவனைத் தொட்டுத் தழுவக் கூடும் ?

"அவள் இந்த அறையில் நிச்சயமாக இருந்திருக்கிறாள்" என்று அவன் கூவிவிட்டு, அதற்கான

அடையாளம் ஏதாவது ஒன்றைக் கண்டுபிடிக்கத் துள்ளி எழுந்தான். ஏனென்ருல், அவளுக்குச் சொந்தமான எந்த ஒரு சிறு பொருளேயும் அல்லது அவள் சிறிதே தொட்டிருந்த எந்த ஒரு பொருளேயும் தன்ஞல் கண்டுபிடித்துவிட முடியும் என்று அவனுக் குத் தோன்றியது. இந்த மருக்கொழுந்து வாசனே அவள் எப்பொழுதும் விரும்பி உபயோகித்த மருக் கொழுந்து வாசனேயே—அது எங்கிருந்து வந்தது ?

அந்த அறையில் சாமான்கள் தாறுமாருக வைக்கப் பட்டிருந்தன. அலமாரிப் பெட்டியின்மேல் அரை டஜன் கொண்டை ஊசிகள் சிதறிக் கிடந்தன. ஆம் ; பெண் இனத்துக்குப் பொதுவான சொத்து அல்லவா அவை ? அவற்றின் மூலம் அவை யாருடையவை என்று கண்டுபிடிப்பது அவ்வளவு சாத்தியமில்லேயாத லால், அவற்றைத் தள்ளி விட்டான். அலமாரியின் டிரா யர்களேச் சோதித்துப் பார்த்ததில், கிழிந்துபோன சிறிய கைக்குட்டை ஒன்றும் அகப்பட்டது. அதை முகத்தரு கில் கொண்டு போனுன். மருக்கொழுந்து மணத்திற் குப் பதில் வேறு வாசனே வந்ததால் அதைத் தரையில் எறிந்தான். மற்ருெரு டிராயரில் பலவிதப் பொத்தான் களும், நாடக நிகழ்ச்சி நிரல் ஒன்றும், அடமானக் கடைக்காரன் எழுதிய ஒரு கடிதமும், தவறிவிடப்பட்ட இரு 'இஞ்சி முறப்பா' துண்டுகளும், கனவின் தன்மை பற்றி விளக்கும் புத்தகம் ஒன்றும் இருந்தன. கடைசி டிராயரில், பெண்கள் ஐடைமீது அணியும் கறுப்பு வலேத் துணி ஒன்று இருந்தது. அது அவனே, 'திக்' என்று திகைக்குமாறு நிறுத்தியது. நெருப்புக்கும் பனிக் கட்டிக்கும் இடையில் அவன் தத்தளித்தான். ஆனுல்,



இது மாதிரி வலேத் துணியிலிருந்தும் அவன் எதையும் திட்டமாகக் கண்டுபிடித்துவிட முடியாதே ? இதுவும் எல்லாப் பெண்களும் சாதாரணமாக உபயோகிக்கும் பொருள்தானே ?

ஒரு மோப்ப நாயைப்போல அவன் அறைக்குள் குறுக்கும் நெடுக்குமாகத் திரிந்தான். சுவர்களேத் தடவிப் பார்த்தான். மூலே முடுக்குகளேச் சோதித்தான். கீழே விரிக்கப்பட்டிருந்த கம்பளியில் மேடிட்ட இடங் களேப் பரிசீலனே செய்தான். புகைக்கூண்டு, மேஜை கள், திரைச் சீலேகள், ஒரு மூலேயிலிருந்த சாராயப் புட்டி கள் வைக்கும் காலிப் பெட்டி இவைகள் அத்தனேயையும் சோதனே செய்தான். ஒரு சிறு துப்பாவது கிடைக்காதா என்ற எண்ணம்தான் அவனுக்கு. அவள் அவனுக்குப் பக்கத்திலும், சுற்றிலும், முன்னுலும், உள்ளுக்குள்ளும், தலேக்கு மேலேயும், அவனே அணேத்துக்கொண்டும், அவனிடம் கொஞ்சிக்கொண்டும் இருந்ததை அவன் நுண் புலன்கள் உணரத் தொடங்கிய போது அதை அவனது வெளிப் புலன்களும் உணரத் தோடங்கி யிருக்கிறது என்பதையும், அதனுல் ஏற்பட்ட விபரீத விளேவுகளே இவை என்பதையும் அவனுல் உணர்ந்து கொள்ள முடியவில்லே. அவன் மறுபடியும், ''வா அன்பே !'' என்று உரத்த குரலில் அழைத்தான் ; வெறிக்கப் பார்த்தான். ஆனுல் அவளது உரு வையோ, நிறத்தையோ, அவளேயோ அவனுல் காண முடியவில்லே. மருக்கொழுந்து வாடையில் கைகளே அகல விரித்தான். ஐயோ, கடவுளே ! எங்கிருந்து வருகிறது இந்த மருக்கொழுந்து வாசனே ! அதோ, அவள் கூப்பிடுகிருளே ! எப்போது இருந்து இந்த

வாசனைக்குப் பேசுகின்ற வாய் ஏற்பட்டது? இவ்வாறு அவன் குழம்பித் தவித்துக்கொண்டிருந்தான்.

சந்து பொந்து, மூலை முடுக்குகளையெல்லாம் நோண்டிப் பார்த்தான். கார்க்குகளும், சிகரெட் துண்டுகளும்தான் அகப்பட்டன. அவனுக்கு ஒரே வெறுப்பு! தரையில் விரித்திருந்த பாய்க்கு அடியில் பாதி புகைத்த பழைய சுருட்டு அவனுக்கு அகப்பட்டது. வந்த ஆத்திரத்தையும் கோபத்தையும் அதன் மீது காட்டினான். காலடியில் போட்டு மிதித்து நசுக்கினான். அறை பூராவையும் அவன் சல்லடையால் சலிப்பது போல் ஆராய்ந்து பார்த்துவிட்டான். முன்பு குடியிருந்தவர்களால் விடப்பட்ட ஏதேதோ அவசியமில்லாத துண்டுக் கடிதங்கள் கிடைத்தன. ஆனால், அவன் யாரைத் தேடுகிறானோ அவள்—முன்பு இந்த அறையில் தங்கி இருந்திருக்க வேண்டிய அவள் ஆவி இந்த அறையில் சுற்றித் திரிவதாகத் தோன்றுகிறதோ—அந்த அவளைப் பற்றிய எந்த அறிகுறியும் அவனுக்குத் தென்படவில்லை!

திடீரென்று அவனுக்கு அந்த வீட்டுக்காரியின் நினைப்பு வந்தது.

உடனே அவன் அந்த ஆவி நடமாடும் அறையிலிருந்து தடதடவென்று கீழே இறங்கிச்சென்று, குறுக்கு வழியாக வெளிச்சம் தெரிந்த ஒரு கதவைத் தட்டினான். அதிர்ச்சியையும், உணர்ச்சிகளையும் எவ்வளவு மறைத்துக்கொள்ள முடியுமோ, அவ்வளவுக்கு மறைத்துக்கொண்டான். வீட்டுக்காரி வெளியே வந்தாள்.

“அம்மா, நான் வருவதற்கு முன்னால் யார் அந்த அறையில் குடி இருந்தது என்று சொல்வீர்களா?” என்று அவன் வீட்டுக்காரியிடம் பணிவாகக் கேட்டான்.



“ஆமாம் ஐயா, உங்களுக்கு மறுபடியும் சொல்கிறேன் ஸ்பிரௌல்ஸ்—ம் மூனியும்தான் இருந்தார்கள். நான்தான் முன்பே சொன்னேனே. குமாரி பிரெட்டா ஸ்பிரௌல்ஸ் என்பது அவளுடைய நாடக உலகப் பெயர். ஆனால் திருமதி மூனிதான் அவள் உண்மைப் பெயர். என் வீடு ஒழுக்கமிக்க குடித்தனக்காரர்கள் வாழும் இடம் என்பதற்குப் பேர் போனது. அவள் தன் கல்யாண அத்தாட்சிப் பத்திரத்தைக் கண்ணாடி போட்டு, மேலே ஆணியிலே......!”

“அதுசரி எந்த மாதிரிப் பெண் குமாரி ஸ்பிரௌல்ஸ், அதாவது அவள் பார்வைக்கு எப்படி இருப்பாள் என்றுதான் கேட்கிறேன்?”

“ஏன் கறுப்பு மயிரு, குள்ளம், தடிப்பு, அப்புறம் முகத்திலே கோமாளித்தனம் நிறைஞ்சு இருக்கும். அவங்க ஒரு வாரத்துக்கு முன்னேதான் போனாங்க—செவ்வாய்க்கிழமை யன்று.”

“போகட்டும். அவர்களுக்கு முன்னால் யார் இருந்தார்கள்.

“ஏன், சாராய வியாபாரத்தில் சம்பந்தப்பட்ட ஒரு ஆளு இருந்தாரு. பாவி மனுஷன், எனக்கு ஒரு வார வாடகை தராமலே போயிட்டாரு. அவருக்கு முன்னாலே திருமதி கிரௌடர், தன் இரண்டு குழந்தைகளோடு நாலு மாதம் இருந்தாள். அவர்களுக்கு முன்போ திருவாளர் டாய்லி என்ற ஒரு கிழவர் தங்கி இருந்தார். அவருடைய பிள்ளைகளே அவருக்காக வாடகை செலுத்தி வந்தாங்க. அவரு ஆறு மாசம்

இருந்தார். இவ்வளவும் கடந்த ஒரு வருஷத்தில்; ஆனால் அதுக்கு முந்தின விஷயங்கள் ஞாபகத்தில் இல்லே ஐயா.''

வாலிபன் அவளுக்கு நன்றி சொல்லி விட்டுத் தன் அறைக்குத் திரும்பினான். அறை நிசப்தமாக இருந்தது. முன்பிருந்த ஜீவன் அங்கே இப்பொழுது இல்லே. மருக்கொழுந்து மணம் போய்விட்டது. அதற்குப் பதில் சாக்கடை வாடையும், உளுத்துப் போன மர வாடையுமே வீசியது!

அவனது ஆவல் அவனது நம்பிக்கையை இழக்கச் செய்தது. மஞ்சளாக,ஓசையுடன் எரிந்துகொண்டிருந்த கியாஸ் விளக்கைப் பார்த்துக்கொண்டே உட்கார்ந்திருந்தான். பிறகு படுக்கை அருகில் சென்று விரிப்புத் துணியைத் துண்டு துண்டாகக் கிழித்தான். கதவு, ஜன்னல் இவைகளிலுள்ள சந்து பொந்துகளிளெல்லாம் அவற்றைத் திணித்துக் கத்தி நுனியால் குத்திக் குத்தி அடைத்தான். எல்லாம் பாதுகாப்புடன் இருக்கிறது என்று கண்டவுடன் கியாஸ் விளக்கை மேலும் பிரகாசமாய் எரிய வைத்துவிட்டுப் படுக்கையில் சாய்ந்தான்.

அன்று இரவு திருமதி மெக்கூல் பீர் கொண்டு போகும் முறை. அதை அவள் எடுத்துக்கொண்டு வீட்டுக்கார அம்மாள் திருமதி பர்டி இருந்த பாதாள அறைக்குச் சென்று அவள் எதிரே அமர்ந்தாள்.

''உனக்குத் தெரியுமா? மூன்ருவது மாடியில் உள்ள அந்தப் பின் அறையை இன்று சாயங்காலம் வாடகைக்கு விட்டு விட்டேன்'' என்று வீட்டுக்காரி சொன்ஞள். அவள் உதடுகளில் பீர் நுரை வட்டமாகப் படிந்திருந்தது. ''ஓர் இளவட்டம் எடுத்திருக்கிருன். அவன் தூங்கச் சென்று இரண்டு மணி நேரம் இருக்கும்.''



'' ஊம்-பர்டி அம்மா ?'' என்று பாராட்டுதலோடு தொடர்ந்தாள் திருமதி மெக்கூல். ''எனக்கு ஆச்சரியமாத்தான் இருக்கு. அப்படிப்பட்ட அறையை எப்படி அம்மா வாடகைக்கு விட்டீங்க. ஆமா, அந்த ஆளுக்குச் சொன்னீங்களா அந்த விஷயத்தை?'' அவள் கடைசி வார்த்தைகளைக் குசுகுசு என்று முடித்தாள். அவள் பேச்சில் மர்மம் நிறைந்திருந்தது.

'' வாடகைக்கு விடற அறையை சும்மா பூட்டி வச்சிருக்க முடியுமா என்ன? அவங்கிட்ட நான் அதையெல்லாம் சொல்ல வில்லே'' என்று திருமதி பர்டி மிக நயமாகக் கூறினுள்.

'' ஆமாம், அம்மா; நீங்க செய்ததும் சரிதான். வாடகைக்கு விட்டுத்தானே நாம் பிழைக்கணும். உங்க கிட்டே உண்மையிலே வியாபார தந்திரம் நிறைய இருக்குதம்மா. படுத்த படுக்கையிலேயே தற்கொலை நடந்திடிச்சுன்னு சொல்லிட்டா அநேகமாய் யாருமே அந்த அறைக்கு குடிவரமாட்டாங்க, இல்லேயா.''

'' ஆமா, நீ சொன்னமாதிரி நம்ம பிழைப்பு நடக்கணுமே'' என்ருள் திருமதி பர்டி.

'' ஆமாம்மா, பின்னே இல்லேயா, அதுசரி; இன்னிக்கிச் சரியா ஒரு வாரம் ஆகுது—நாம் இரண்டு பேருமா மூணும் மாடியின் அந்த அறையைச் சுத்தம் செய்து. பாவம், அந்தப்பாவி விளக்கு எரியும் கியாஸிலே உயிரை மாய்ச்சுக்கிட்டாளே! அவ தப்பி வந்துட்ட காலேஜுப் பொண்ணு மாதிரி இருந்தாள். அழகான சின்ன முகம்—இல்லேயாம்மா''

"முகம் சரி—நீ சொல்ற மாதிரி அவளை அழகியின்னு சொல்லலாம்—ஆனால் அவள் இடது புருவத்துக்குப் பக்கத்திலே ஒரு பெரிய மச்சம் இருந்ததே அது தான் அவள் அழகைக் கெடுத்தது. அது போகட்டும் மெக்கூல் நீ இன்னும் கொஞ்சம் பீர் குடி" என்ருள் திருமதி பர்டி அலட்சியமாக.

# 2. ஷேக்ஸ்பியர் அவதாரம்

## மார்த்தா ஃபோலி

[மார்த்தா ஃபோலி போஸ்ட்டனில் பிறந்தவர். அங்கேயே பெண்கள் இலத்தீன் மொழிப் பள்ளியில் தொடக்கக் கல்வி கற்றுப் பின்னர் போஸ்ட்டன் பல்கலைக் கழகத்தில் மேற்படிப்புப் படித்தார். முதன் முதலில் பத்திரிகையில் நிருபராகச் சேர்ந்து, தமது எழுத்துப் பணியைத் தொடங்கிய மார்த்தா ஃபோலி, சான்பிரான்சிஸ்கோ, லாஸ்ஏஞ்சல்ஸ், நியூயார்க் ஆகிய நகரங்களில் உள்ள பத்திரிகைகளில் வேலை பார்த்துவிட்டு 1926-ஆம் ஆண்டில் ஐரோப்பாவிற்குச் சென்றார். அங்கே, நியூயார்க் ஹெரால்டு பத்திரிகையின் பாரிஸ் கிளைக் காரியாலயத்தில் வேலை பார்த்தார். பின்னர் வெளிநாட்டு நிருபர் என்ற முறையில் பால்கன் தீவுகளுக்கு அனுப்பப்பட்டார். பின்னர், 1931-ஆம் ஆண்டில் வீயன்னாவில் பத்திரிகையாளரும் சிறுகதை எழுத்தாளருமான விட்பர்னட் என்பாரோடு சேர்ந்து, (ஸ்டோரி) 'கதை' என்ற ஒரு சஞ்சிகையைத் தொடங்கினார்.

1942-இல் "சிறந்த அமெரிக்கச் சிறுகதைகள்" என்ற ஆண்டு பிரசுரத்தைப் பதிப்பிப்பதில் ஈடுபட்டிருந்தார். குமாரி மார்த்த ஃபோலி கொலம்பியா பல்கலைக் கழகம், கொலரெடோ பல்கலைக்கழகம், நியூயார்க் பல்கலைக் கழகம் ஆகியவைகளில் சிறுகதைகளைப்

பற்றிய சொற்பொழிவுகளை நிகழ்த்தி இருக்கிருர். ஆண்டு தோறும் கல்லூரிகளில் நடைபெறும் எழுத்துப் போட்டி களிலும் நடுவரென்ற முறையில் உதவி புரிந்திருக்கிருர். ''ஷேக்ஸ்பியர் அவதாரம்'' என்ற இச் சிறுகதை ஒரு பள்ளிக்கூட மாணவியைப் பற்றியது. அந்த மாணவியை அவளுடைய ஆங்கில ஆசிரியை ''உன்னிடம் எழுத்துலகில் பிரகாசிக்கக் கூடிய திறமை இருக்கிறது'' என்று ஊக்குவிக்கிருள். இளம் உள்ளங்களில் எழுகின்ற உணர்ச்சிகளையும், கனவுகளையும் இந்தக் கதை படம் பிடித்துக் காட்டுகிறது.]

* * *

வகுப்பு அறை காலியாக இருந்தது என்றே சொல்லலாம். மிஸ் காக்ஸ் மட்டுமே அங்கு மேஜை யருகில் உட்கார்ந்திருந்தார். எலிசபெத், முன்பு தன் உடல்நலம் இன்மை காரணமாக எழுதாமல் விட் டிருந்த கட்டுரையை எழுதி எடுத்துக்கொண்டு மிஸ் காக்ஸிடம் போனுள்.

'' மாறுகின்ற சூழ்நிலையில் மக்கள் '' என்பது அக் கட்டுரையின் தலைப்பு. இதற்கு, அமெரிக்காவில் குடி யேறுவதற்காகப் போஸ்டன் துறைமுகத்தில் வந்து இறங்கியவர்களை எலிஸபெத் தன் கதாபாத்திரங்களாக தேர்ந்தெடுத்திருந்தாள். 'சிவப்பு, நீல வண்ணங் களில் ஆடைகள் அணிந்த கரிய கண்களை உடைய மாதரும், காது வளையங்கள் போட்டிருந்த பழுப்பு நிற முடைய ஆடவர்களும், தம் எழில்மிகுந்த மத்தியதரைக் கடல் பிரதேசச் செல்வச் சிறப்புடன், ஆடி அசைந்து கொண்டிருந்த படகுகளிலிருந்து கரை சேர்ந்து, போஸ்டன் நகர் வீதிகளில் நுழைந்து மறைந்தனர்



என்று எலிஸபெத் எழுதியபோது அவள் உண்மையி லேயே உணர்ச்சி வசப்பட்டுவிட்டாள்.

முன்பு ஒரு நாள் அவள் சூரிய அஸ்தமனக் காட்சியை வர்ணித்து எழுதினுள். அதற்குப் பின் எழுதிய எல்லாவற்றையும்விட அவளுக்கு மிகத் திருப்தியளித்தது இதுதான். மறையவிருந்த கதிரவ னின் கிரணங்கள் ஆற்றுநீரின் மேற்பரப்பை வெள்ளித்தகடு போலவும், அதன் கரையில் பரவிக் கிடந்த, செவ்வந்திக்கற்களை இரத்தினம் போலவும், ரோஜா மலர் போலவும் பிரகாசிக்கச் செய்தது என்று அக் கட்டுரையில் எழுதியிருந்தாள். வெள்ளித்தகடு ஆகா, என்ன அழகான கற்பனை. இந்தக் கட்டுரையிலும் அதைப்போலவே, ''இரவின் இருளாகிய அவள் கூந்த லில் இரத்தச் சிவப்புக் கைக்குட்டை'' என்று எழுதி யிருக்கிருள். அடடா, என்ன வார்த்தை ஜாலம்!

மிஸ் காக்ஸ் இக்கட்டுரையை வாசித்தார். அவரு டைய விரல்களுக்கு இடையே சிவப்புப் பென்சில் சுழன்றது.

பள்ளிக் கூடத்திலிருந்த எல்லா ஆசிரியர்களையும் விட மிஸ் காக்ஸ் மிகவும் கண்டிப்பானவர். பௌதிக ஆசிரியர் திரு. கார்பென்டர், கணக்கு ஆசிரியர் திரு. காட்டெல் இவர்கள் இருவர் மட்டுமே அப்பள்ளி ஆசிரியர்களில் ஆண்கள். அவர்களையும்விட மிஸ் காக்ஸ் கண்டிப்பாக இருந்தார். ஆனுல், அந்தக் கண்டிப்பில்தான் எத்தனை கவர்ச்சி! எழுத உட்கார்ந்த வேளையில் இரண்டு வார்த்தைகள் மனதில் திடீர் என்று துள்ளிக் குதித்தோடி வந்து மிக அழகான சொற் கோவையை ஏற்படுத்தும்போது என்ன உணர்ச்சி

ஏற்படுமோ அதே உணர்ச்சி, எலிசபெத்திற்கு மிஸ் காக்ஸைப் பற்றி நினைத்தபோது ஏற்பட்டது.

மிஸ் காக்ஸ் ஆங்கிலப் பாடத்திற்கு ஆசிரியையாக வந்திருப்பது எலிசபெத்திற்கு மிக்க மகிழ்ச்சி. மிஸ் ஃபாஸ்டர் போய்விட்டதில் பெரிய திருப்தி. சென்ற ஆண்டில் 'ஏழை ரிச்சார்டின் பஞ்சாங்கம்' என்ற புத்தகத்தில் சில சொற்களைக் குறிப்பிட்டு, அவை அந்தப் புத்தகத்தில் மொத்தம் எத்தனை எத்தனை தடவை வந்திருக்கின்றன என்று எண்ணச் சொன்ன வர்—மிஸ் ஃபாஸ்டர். மாணவர்கள் ஒரு வார்த்தை விடாமல் அப் புத்தகம் முழுவதையும் படித்தார்களா, இல்லையா என்று தெரிந்து கொள்ளுவதற்காகவே அவர் இப்படிச் செய்தார். அவர் பொறுக்கிக் கொடுத்த சொற்களாவது கவர்ச்சியாய் இருந்தனவா? பெஞ்சமின் பிராங்லின் படத்தைப்போல் இலட்சணம் இல்லாமல் அவை இருந்தன. ஆனால் அப்படியில்லாமல், மிஸ் காக்ஸ் மாணவர்களின் மனத்தில் ஒவ்வொரு சொல்லும் நன்கு பதியும்படி சொல்லித் தருவார். ''டேல் ஆப் டு சிட்டீஸ் (இரு நகரங்களின் கதை)'' என்ற புத்தகத்தி லிருந்து அவர் தனது இனிய குரலில், '' நான் செய் திருப்பவை எல்லாவற்றிலும் இதுவே மிகமிக மேலான செயல்'' என்ற சிட்னி கார்ல்டனின் வாசகத்தை வாசிப் பதை கேட்க வேண்டுமே!

மிஸ் காக்ஸ் கட்டுரையின் இரண்டாம் பக்கத்தை வாசித்து முடித்தார். எதிரே நின்றிருந்த எலிசபெத்தை ஏறிட்டுப் பார்த்தார். மூக்குக்கண்ணாடி வழியாக அவரது கண்கள் பளிச்சென்று மின்னின. கண்ணே! எலிசபெத் உனக்கு நான் ஒன்று கூறப் போகிறேன்'' என்றார்.



மிஸ் காக்ஸ் 'கண்ணே' என்று சொன்ன அச்சொல் லைக் கேட்டதும் எலிசபெத் திடுக்கிட்டாள். மிஸ் காக்ஸ் தன்னை அன்பொழுகக் 'கண்ணே' என்று அழைக் கிறாரே! என்று ஆச்சரியப்பட்டாள். ''உன் உள்ளத் தில் தெய்வீக ஒளி இருக்கிறது. எழுத்துப் பணிதான் உன் வாழ்க்கைப் பணியாக இருக்க வேண்டும்'' என்றார் மிஸ் காக்ஸ்.

எலிசபெத்தின் உள்ளத்தில் ஒருவித உணர்ச்சி, தீப் பற்றிக்கொண்டு கொழுந்துவிட்டு எரிந்தது போன்றிருந்தது. மிஸ் காக்ஸ் 'கண்ணே' என்ற சொல், அவளது கட்டுரை, கரும்பலகை, மேஜை எல் லாமே சுற்றிச் சுழன்று, அந்த உள்ளத்தின் ஒளியுள் ஒன்றி மறைந்துவிட்டது!

பின்பு கட்டுரைத் தலைப்பில் மிஸ் காக்ஸ் சிவப்புப் பென்சிலால் ''ஏ'' என்று எழுதினார். எலிசபெத் ''நன்றி'' என்று கூறி, அதைப் பெற்றுக்கொண்டு வெளியே போய்விட்டாள்.

மிஸ் பெரி நடத்தும் மூன்றாம் வகுப்பு 'ஏ' பிரிவு அறைக்குள் எலிசபெத் நுழைந்து, தனது இடத்தில் உட்கார்ந்துகொண்டாள். மிஸ் பெரி அவளுக்குக் கிரேக்க மொழிப் பாடம் சொல்லித்தரும் ஆசிரியை. அதோடு வகுப்பு ஆசிரியையும்கூட. எப்படியோ மிஸ் பெரி சொல்லிக் கொடுத்த முறையில் எலிசபெத்துக்குக் கிரேக்க மொழியின் மேலேயே வெறுப்புத் தானாக ஏற்பட்டிருந்தது. கிரேக்க நாடோ அவளுக்கு மிகவும் பிடித்திருந்தது. 'ஏஜியன்' என்னும் நீலத்திரைக் கடல், ட்ராய் நகரத்தில் டிரோஜன் பெண்கள் அழுகின்ற குரல், அறிஞர்களான அரிஸ்டாடில், பிளேட்டோ, சாக்ரட்டீஸ், மற்றும் அந்நாட்டு ஆட்வர் அழகும்

அறிவும் வாய்க்கப் பெற்றவர் என்றெல்லாம் அவளது அப்பா சொல்லியிருக்கிருர். ஆனல் அவை எல்லாம் கிரேக்க மொழி வகுப்பிற்கு புறம்பானவை. மிஸ் பெரிக்கு கிரேக்கம் என்ருல் வரம்பில்லா வினைச்சொல்லும் சென போனின் முடிவில்லாத படையெடுப்பும் தான் பிடித்தம். மூன்ரும் வகுப்பு 'ஏ' பிரிவில் மிஸ் பெரி நுழைந்ததும் "மிஸ், பெரி, வரம்பற்ற வினைச்சொல் முடிவில்லாத படை எடுப்பு, செனபோன், தலை வேதனை" என்று எலிசபெத் வெறுப்புடன் தனக்குள் முணுமுணுத்துக் கொள்வது வழக்கம். ஆனல் இன்று காலையிலோ மிஸ் பெரியின்மேல் அவளுக்கு இரக்கம் தான் ஏற்பட்டது. பாவம், உள்ளத்தில் ஒளி இல்லாதவள் !

இன்று காலை முதன் முதலில் கிரேக்கப் பாடம் தான். அதைப்பற்றி அவள் கவலைப் படவேயில்லை. எழுத்துப் பணியைத் தன் வாழ்க்கைப் பணியாக ஆக்கிக் கொள்ள வேண்டும். இதுதான் அவள் சிந்தனை. இது மிஸ் பெரியால் ஒருகாலும் செய்யமுடியாத ஒன்று. கிரேக்க மொழி இலக்கணத்தில் மிஸ் பெரி இன்று "வழுவமைதிச் சொற்கள் எவை?" என்று கேள்வி கேட்டால் தன்னுடைய வாழ்க்கைப் பணியைப் பற்றி அவளிடம் தெரிவித்து விட வேண்டும்—என்று எலிசபெத் எண்ணமிட்டிருந்தாள். கிரேக்க மொழிப் பாடத்தை ஏன் வீட்டில் படித்துக்கொண்டு வரவில்லை என்பதற்கு இது தக்க சமாதானமாக இருக்கும். வேற்று நாட்டுக் கடற் கரையில் நீலமும் சிகப்புமாக ஆட்கள் வந்து இறங்குவதைப் பற்றி வர்ணிக்க வேண்டியவளுக்கு கிரேக்க மொழி இலக்கணத்தைப்

பற்றித் தெரிந்து கொள்ள வேண்டிய தலைவிதி ஏன்?

"மிஸ் மோரிஸ், 'கொடு' என்ற கிரேக்க வினைச் சொல்லின் பிரதான அம்சங்களைக் கூறு"

அந்தப் பதம் டிடோமி. ஆனால் அந்த வினைச் சொல்லின் இறந்த காலம் என்ன?

உள்ளத்தின் ஒளி! உள்ளத்தின் ஒளி!!

விடை தெரியாவிட்டால் உட்கார்ந்து விடு. ஆனால், இனிமேல் நீ வீட்டுப் பாடம் படிக்காமல் வந்தால் இந்த மாதம் நீ நிச்சயம் தேறமாட்டாய். தெரிந்ததா?"

உள்ளத்தின் ஒளி! உள்ளத்தின்!!

அடுத்த பிரிவேளை தனித் தனியாக படிக்க வேண்டியது. அந்தப் பாடத்திற்கு ஆசிரியை மிஸ். பிராட். அவளுக்கு குட மிளகாய் மாதிரி மூக்கு; தட்டையான முகம்; புன்சிரிப்பு. கீழே ஆறும் வகுப்பில் சின்னப் பெண்களுக்கு மிஸ் பிராட் ஏதோ பாடம் சொல்லிக் கொடுப்பவர். அவர் எப்போதும் எலிசபெத்தைப் பார்த்துப் புன்முறுவல் செய்வது வழக்கம். ஆனால், எலிசபெத் ஒரு தடவைகூடப் பதிலுக்குப் புன்முறுவல் செய்ததில்லை. அவர் சிரிப்புக்கு அர்த்தமே இல்லை என்பது எலிசபெத்தின் எண்ணம்.

மிஸ் பிராட்வின் வகுப்பில் எலிசபெத் தான் கொண்டுவந்த புத்தகங்களை மேஜைக்குள் வைத்தாள். எலிசபெத் லத்தீன்கவிஞர் 'வெர்ஜில்' எழுதிய நூலை எடுத்தாள். அதில் தனக்கு மிகப் பிடித்த பகுதியைப் பிரித்து வைத்துக்கொண்டாள். நாடு நாடாக அலையும் தன் கதையை ஏனியஸ், டிடோவிடம் சொல்லும் பகுதி அது. எலிசபெத் இப்பொழுது படிக்க வேண்டிய

பாடம் அதுவல்ல. ஒரு மாதத்திக்கு முன்பே முடிந்து போன பாடம் அது. ஆனால் அதுதான் அவளுக்கு மிகப் பிடித்தமான பகுதி. ஆகவே, மீண்டும் படிக்க விரும்பினாள். அதைப் போலவே புத்தகத்தின் தொடக்கப் பகுதியும் அவளுக்குப் பிடித்திருந்தது. ஏனியஸ் பெரிய தாடியுடன் அதோ வீராவேசமாக முழங்குகிறான். அடடா! வார்த்தைகளில் என்ன அழுத்தம்! அதுபோல அவளும் ஒருநாள் அழுத்தமாக எழுதத்தான் போகிறாள். 'வெர்ஜி'லைப் போல அழுத்தமாகவும் 'சுவின்பெர்னை'ப் போல இனிமையாகவும் அவள் எழுதத்தான் போகிறாள்.

" திரும்பவும் போவேன் மாண்ட
வீரத்தாயிடம், இனிய காதல்
கரையிலாக் கடலாம் ஆங்கு "

சுவின்பெர்ன் உள்ளத்தில் ஒளி இருந்தது. கீட்ஸ்! ஷெல்லி, "உள்ளத்தின் ஒளியே! உங்களுக்கு வணக்கம்!" மேஸ்பீல்டு என்ன குறைந்தவரா? ஐந்து ஷில்லிங் கொடுத்தல்லவா இவள் அவரது கையெழுத்தை வாங்கி இருக்கிறாள்! பிரிட்டிஷ்காரர்களுக்கு உதவுவதற்காக அவள் இப்படிச் செய்யவில்லை. " பையி தெரு விதவை " என்ற நல்ல கதையை எழுதிய அந்த ஆசிரியரின் அடையாளம் தன்னிடம் இருக்க வேண்டும் என்பதற்காகத்தான்.

எலிசபெத் வெளியே பார்த்தாள். செடி கொடிகள் பச்சைப் பசேல் என்று செழுமையாக வளர்ந்திருந்தன. வசந்த காலம் வந்துவிட்டது. உள்ளத்தின் ஒளி, உள்ளத்தின் ஒளி!

"மிஸ் மோரிஸ், உனக்கு வேலை ஒன்றுமே இல்லையா ?" என்று மிஸ் பிராட், சிரித்துக்கொண்டே கேட்டார். ஐயோ, அசட்டுச் சிரிப்பு! சகிக்கவில்லையே! யாரோடு பேசுகிறோம் என்பது மிஸ் பிராட்டுக்கு தெரியுமா? பெரிய எழுத்தாளராகிப் பேரும் புகழும் பெறப் போகும் ஒரு பெண்ணல்லவா மிஸ் மோரிஸ் எலிசபெத். இது, தெரியாவிட்டால் அவர் மிஸ் காக்ஸைக் கேட்டுப் பார்க்கட்டுமே! என் உள்ளத்தில் ஒளி இருக்கிறது! ஷேக்ஸ்பியர், கீட்ஸ், தாக்கரே, பிரான்ட் போன்ற உன்னத எழுத்தாளர்களின் வரிசையில் சேர்க்கப்படப் போகிறவள் அல்லவா நான்!

கைகளால் தன் தலையைத் தாங்கியபடி எலிசபெத் தன் முன் விரிந்து கிடந்த புத்தகத்தை விழித்துப் பார்த்தாள். டிடோ என்று நினைத்து வரைந்த படம் ஒன்று இருந்தது. அப்பால், டிடோ எரிமூழ்கப் போகும் காட்சியைச் சித்திரிக்கும் படம் இருந்தது. அதற்கப்பால் ஏனியஸ் ரோம் நகரை அணுகும் படம் தென்பட்டது. அதற் அதற்கப்பால் அரும் சொற்களுக்கு அர்த்தம். அதற் கப்பாலோ புத்தகத்தின் முடிவு. பக்கம் பக்கமாகப் புரட்டினுள், எலிசபெத். படிக்கவே தோன்றவில்லை. ஜன்னல் வழியாக வெளியே உள்ள வசந்த காலக் காட்சியைப் பார்த்தாலோ மிஸ் பிராட்டிற்கு மிகக் கோபம் வந்து விடும்.

"மிஸ் பிராட் தயவு செய்து நூலகத்திற்குப் போக எனக்கு அனுமதியளிப்பீர்களா?"

"கட்டாயம் போக வேண்டுமா? எதற்காக?"

"சரித்திரப் பாடத்தில் ஏற்பட்ட ஒரு சந்தேகத்தைக் கலைக் களஞ்சியத்தைப் பார்த்துத் தெளிவு படுத்திக்கொள்ள வேண்டும்."

"சரி போய் வா."

நூலகம் பெரியது; அது மிஸ் பிராட் இருந்த வகுப்புக்கு நேர் மேல் மாடியில் இருந்தது. அங்கே அமைதி குடிகொண்டிருந்தது. அது தனித்தனிப் பகுதிகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது. ஒரு பகுதி சரித்திரம், இன்னொன்று கலைக் களஞ்சியங்கள், மற்றொன்று பல மொழிகள், இன்னொன்று விஞ்ஞானம்-இப்படிப் பல பகுதிகள் இருந்தன! கதைகளும் கவிதைகளும் உள்ள பகுதி ஒரு கோடியில் இருந்தது. அதிலிருந்து வெளியே பார்த்தால் ஆற்றோரமாகச் செல்லும் அகன்ற ஃபென்வே சாலையும், விரிந்த வானமும் தெரியும். அந்தச் சாலையின் வழியே தனியே நடந்து செல்வது எலிசபெத்துக்கு மிகவும் பிடிக்கும்.

அங்குள்ள கதைகள், கவிதைகள் எல்லாம் அவள் படித்து முடித்தவையே. ஜேன் ஆஸ்டினுடைய புத்தகங்கள் அத்தனையும், வெர்தரின் துயரம் போன்ற—தன் பாடத்திற்குச் சம்பந்தமில்லாத பல நூல்களையும் அவள் படித்து முடித்திருந்தாள். "படிப்பு நேரத்தில் இங்கு வந்து என்ன செய்து கொண்டிருக்கிறாய்?" என்று தனது ஆசிரியர் யாராவது கேட்டுவிட்டால் என்ன செய்வது என்ற அச்சம் அவளுக்கு எப்போதும் உண்டு. ஆனால் அப்படி ஒரு நாள் கூட நடந்ததில்லை. நூலக நிர்வாகியும் இவளைக் கவனிப்பது கிடையாது.

எலிசபெத், கதை கவிதைப் பகுதிக்குச் சென்று சிறிய ஏணிப் படியொன்றில் அமர்ந்தாள். வேலி ஓரம் வரிசையாக நின்ற நெடுமரங்களை நோக்கினாள். இவற்றைப் பற்றித் தான் எழுத நேர்ந்தால் எப்படி வர்ணிப்பது என்று சிந்தித்தாள். "வானுற உயர்ந்த

கறுங்காவலர்கள்...'' ஆஹா! என்ன அழகு! என்ன அழகு! இதுதான் உள்ளத்தின் தெய்வீக ஒளி எனப் படுவது!

அடுத்தபடி பண்டைய சரித்திர வரலாறு வகுப்பு. அதைப் போதிப்பவர் மிஸ் டியூடர். அவர் முகமெல்லாம் அம்மைத் தழும்பாக இருக்கும். பிறகு மிஸ்டர் காட்டல் நடத்தும் கணித பாடம். அவரது தாடி, கண்கள், நடை, உடை, பாவனை எல்லாமே சாம்பல் நிறம்தான்! அவரையும் எலிசபெத்திற்குப் பிடிக்கும்.

எழுத்துப் பணியைத் தனது வாழ்க்கைப் பணியாகக் கொண்டு செயலாற்றுங் காலத்தில் ஜீன் கிரிஸ் டோபியைப் போல உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் அற்புதமான நாவல்களை எழுதவேண்டும் என்று எலிச பெத் மனத்துக்குள் தீர்மானித்துக்கொண்டாள். அப் போது சரித்திரப் பாட வகுப்பு முடிந்ததை அறிவிக்கும் மணி அடித்தது. நாவல்கள் எழுதுவதற்காக இடை யில் செக்கோவைப் போல பரிசு பெறத் தகுதி வாய்ந்த இனிமையான சிறு கதைகளையும் எழுத வேண்டு மென்று அவள் முடிவு செய்தபோது கணித வகுப்பு முடிந்ததை அறிவிக்கும் மணி அடித்தது. "நாவல் களும் சிறு கதைகளும் மட்டுமின்றி, இடையிடையே அழகான கவிதைகளும் எழுதுவேன்" என்று அவள் தனக்குள் கூறிக்கொண்ட போது அன்றைய பள்ளிக் கூட வகுப்புக்கள் எல்லாமே முடிந்ததை அறிவிக்கும் கடைசி மணி அடித்தது.

பள்ளிக்கூடத்தை விட்டு வெளியே வரும் வழியில் எலிசபெத், மிஸ் காக்ஸின் அறைப் பக்கமாக வந்தாள். அதன் வாயிலோரமாக வந்தபோது மெல்ல நடந்தாள்.

மிஸ் காக்ஸ் தமது மேஜை மீதிருந்தவற்றை டிராயருக்
குள் எடுத்து வைத்துக் கொண்டிருந்தார். தான்
எழுதும் முதல் புத்தகத்தை மிஸ் காக்ஸுக்கு சமர்ப்
பணம் செய்ய வேண்டும். அதில் "மிஸ் எலீனர்
ஜி. காக்ஸ் அவர்களுக்கு இந்த நூலை அதன் ஆசிரியர்
நன்றியுடன் சமர்ப்பிக்கிறார்" என்று எழுதி வெளியிட
வேண்டும் என்று எண்ணிக்கொண்டாள் எலிசபெத்.

ஐலீன், ரூத் இருவரும் பள்ளியின் வாயிலில்
காத்துக்கொண்டிருந்தார்கள். ஐலீன் புகழ்பெற்ற ஒரு
கவிஞரின் ஒன்றுவிட்ட சகோதரி. அவளது தாயார்
"அனார்க்கிஸ்ட்" கட்சியைச் சேர்ந்தவள். "அனார்க்
கிஸ்ட்" கொள்கை உடையவர்களை எலிசபெத்திற்குப்
பிடிக்கும். ஜனநாயகக் கட்சி குடியரசுக் கட்சி, என்ற
கட்சிகளில் இருப்பதைவிட 'அனார்க்கிஸ்ட்' கட்சியில்
இருப்பது நல்லதாகத் தோன்றியது. அவளைவிட ஒரு
வகுப்பு மேலாகப் படிக்கும் ரூத்தின் கவிதைகள்
ஏற்கனவே ஒரு சஞ்சிகையில் வெளியாகி இரு
கின்றன. அதுவும் நான்கு முறைகள்! அவற்று
ஒன்று ஸ்டான்லி பிரெய்த்வெய்ட் தொகுத்த கவிதை
தொகுப்பில் இடம் பெற்றுள்ளது. ஆம்; அவர்கள்
மூன்று பேருமே புகழ்பெற்றுப் பெரியவர்களா
விளங்கப் போகிறவர்கள்.

"நாம் வீட்டுக்கு நடந்தே போவோம்; பஸ் பண
திற்கு ஐஸ்கிரீம் வாங்கிச் சாப்பிடுவோம்" என்று
ஐலீன்.

"சரி. ஆனால் நான் பைன்ஆப்பிள் ஜ
வாங்கப் போகிறேன்" என்றாள் ரூத்.

"நானும் நடந்தே வருகிறேன். ஆனால் எனக்

ஐஸ்கிரீம் கிய்ஸ்கிரீம் எதுவுமே வேண்டாம் நான் மிச்சப் படுத்தும் பணத்தில் மிஸ் காக்ஸுக்குப் பூ வாங்கிக் கொண்டுபோய்க் கொடுக்கப் போகிறேன்.

"மிஸ் காக்ஸிடம் உனக்கு அலாதி பிரியம்"

"பிரியம் இருக்கிறதோ, இல்லையோ இன்று காலையில் மிஸ் காக்ஸ் என்னிடம் என்ன சொன்னார் என்று உங்களுக்குத் தெரியுமா?

"என்ன சொன்னார்?"

"என்உள்ளத்திலே தெய்வீக ஒளி இருக்கிறதாம்! எழுத்துப் பணியையே என் வாழ்கைப் பணியாகக் கொள்ள வேண்டுமாம். இவ்வாறெல்லாம் சொன்னார்.

"நிஜமாகவா? ஆச்சரியமாக இருக்கிறதே! என்னைப் பற்றி அப்படி அவர் எதுவுமே சொல்லவில்லையே? என் கவிதை பிரெய்த்வெய்ட் தொகுப்பில் இடம் பெற்ற பிறகும்கூட அவர் ஒன்றுமே சொல்லவில்லையே!"

"என் வாழ்க்கையிலேயே இதுதான் இன்பமான நாள். பலப்பல நூல்களை எழுதி மிஸ் காக்ஸ் சொன்னதை நிறைவேற்றிய பிறகும்கூட இந்த நாளை நான் மறக்கவே மாட்டேன். இவ்வளவு இன்பம் எனக்கு ஏற்படும் என்று நான் துளியும் எதிர்பார்க்கவே இல்லை."

அம் மூன்று மாணவிகளும் ஆற்றங்கரை ஓரமாக அகன்ற சாலை வழியாகக் கை கோத்துக்கொண்டு

நானும் போய் டவ்னட் பணியாரமும் வாழைப் பழங்களும் வாங்குவோம். சார்லஸ் ஆற்றங்கரையில் உட்கார்ந்து அதைத் தின்போம். எலிசபெத்துக்கும் கொடுப்போம் என்ன ?

" சரி. சூரிய அஸ்தமனக் காட்சியைக் கூட நாம் அப்போது காணலாம்."

" நீ சொல்லுவது சரியில்லை; என் பணத்தை மீதம் பிடித்துவிட்டு, நீங்கள் வாங்கிக் கொடுப்பதை நான் தின்பது நியாயமாகுமா ?"

" இன்னொரு நாள் நீ வாங்கும்போது எங்களுக்கு ஏதாவது கொடுத்தால் போச்சு."

சார்லஸ் ஆறு எலிசபெத்திற்கு மிகப் பிடிக்கும், அதனால்தான் 'லாங்பெலோ' " நள்ளிரவில் நின்றேன் பாலத்தின் மீது" என்று எழுதியிருந்த கவிதை அவள் இதயத்தை வருத்தியது. அந்தப் பாட்டைப் போற்ற பல கிண்டல் பாடல்கள் சார்லஸ் ஆற்றைக் கேவலமாக்கியது அவளுக்குப் பிடிக்கவில்லை. முன்பு ஒரு முறை எலிசபெத், " ஆற்றுக்கு விடுத்த தூது" என்ற கட்டுரையை எழுதி அனுப்பினாள். நியூயார்க் போன்ற எங்கோ ஓர் இடத்திற்கு தான் சென்று இருப்பதாக அவள் கற்பனை செய்து கொண்டாள். அங்கெல்லாம் சார்லஸ் நதியின் அழகைக் காண முடியவில்லையே என்று வருந்தி அதற்கு ஒரு கடிதம் எழுதுவதுபோல் தன் கட்டுரையை அமைத்திருந்தாள். எத்தனையோ அலங்காரச் சொற்கோவைகளைப் பின்னி எழுதியிருப்பதாகத்தான் அவள் எண்ணினாள். ஆனால் "அட்லாண்டிக் மன்த்லி" என்ற பத்திரிகை ஆசிரியர் அதை ஏனோ திருப்பி அனுப்பி விட்டார்.

பெரிய பெரிய எழுத்தாளர்களுக் கெல்லாம்கூட இந்தக் கதி நேர்ந்திருக்கிறதே! ஸ்காட்லாந்து எழுத்தாளர் ஒருவர், "அழகு பெற எழுதும் திறமை வருவதற்கு அழுகை வரும் பல சந்தர்ப்பங்களைச் சமாளிக்க வேண்டும்" என்று சொற்பொழிவு செய்தது அவள் நினைவிற்கு வந்தது.

எலிசபெத்துக்குத்தான் எத்தனை துன்பம்! கணக்கு ஆசிரியரும், கிரேக்க மொழி ஆசிரியரும் அவளை என்ன பாடுபடுத்துகிறார்கள். உள்ளத்தில் தெய்வீக ஒளி உள்ள ஒரு மாணவியை இப்படியா படுத்துவது? அவள் கண்களில் நீர் ததும்பியது. இப்போது கால் வலியையும் பொருட்படுத்தாமல் ஆற்றோரமாக நடந்து போகிறாள் எலிசபெத். இது ஏதற்காக? மிஸ் காக்ஸுக்கு மலர் வாங்கிக் கொடுப்பதற்காகத்தானே? இலக்கியத்தின்மேல் தனக்கிருக்கிற அபிமானத்திற்காகவும் மிஸ் காக்ஸ்மீது உள்ள அன்பிற்காகவும் தானே அவள் இந்தத் தியாகம் செய்கிறாள்.

"நேற்றிரவு மேல்மாடியில் தனியே அமர்ந்திருந்தேன். என்னைச் சுற்றி இருள் கவிந்திருந்தது. அப்போது பிரபஞ்சத்தின் இன்னிசை எனக்குக் கேட்டது," என்று ரூத் சொன்னாள்.

"பிரபஞ்சத்தின் இன்னிசையா? அப்படி என்றால்?" எலிசபெத் கேட்டாள்.

"நட்சத்திரங்கள் தத்தம் வழியில் வளைவாகச் செல்கின்றன என்று கேள்விப்பட்டதில்லை? அதனால்தான் நான் வான நூலைப் படிக்க விரும்புவதே இல்லை. நட்சத்திரங்களைப்பற்றிக் கற்பனை செய்து பார்ப்பதுதான் எனக்குப் பிடிக்கிறதே தவிர, அவற்றைப் பற்றிய விவரங்கள் பிடிக்கவில்லை."

"நீ சொல்வது சரியல்ல. நமக்கு மிகவும் பக்கத்து லுள்ள நட்சத்திரத்திலிருந்து இப்பொழுது நமக்கு வரும் ஒளி அங்கிருந்து மூன்று ஆண்டுகளுக்கு முன்னரே புறப்பட்டதாகும் என்பதையும், அப்பொழுது நாம் என்ன செய்து கொண்டிருந்தோம் என்பதையும், இப்பொழுது இந்த ஒரு சின்ன நட்சத்திரத்திலிருந்து புறப்படும் ஒளி நம்மை வந்து அடையும்போது நாம் எப்படி இருப்போம்—ஒரு வேளை கிழவிகளாகவே ஆகி விடுவோமோ என்பதையும் நினைக்கும்போது......"

போதும் நிறுத்து! நட்சத்திரங்களைப் பற்றிய விவரங்களை நீயே வைத்துக்கொள். ஆனால் நட்சத்திரங்களைப் பற்றி என் இஷ்டப்படி கற்பனை செய்துகொள்ளும்படி விட்டுவிடு."

"ஓ, அப்படியா! அதோ பார், வானத்தில் வர்ணம் ஏறுகிறது. உயரத்தில் தெளிவாக ஒரு பச்சை. இன்னும் சிறிது நேரத்தில் ஆழ்ந்த வர்ணங்கள் தெரியும். அடே யப்பா, இந்த டவ்னட் பணியாரம் எவ்வளவு ருசி! நம் வீட்டருகில் இது மாதிரி கிடைப்பதில்லையே!

"அங்கே, எதிர்க்கரையில் விளக்கேற்றுகிறார்கள், பார்!"

அந்த ஒளியை பார்த்ததும் எலிசபெத்தின் எண்ணம் தன் உள்ளத்து ஒளியின்பால் சென்றது. ஆறு கலகலவென்று புரண்டு ஓடியது. எலிசபெத்தின் சிந்தனையும் கரைபுரண்டோடியது. ஆற்றின் வெள்ளம், வானத்தின் வண்ணம், விளக்கின் ஒளி இவற்றை எல்லாம் எழுத்தோவியமாக வடித்து, உலகத்தின் வனப்பை மக்கள் உணரும்படி செய்யவேண்டும். அவள் வர்ணனையைப் படித்தபின் சூரிய அஸ்தமனக் காட்சியைக் கண்டு

களிக்காமல் மக்கள் குனிந்த தலையுடன் தெருவில் நடமாடிக் கொண்டிருப்பார்களா ?—இப்படி யெல்லாம் எலிசபெத் எண்ணினுள்.

"இனியும் தாமதமானல் அம்மா கோபித்துக் கொள்வாள்" என்ருள் ஐலீன்.

"இன்னொரு தடவை நான் நேரஞ்சென்று வந்தால் எனக்குப் புதுச்சட்டை வாங்கித் தரமாட்டேன் என்று என் அம்மா சொல்லியிருக்கிருள் !!"

" ஆம். நாம் புறப்பட வேண்டியதுதான். ஆனல் இரவு நாம் படுக்கையில் படுத்துக்கொண்டு, இங்கே இந்த ஆறு இப்படிக் கிடப்பதையும் நட்சத்திரங்கள் மின்னுவதையும் நினைக்க நினைக்க இனிமையாக இருக்கும் அல்லவா?"

"உன் உள்ளத்தில் ஒளி இருக்கிறது என்று மிஸ் காக்ஸ சொன்னரே—அதில் தவறு இல்லை. வாழைப்பழத் தோல்களையெல்லாம் இங்கே இதற் குள்ளே போடுவோம். இப்பொழுது வசந்தகால ஊர்த் துப்புரவு வாரம் நடக்கிறது; தெரியும் அல்லவா ?"

"சரி போய் வருகிறேன்."

"போய்விட்டு வா."

" சரி. நீயும் போய்விட்டு வா."

தன்னைப் பற்றிப் பெருமையாக நினைத்தவாறே எலிசபெத் வீட்டை நோக்கி நடந்தாள். ஒரு வெள்ளித் தட்டைப்போல் வானில் நிலாப் புறப்பட்டது. 'இதே நிலவைத்தான் ஷெல்லி, ஷேக்ஸ்பியர், ஸ்பென்ஸர், ஏன் இவர்களுக்கு முன்பு சாசர் முதலிய வர்களெல்லாம் கண்குளிரக் கண்டுகளித்து, வர்ணித்

திருக்கிருர்கள். இப்பொழுது அதையே என் கண்களும் காண்கின்றன.

"அம்மா, என் உள்ளத்தில் ஒளி இருக்கிறதாம்! மிஸ் காக்ஸ் சொல்கிருர். எதிர்காலத்தில் நான் ஒரு பெரிய நாவலாசிரியை ஆகப் போகிறேனும்!

"அப்படியா!" அதிருக்கட்டும் பேனு நிப்பை உடுப்பிலே துடைக்கக் கூடாது என்று இன்றைக்கு மறக்காமல் இருந்தாயா?"

"மறக்காமல் இருந்தால் நான் ஏன் அம்மா துடைக்கிறேன்? அம்மா நீ மிஸ் காக்ஸ் என்ன சொன்ஞர் என்பதைச் சரியாகவே கேட்கவில்லை."

"கேட்காமல் என்னவாம்? உன் உள்ளத்தில் ஒளி இருக்கிறது என்று அவர் கூறிஞர். அதாவது இந்த மாதமும் உன் 'வளர்ச்சி அறிவிப்பு'க் கார்டில் ஆங்கிலப் பாடத்திற்காக உனக்கு 'ஏ' போட்டு அனுப்புவார்கள் என்று சொல்லு."

"போம்மா, கேலி செய்கிருயே! வளர்ச்சி அறிவிப்புக் கார்டு சாதாரண விஷயம். ஆனல் இதுவோ மிக முக்கிய விஷயம். என் வாழ்க்கையே அதில்தான் அடங்கியிருக்கிறது. நான் எழுத்தாளராக—மிகப் பெரிய எழுத்தாளராகப் போகிறேன்..."

"நல்லது. ஆனல் முதலில் நீ பள்ளிப் படிப்பையும், கல்லூரிப் படிப்பையும் முடிக்க வேண்டுமே. அதாவது நீ உன் கணக்குப் பாடத்தை அதிக சிரத்தையுடன் படிக்க வேண்டும். போன மாதம் கணக்கில் 'இ' வாங்கியதற்காக அப்பா எவ்வளவு கோபித்தார் என்பது நினைவிருக்கிறதா?"

எலிசபெத் பெருமூச்சு விட்டாள். நகரத்தை நோக்கியிருந்த புறக்கடைக்குச் சென்றாள். இருளைக் கொத்துவதுபோல் நகரின் விளக்குகள் பிரகாசிப்பது தெரிந்தது.

"வெல்வெட் விரிப்பின்மீது முத்தாரம் சிதறியது போல்" இருந்தது. ஆகா, இச் சொற்களின் அழகு தான் என்னே!

நிலா அப்பொழுது பால்போல் காய்ந்துகொண் டிருந்தது. ஷெல்லிக்கும், கீட்சுக்கும், ஷேக்ஸ் பியருக்கும் சொந்தமான நிலா. ஏன், அதுவே எனக்கும் சொந்தமான நிலா" என்று கூறிக்கொண்டே எலிசபெத் சமையலறைக்குச் சாப்பிடச் சென்றான்!

# இளைஞர் அக்செல்ஃப்ராத்

## சின்கிளேர் லூயி

[சின்கிளேர் லூயி சிறந்த நாவலாசிரியர், சிறுகதை எழுத்தாளர், நாடகாசிரியர், அதுமட்டுமின்றி சிறிது காலம் நடிகர் ஆகவும் விளங்கியவர். இவர் 1885-ஆம் ஆண்டில் மின்சோட்டாவிலுள்ள சாக்செண்டர் என்னுமிடத்தில் பிறந்தவராவர். ''மெய்ன் ஸ்ட்ரீட்'' டைப்படித்த பல இலட்சக்கணக்கான வாசகர்களுக்கு இவர் பிறந்த சாக்செண்டரே கோபர்பிரெய்ரி என்ற பெயரால் அறிமுகப்படுத்தப்பட்டிருக்கிறது என்பது தெரிந்திருக்கும். யேல் பல்கலைக் கழகத்தில் பட்டம் பெற்ற பிறகு இவர் பனாமாவிற்குக் கடல் வழியாகக் கால்நடைகளை ஏற்றிச் செல்லும் ஒரு கப்பலில் சென்றார். அப்பொழுதுதான் பனாமா கால்வாய் வெட்டப்பட்டு வந்ததால் அங்கு வேலை தேடி அலைந்தார். ஆனால் அங்கே வேலை எதுவும் அவருக்குக் கிடைக்கவில்லையாதலால் சான்பிரான்சிஸ்கோ திரும்பி, பத்திரிகை நிருபராக வேலை பார்க்கலானார். பிறகு அவர் வாஷிங்டனிலும் நியூயார்க்கிலும் பத்திரிகாசிரியராக வேலை பார்த்தார். 1920-இல் வெளியான அவருடைய தமுல் ஐந்து நாவல்கள் அவருக்குப் பெயர் தேடித் தரவில்லை; அவற்றிற்குப் பிறகு வெளியிடப்பட்ட "மெய்ன்ஸ்ட்ரீட்'' உலகம் பூராவிலுமே மிகுந்த ஆதரவையும், அதே நேரத்தில் எதிர்ப்பையும் உண்டாக்கியது. சின்கிளேர் எழுதிய பல்வேறு நாவல்களில் ஆரோஸ்மித் பேபிட், டாட்ஸ்வொர்த் ஆகியவை சிறந்தவைகளாகும். 1930-ஆம் ஆண்டில் அவருக்கு இலக்கியத் துறைநோபல்



பரிசு வழங்கப்பட்டது. அவ்வாறு கௌரவிக்கப்பட்ட முதல் அமெரிக்கரும் அவரே. அவருடைய எழுத்தில் தீரஆராயாத வெறுப்பு, அறியாமை, குறுகிய மாநிலப்பற்று ஆகியவை கண்டிக்கப்பட்டிருந்தும், அம்மாதிரி குறைகளுள்ளவர்களும் அவருடைய நூல்களை விரும்பிப் படிக்கலாயினர். அவரை ஆக்க எழுத்தாளர் என்று கொள்வதற்கில்லையெனினும் உண்மை நிலைமையைத் தம் எழுத்தில் பிரதிபலிக்குமாறு செய்பவர் என்று கொள்ளலாம் ''இளைஞர் அக்செல்ஃப்ராத்'' என்னும் இச் சிறுகதை கடின உழைப்பாளியான ஒருவிவசாயி 65-ஆம் வயதில் யேல் பல்கலைக் சுழகத்தில் சேர்ந்து தன்னுடைய வாழ்நாட்களில் நீண்டகால அவாவினை நிறைவேற்றிக் கொள்ளும் வகையில் கல்வி பயில்வதைப் பற்றி விளக்குகிறது.]

* * *

**பருத்தி மரம்** என்பது தாறுமாறான ரஸனையற்ற வழக்கங்கள் உடைய ஒரு மரம். கம்பளி ரோமத்தைப் போன்ற இலைகளை அது உதிர்த்து, சுற்றிலுமுள்ள தரையைச் சாம்பல் நிறமாக்கி அதன் விளைவாக எங்கள் நகரத்தைப் பற்றி அக்கம் பக்கத்து ஊர்க்காரர்கள் "என்ன நகரம் இது?'' என்று வெறுப்பாகப் பேசும்படிச் செய்திருக்கிறது என்றாலும், புகலிடமாகவும், உணர்ச்சி ஊட்டுவதாகவும் உள்ள ஒரு பெரிய மரம் தான் அது என்பதில் சந்தேகமில்லை. மத்தியான வேளையில் அதன் இலைச் செறிவின் மீது சூரிய ஒளி பட்டுப் பளிச்சிடச் செய்தது. வரிசையாய் வளர்ந்திருந்த லோகஸ்ட் மரங்களில் தொங்கும் பூங்கொத்துக்கள்—புழுதி மிக்க கோடைப் பகல் பொழுதில் கண்களுக்கு ரம்யமான காட்சியாக இருந்தது. கல்காட்டிற்கும், மஞ்சள் பாறைக்

கும் இடையேயுள்ள கோதுமை வயல்கள் பு...
கோரப் புல்வெளி வரையில், வியர்க்க விறுவிறு...
வீடு திரும்பும் வழிப் போக்கர்களுக்கு நிழல் தந்...
ஆறுதல் அளிக்கும் மரம் இது ஒன்றுதான்.

ஜோரேல் மன்னில் வசிக்கும் நாங்கள் நாட் அ...
செல்ஃப்ராத்தை 'பழைய பருத்தி மரம்' என்று அழைத்...
வந்தோம். உண்மையில் அவருக்கு இந்தப் பெ...
வரக் காரணம் அவருடைய குணமல்ல. அவருடை...
சிறிய வெள்ளையான வீட்டையும், சிறப்பான களஞ்சிய...
த்தையும் சுற்றி இருந்த தோப்பைப் பொறுத்...
அவருக்கு இப்பெயர் வந்தது. கிராமத்து வண்டி...
பாதையின் இரு புறமும் அழகான மரங்களை அவ...
வைத்துப் பயிராக்கியிருந்தார். அந்தச் சாலையில்...
வழியே போகிற எந்த வண்டிக்காரனும் தனக்காக...
தான் அந்தப் பாதை அமைக்கப்பட்டதோ என்...
நினைத்துக்கொள்வான். நாட்டுக்கு இப்பொழுது வயது...
அறுபத்து ஐந்து ஆகிறது. தரையில் ஆழமா...
வேருன்றி, அடிமரம் பனியிலும் மழையிலும் வெய்ய...
லிலும் நன்கு பதப்பட்டு, இரவு பகல் என்று பாராம...
வானளாவித் தலைநிமிர்ந்து நிற்கும் அந்தப் பருத்...
மரத்தைப் போன்றவர் தான் அவரும்.

அமெரிக்காவில் குடியேறிய இவர் தமது நடை...
யுடைய பாவனைகளில் மட்டுமின்றிப் பேச்சிலேயும் கூட...
ஓர் அமெரிக்கராகவே மாறி இருந்தார். 'ஜே', 'டபிள்யூ...
ஆகிய இரு எழுத்துக்களின் உச்சரிப்பு மட்டும் சரியா...
யிராது. மற்றபடி அசல் அமெரிக்கரைப் போலவே...
தெளிவாக ஆங்கிலம் பேசுவார். தம் தாய்நாடான...
ஸ்காண்டிநேவியாவில் இருந்தபோதே அவர் அமெரிக்...

காவை ஓர் ஒளிமிக்க நாடு என்று கனவு கண்டு வந்தார். ஆகையால், அவரை முழுக்க முழுக்க அமெரிக்கர் எனலாம். அமெரிக்காவைப் பற்றி அவர் எப்போதுமே " நீதியின் நிலைக் களம் " என்றும் " விருப்பமான பேச்சுக்களும் விலசமான பட்டணங் களுக்கும் அங்கே குறைவேயில்லை " என்றும் நினைத்து வந்தார். அவர் இதயம் எப்பொழுதுமே அழகை நாடும் இளமை பெற்று இருந்தது.

நூட் அக்செல்ஃப்ராத் இளைஞனாக இருந்தபோது தாம் பெரிய கல்வி மேதையாக ஆகிவிட வேண்டு மென்றும், வெளிநாட்டு மொழிகளை லாகவமாகக் கற்றுணர வேண்டுமென்றும், தேச சரித்திரங்களில் உள்ள வரலாறுகளையும் விவேகமான நூல்களின் மகத் துவங்களையும் ஊடுருவிப்பார்க்க வேண்டு மென்றும் ஆசைப்பட்டுவந்தார். அமெரிக்காவிற்கு வந்தபின் பகலெல்லாம் ஒரு பலகை அறுக்கும் தொழிற்சாலையில் உழைத்துவிட்டு இரவு வேளைகளில் படிக்கலானார். அவர் போதிய அளவு ஏட்டுப் படிப்புப் பெற்று ஏறக்குறைய ஆறு மாத காலம் மாவட்டப் பள்ளியில் ஆசிரியர் வேலையும் பார்த்தார். அவருக்கு வயது பதினெட்டான போது, வாடி வதங்கிய விறு வெசிலியஸின் மேல் அவர் இரக்கம் கொண்டு அவளைத் திருமணம் செய்து கொண்டார். விளைச்சல் நிலங்களைத் தேடி அவர்கள் பாய்மரத்தில் பிரயாணம் செய்தது ஆரம்பத்தில் குதூகல மாக இருந்த போதிலும், நூட் விரைவில் குடும்பக் கஷ்டங்களுக்கும் ஏழ்மைக்கும் உள்ளானார். பதினெட்டு வயதிலிருந்து ஐம்பத்தெட்டு வயது வரையில் தம் குழந்தைகளின் நோய்களுக்கு வைத்தியம் செய்வதற்கு

நிலத்தை அடமானம் வைத்துத் திருப்புவது இப்
யாக அவரது காலம் கழிந்துவிட்டது.

தமக்குப் பதில் தம் குழந்தைகள் பெற்ற
றியைக்கொண்டு அவர் மனத்திருப்தி கொண்ட
அவரைப் பொருத்தமட்டில் பெரிய தடித்த புத்தகங்க
நேரம் கிடைத்தபோதெல்லாம் படித்துவந்தார். அ
வரலாற்றுப் புத்தகங்களையும், பொருளதாரப் புத்தக
களையும் முதிர்ந்த அறிவாளிகள்தான் படிப்பார்கள்
தமது நிலத்தையே சதா ஒட்டிக்கொண்டு கிடந்தாலு
விநோதமான நகரங்களுக்குப் போகவேண்டும், பி
மாண்டமான கோபுரங்களை நேரில் பார்க்க வேண்டு
என்ற அவரது ஆசை மட்டும் மாருமலே இருந்
வந்தது. தோட்டம் ஒன்றை அவர் விலைக்கு வாங்கின
அத் தோட்டத்தில் குப்பை போடுவதற்கான சிமென்
தொட்டியும், கோழி வளர்ப்பதற்கான இடமும், காற்
ஆலையும் இருந்தன. அது நல்ல வளமான தோட்ட
தான். நிறைய மரங்கள் இருந்தன. அது கடன் அ
மானம் ஏதும் இல்லாத சொத்து. இப்பொழு
அவருக்கு வயது அறுபத்துமூன்று. அவரது வாழ்க்கை
யில் அமைதியும் வசதியும் ஏற்பட்டுவிட்டதால், அ
லட்சியம் பூர்த்தியாகி விட்டது. இனி எதுவும் அவரு
குத் தேவையில்லை. இறந்து விட்டாலும் மோசமில்லை
இனி அதிக நாள் இருக்கவும் அவர் ஆசைப் படவில்லை

இன்னமும் இருந்து ஆகவேண்டியது என்ன
அவரது மனைவியோ இறந்து விட்டாள். அவரின்
மக்களோ நாட்டின் பல பகுதிகளுக்குப் போய்விட்டா
கள். 'ஃபார்கோ'வில் ஒருபையன் பல் வைத்தியன
இருக்கிறன். இன்னொருவன் தங்கப் பள்ளத்தாக்கில்

விவசாயம் செய்கிறான். தனது தோட்டத்தை மகளிடமும் மருமகனிடமும் விட்டுவிட்டார். அவர்கள் அவரைத் தம்முடனேயே இருக்குமாறு எவ்வளவோ கெஞ்சி வேண்டியும் கூட நூட் இருக்க மருத்து விட்டார்.

" இல்லை. நீங்கள் தனியாக வாழ்க்கை நடத்தப் பழகிக் கொள்ள வேண்டும். நான் உங்களுக்குத் தோட்டத்தை இனமாகக் கொடுக்கமாட்டேன். ஆண்டு ஒன்றுக்கு நானூறு டாலர் குத்தகை கொடுங்கள். அதை வைத்து நான் என் வாழ்க்கையை நடத்திக்கொள்கிறேன். எதிர்த்த குன்றில் வசிக்கப் போகிறேன். அங்கிருந்தபடி உங்களைக் கவனித்துக்கொள்கிறேன் " என்றார் நூட்.

அவருக்குப் பிடித்தமான—தனித்து நின்ற—அந்தப் பருத்தி மரத்தின் அருகில் மேடான ஓர் இடத்தில் தார்ப் பாயினால் ஒரு குடிசையை அவர் அமைத்துக்கொண்டார். அங்கேதான் அவரது சமையல், தூக்கம் எல்லாம். சில சமயம் வெளியே வெயிலில் குளிர் காய்வார். மற்ற வேளைகளில் ஜோரேல்மன் நூலகத்திலிருந்து எடுத்து வந்த புத்தகங்களை நிறையப் படிப்பார். வாழ்நாள் முழுவதும் தம்மை அழுத்திக் கொண்டிருந்த பெரும் சுமை இறக்கப்பட்டு விட்டதாகவும், தாம் சுதந்திரம் பெற்றுவிட்டதாகவும் அவருக்குத் தோன்றியது.

ஆஜானுபாகுவான அந்தப் பெரிய மனிதர்—ஆடாமல் அசையாமல் தம் குடிசைமுன் சாய்மானம் இல்லாத சமையலறை நாற்காலியில் மணிக்கணக்காக உட்கார்ந்திருப்பார்; வெள்ளைத் தாடி, தொளதொள என்று போட்டிருக்கும் கால்செராய், காலர் இல்லாத

சட்டை—இத்தோற்றத்தில் அவர் ஒரு ஞானிய காட்சியளித்தார். அறுவடையான நிலங்களைக் கட சில மைல்களுக்கு அப்பால் தெரிந்த ஜேக்—ே ஃபோர்க்ஸ் கோவிலைப் பார்த்துக்கொண்டு, வாழ்க்ை தத்துவத்தைச் சிந்திப்பார். தொடக்கத்தில் இவ்வளவு நாளாகக் கடைப்பிடித்து வந்த பழக்கத் அவரால் விடமுடியவில்லை. ஆரம்பத்தில் அ காலையில் ஐந்து மணிக்கெல்லாம் எழுந்து த குடிசையைச் சுத்தம் செய்துவிட்டு, தோட்டத் வேலைக்குப் போவார். சரியாகப் பன்னிரண்டு மண குச் சாப்பிடுவார். சூரிய அஸ்தமனம் ஆனதும் படுத் விடுவார், ஆனால், பிறகு அவர் கொஞ்சங் கொஞ் மாகப் பழைய பழக்கத்திலிருந்து விடுதலை பெற முய ஞர். அதன் பிறகு ஏழு—ஏன் சில வேளை எட்டு மணி வரையிலும்கூடத் தூங்குவார். பூனை ஒன்ை வளர்க்கத் தொடங்கினர். 'இராணி' என்று அதற்கு பெயரிட்டு அழைத்தார். அதனுடன் கொஞ்சுவார் விளையாடுவார். அதன் காதிலே இரகசியமாக, " இந் மனிதர்கள் ஏன் மடத்தனமாக இப்படிக் கஷ்டப்பட உழைக்கிருர்கள் ?" என்று கேட்பார். பூதாகாரமா உடல் ; நீண்டு தொங்கும் இடைக்கோட்டின் வா இதுதான் தோற்றம். குடிசை வீட்டிற்குள் மடிப் மடிப்பாகக் கிடக்கும் படுக்கை. பைன்மரத்தால் செய் மேஜை. அதன்மேல் செய்தித்தாள் விரிக்கப்பட்டிரு கும். அதில் உணவுப் பொருள்கள் சிந்திக் கிடக்கு இந்தச் சூழ்நிலையில் வசிக்கும் இந்த வயோதிகருக் எத்தனை இளமையின் அபிலாஷைகள் ; எத்தனை பழமை அழகைப்பற்றிய கனவுகள் !

அவர் இரவில் நெடுந்தூரம் நடக்கத் தொடங்கினார். குடும்பப் பொறுப்புடனிருந்த அந்தக் காலத்தில் நன்கு மூடப்பட்ட அறைக்குள் இரவு நேரத்தில் குறட்டைவிட்டுத் தூங்குவார். இப்பொழுதோ இருளின் மர்மங்களைத் தெரிந்துகொள்ள நிலவையும், பரந்த புல்தரையின்மேல் படிந்துள்ள பனியின் அழகையும் பார்த்துப் பரவசமடைகிறார். பசும் புல்லும், பருத்திமரமும் எழுப்பிய ஓசைகள், தூங்கும் பறவைகளின் சலசலப்பு இவைகளையும் கேட்கிறார். இப்பொழுதெல்லாம் அவர் மைல் கணக்கில் நடக்கிறார். காலில் போட்டிருக்கும் ஜோடு, பனியில் நனைந்து துவண்ட போதிலும் அவர் சட்டை செய்வதில்லை. குன்றுகளின் மேல் அவர் ஏறி நின்று, தமது இரு கரங்களையும் அகல விரித்து, உறங்கும் பரந்த நிலமடந்தையை வணங்குவார்.

இந்த இரவுப் பிரயாணப் பழக்கத்தை அவர் யாருக்கும் தெரியாத இரகசியமாகவே வைத்திருந்த போதிலும், அது எப்படியோ வெளியே தெரிந்துவிட்டது.

பட்டணத்திற்குச் சென்று குடித்துவிட்டு, குதிரை வண்டியிலிருந்தபடி வரும் வழியில் விஸ்கி போத்தல்களை வீசி எறிந்துகொண்டு, இரவில் நேரங்கழித்து ஊர் திரும்பும் அண்டை அயலார் சிலர் நூட்டைப் பார்த்துவிட்டனர். இதனால் இந்த விபரம் காட்டுத் தீபோல் எங்கும் பரவிவிட்டது. "அந்தப் பழைய பருத்தி மரத்திற்கு-மருமகனிடம் பண்ணையை ஒப்படைத்துவிட்டு ஓய்வு பெற்றது முதல்-வாலிபம் திரும்பிவிட்டது. இரவெல்லாம் சுற்றி அலைகிறார். மனுஷன் ஏன் இப்படித் தூங்காமல் கடுங்குளிரில் அலைய

வேண்டும்?'' என்று இதுபோல் அவர்கள் பேசி கொள்ளலாயினர்.

டாடு சென்டரிலிருந்து சீரிங்கபட்டாம் வரையி முள்ள எந்தக் கிராமவாசியும் தங்களுடைய வழக்க திற்கு மாறுபாடாக நடக்கிறவனை வெறுத்து ஒதுக் விடுவான். ஒரு மாதிரியான நடத்தையுள்ள பேர் களிடம் அவர்களுக்கு ஒரு தனிக் கவர்ச்சி. கிராம புரம் அத்தனையும் நூட் அக்செல்ஃப்ராத்தின் நடவடி கைகளை நோட்டம் பார்க்கத் தொடங்கியது. கிரா வாசிகள் அவரை வழியில் மடக்கிக் கேள்வி கேட்பது சாலையிலிருந்து அவரது குடிசையை ஒரு மாதிரியாக பார்ப்பதும் வழக்கமாகிவிட்டது. இதெல்லாம் நூ டுக்கும் தெரியாமல் இல்லை. தம்மிடம் விசித்திரமா கேள்விகளைக் கேட்பவர்களுக்குப் பதில் சொல்லாம அவர் மௌனம் சாதிக்கத் தொடங்கினர். உண்மையி இதுதான் அவரது பெரிய தீர்த்த யாத்திரையி ஆரம்பக் கட்டம்.

அவர் புதுமுறையில் 'சித்தன்போக்கு சிவ போக்'கான ஒரு புதிய வாழ்க்கையைத் தொடங்கி இரு கிருர் அல்லவா? திடீரென்று ஒரு நாள் அவர் 'இராண என்ற தன் பூனையைப் பார்த்துப், "சத்தியமாய் நா இன்று பல் விளக்கப் போவதில்லை. காலமெல்லா விளக்கிய பல்தானே? ஒரு நாள் விளக்காவிட்டால் கு முழுகிப் போகுமோ?'' என்று கத்தினர். அந்தப் பூனை பயந்து ஓடிவிட்டது. புத்தகம் படிப்பதிலும் தம் இ டம்போல் நடந்துகொள்ளுவதிலும் அவருக்கு இன்ப ஏற்படத் தொடங்கியது. மெக்ஸிகோ வெற்றியை பற்றிய புத்தகத்தை முழுதும்

விட்டு, ஜோரேல்மன் நூலகத்திலிருந்து வாங்கிவந்த சாதாரணக் காதற் கதைப் புத்தகத்தை வாசிக்கத் தொடங்கிவிட்டார். பொருளாதார நூல்களையும் சரித்திர நூல்களையும் படிப்பதைக் குறைத்துக்கொண்டார். ஆனால் ஒவ்வொரு நாள் மாலையிலும் அவர் அந்த எருமைக் கொம்பு நாற்காலியில் சாய்ந்து, கட்டிலின்மேல் கால்களை நீட்டியபடி, பூனையை மடியில் படுக்க வைத்துக்கொண்டு, ரஸமான காதல் கதைகளைப் படிப்பார். அவர் வாழ்நாள் பூராவும் கனவு கண்டு வந்த—நடனமும் பாட்டும், மதுவும், கூத்தும், கும்மாளமும் நிறைந்த "பூலோக சொர்க்க"த்தைப்பற்றி அவர் அறியலானார்.

அவர் படிக்க நேர்ந்த கதைகளில் யேல் கல்லூரி மாணவன் ஒருவனின் வாழ்க்கை பற்றியதும் ஒன்று. அவன் தன் கல்லூரியில் சில்லறை வேலைகள் செய்து பணம் சம்பாதித்துப் படித்துப் பட்டம் பெற்றதை அக் கதை விளக்கியது.

இச்சரிதையைப் படித்ததின் விளைவாக, ஒருநாள் விடியற்காலை மூன்று மணிக்குத் தானும் கல்லூரிக்குப் போய்ப் படிக்கவேண்டும் என்று நூட் தீர்மானித்துக் கொண்டார். அவருக்கு அன்றுதான் அறுபத்து நான்காவது வயது பிறந்தது. தன் வாழ்நாள் முழுவதும் அவர் கல்லூரியில் சேர்ந்து படிக்கவேண்டும் என்று எண்ணி வந்தார். அந்த எண்ணத்தை இப்போது ஏன் ஈடேற்றிக்கொள்ளக் கூடாது?

விடியற்காலையில் தூங்கச் சென்றபோது இது பற்றி அவர் மனத்தில் இருந்த உறுதி காலையில் எழுந்தபோது தளர்ந்துவிட்டது. உடல் உறுதியோடு இருக்

கிற அழகிய இளைஞர்கள் மத்தியில் கிழவன் உ
கார்ந்து படிப்பது தளிர்விட்டுப் பூத்துக் குலுங்
செடிகளுக்கு மத்தியில் பழுத்த இலைகளுள்ள மு
பருத்திமரம் நிற்பதுபோல் இருக்குமே என்று நினை
தார்; இது அபத்தமான எண்ணம் என்று அவருக்
பட்டது. கலைமகளின் கோவிலுக்கு யாத்திரை புறப்
வது பற்றி அவர் மனத்தில் மாதக்கணக்கில் போராட்ட
நடந்தது. கல்லூரியில், ஏதோ சில பணக்கா
பிள்ளைகளைத் தவிர மற்ற எல்லோருமே விளக்கை
வைத்துக்கொண்டு விழுந்து விழுந்து படிப்பார்கள்
என்று நினைத்தார். ஹார்வர்டு, பிரின்ஸ்டன், யேல்
ஆகிய பல்கலைக் கழகங்கள் அவரது கற்பனையில்
கல்விக் கோவில்களாகக் காட்சி அளித்தன. அங்
வானநூல், அரசியல், ஆட்சிமுறை இவைகளைப்பற்
இளைஞர்கள் மிகுந்த அக்கறையோடு பேசிக்கொள்
தாகவும் அவர் மனத்தில் தோன்றியது. அவருடை
நினைப்பில் மாணவர்கள் வகுப்புக்கு வராமல் இருப்பா
கள் என்பதும், சாப்பிடப் போகிற இடைவேளை இரு
கும் என்பதும் கிடையாது.

பலவற்றைத் தெரிந்துகொள்ள வேண்டுமென்
பரபரப்பாக இருக்கும் இளைஞனைப் போல இந்த
தள்ளாத வயதில் இக்கிழவருக்கு கல்லூரியில் படிக்கு
ஆசை கிளம்பிவிட்டது. கல்லூரிக்கான புத்தகங்களை
வாங்கிக்கொண்டு தம்மைத் தயார் செய்துகொள்ள
தொடங்கினர்.

லத்தீன் வினைச் சொற்கள் அவருக்குக் கஷ்டமா
இருந்தன. பீஜ கணிதமோ பயங்கரமாகக் காண
பட்டது. வாழ்க்கைக்கும் அவற்றிற்கும் சம்பந்தமே

இல்லை என்று எண்ணினார். நாளொன்றுக்குப் பன்னிரண்டு மணி நேரம் படிப்பார். இது என்ன பிரமாதம்! முன்பெல்லாம் அவர் பதினெட்டு மணி நேரம் வயலில் பாடு பட்டிருக்கிறாரே! சரித்திரப் பாடமும், ஆங்கில மொழிப் பாடமும் அவருக்குச் சுலப மாகவே இருந்தன. காரணம், அவர் முன்பே இவற்றில் சில பகுதிகளைப் பொழுது போக்காகப் படித்திருக்கிறார். அக்கம் பக்கத்தில் வசித்த ஜெர்மனியர்களிடமிருந்து அவர் கொஞ்சம் ஜெர்மன் கற்றுக்கொண்டார். நாற் பத்து ஐந்து வருடத்திற்கு முன்னால் அவர் பள்ளிக் கூடத்தில் ஆசிரியராக இருந்திருக்கிறார். அல்லவா? அதனால் படிப்பில் உள்ள சூட்சுமம் அவருக்கு எளிதில் பிடிபட்டுவிட்டது. தாம் படித்துப் பாஸ் செய்து விடலாம் என்ற திட நம்பிக்கை அவருக்கு ஏற்பட்டது. கல்லூரியில் சேர்ந்துவிட்டால் பேராசிரியர்களைக் கேட்டுத் தெரிந்துகொண்டு சுலபமாக படிக்கலாம்; அப் போது இவ்வளவு அலுப்பு இருக்காது என்று தன்னைத் தானே திடப்படுத்திக்கொண்டார்.

அவர் மேற்கொண்ட—வாழ்க்கைக்குப் புறம்பான படிப்பு அவர் மூளையைக் குழப்பின; சலிப்பும் ஏற் பட்டது. ஆனால் வாழ்க்கையில் அவர் தமக்குப் பிடிக் காத வேலைகளைக்கூட கடமை என்று செய்து பழகியவ ராதலால், இடைவிடாமல் படித்தார். இரண்டாவது வருஷத்தின் இறுதியில் தாம் கல்லூரியில் சேரமுடியாது என்ற எண்ணம் தோன்றிவிட்டது. ஜொரேல்மனில் ஒரு நாள் பலசரக்குக் கடைக்காரன் ஒருவன் நடுக் கடைத் தெருவில் நாலு பேருக்கு மத்தியில் அவரது படிப்பைப் பற்றி நையாண்டி செய்துவிட்டான்.

நாட்டிற்கு அடங்காத கோபம் ஏற்பட்டது எனி
பேசாமல் இருந்து விட்டார். முன்பொரு நாள் கே
தில் பண்ணைக்கு வேலைக்கு வந்தவனை அடித்த
அவன் காரை எலும்பு முறிந்து போன சம்பவ
அவருக்கு நல்ல வேளையாக ஞாபகத்திற்கு வந்
உடனே அவர் கோபத்தை அடக்கிக்கொண்டு
மைல் வெயிலில் நடந்து வீடு போய்ச் சேர்ந்த
உள்ளூரக் கோபம் பொங்கிக்கொண்டிருந்தது. பூனை
எடுத்துக் கொஞ்சிக்கொண்டு சூரிய அஸ்தமனக் கா
யைக் கண்டு களிக்க வெளியில் சென்றார்.

கோரை முளைத்திருந்த சதுப்பு நிலத்தருக்
நின்று, கத்திக் குதித்துக் கொண்டிருந்த சிறு குருவிட
அவர் சிறிது நேரம் பார்த்துக்கொண்டிருந்த
பிறகு திடீரென்று, "நான் கல்லூரிக்குப் போகத்தா
போகிறேன். அடுத்த வாரம் கல்லூரி திறக்கிறார்க
பரீட்சையிலும் தேறிவிடுவேன் என்பது உறுதி
என்று தம் தாடியைக் கோதிக்கொண்டே பேசினார்.

இரண்டு நாட்கள் கழித்து சாமான்களை எல்ல
தம் மருமகன் வீட்டில் கொண்டுபோய்ப் போட்ட
பூனையையும் அவர் வீட்டில் விட்டுவிட்டு வந்த
ஸெலுலாய்டு கலரில் ஓர் அழகான தொப்பி, கறு
சூட் இவைகளை வாங்கிக்கொண்டார். இரவும் முழுத
விழித்திருந்து ஆண்டவனைப் பிரார்த்தனை செய்
கொண்டார். நியூ ஹேவனுக்குப் போகும் நோக்க
துடன் மினியாப் போலிஸுக்கு ரயில் வண்டி ஏறின

நாட், ஏல் பல்கலைக் கழகத்திற்குள் நுழைந்தா
அங்குள்ளோர் அவரைக் கிண்டல் செய்யவில்லை
ஆனால் அவரை ஆச்சரியத்துடன் ஏற்றுக்கொண்டன

இல்லை என்று எண்ணினர். நாளொன்றுக்குப் பன்னிரண்டு மணி நேரம் படிப்பார். இது என்ன பிரமாதம்! முன்பெல்லாம் அவர் பதினெட்டு மணி நேரம் வயலில் பாடு பட்டிருக்கிருரே! சரித்திரப் பாடமும், ஆங்கில மொழிப் பாடமும் அவருக்குச் சுலப மாகவே இருந்தன. காரணம், அவர் முன்பே இவற்றில் சில பகுதிகளைப் பொழுது போக்காகப் படித்திருக்கிருர். அக்கம் பக்கத்தில் வசித்த ஜெர்மனியர்களிடமிருந்து அவர் கொஞ்சம் ஜெர்மன் கற்றுக்கொண்டார். நாற் பத்து ஐந்து வருடத்திற்கு முன்னல் அவர் பள்ளிக் கூடத்தில் ஆசிரியராக இருந்திருக்கிருர். அல்லவா? அதனுல் படிப்பில் உள்ள சூட்சுமம் அவருக்கு எளிதில் பிடிபட்டுவிட்டது. தாம் படித்துப் பாஸ் செய்து விடலாம் என்ற திட நம்பிக்கை அவருக்கு ஏற்பட்டது. கல்லூரியில் சேர்ந்துவிட்டால் பேராசிரியர்களைக் கேட்டுத் தெரிந்துகொண்டு சுலபமாக படிக்கலாம்; அப் போது இவ்வளவு அலுப்பு இருக்காது என்று தன்னைத் தானே திடப்படுத்திக்கொண்டார்.

அவர் மேற்கொண்ட—வாழ்க்கைக்குப் புறம்பான படிப்பு அவர் மூளையைக் குழப்பின; சலிப்பும் ஏற் பட்டது. ஆனல் வாழ்க்கையில் அவர் தமக்குப் பிடிக் காத வேலைகளைக்கூட கடமை என்று செய்து பழகியவ ராதலால், இடைவிடாமல் படித்தார். இரண்டாவது வருஷத்தின் இறுதியில் தாம் கல்லூரியில் சேரமுடியாது என்ற எண்ணம் தோன்றிவிட்டது. ஜொரேல்மனில் ஒரு நாள் பலசரக்குக் கடைக்காரன் ஒருவன் நடுக் கடைத் தெருவில் நாலு பேருக்கு மத்தியில் அவரது படிப்பைப் பற்றி நையாண்டி செய்துவிட்டான்.

நாடைந்த அடங்காத கோபம் ஏற்பட்டது எ
பேசாமல் இருந்து விட்டார். முன்பொரு நாள் தோ
த்தில் பண்ணைக்கு வேலைக்கு வந்தவனை அடித்
அவன் காலை எலும்பு முறிந்து போன சம்ப
அவருக்கு நல்ல வேளையாக ஞாபகத்திற்கு வந்
உடனே அவர் கோபத்தை அடக்கிக்கொண்டு
யைல் வெயிலில் நடந்து வீடு போய்ச் சேர்ந்
உள்ளூரக் கோபம் பொங்கிக்கொண்டிருந்தது. பூனை
எடுத்துக் கொஞ்சிக்கொண்டு சூரிய அஸ்தமனக் கா
யைக் கண்டு களிக்க வெளியில் சென்றார்.

கோரை முளைத்திருந்த சதுப்பு நிலத்தரு
நின்று, கத்திக் குதித்துக் கொண்டிருந்த சிறு குருவி
அவர் சிறிது நேரம் பார்த்துக்கொண்டிருந்
பிறகு திடீரென்று, “நான் கல்லூரிக்குப் போகத்தா
போகிறேன். அடுத்த வாரம் கல்லூரி திறக்கிறார்க
பரீட்சையிலும் தேறிவிடுவேன் என்பது உறுதி
என்று தம் தாடியைக் கோதிக்கொண்டே பேசினார்.

இரண்டு நாட்கள் கழித்து சாமான்களை எல்ல
தம் மருமகன் வீட்டில் கொண்டுபோய்ப் போட்ட
பூனையையும் அவர் வீட்டில் விட்டுவிட்டு வந்த
ஸெலுலாய்டு கலரில் ஓர் அழகான தொப்பி, கறு
சூட் இவைகளை வாங்கிக்கொண்டார். இரவும் முழுத
விழித்திருந்து ஆண்டவனைப் பிரார்த்தனை செய்
கொண்டார். நியூ ஹேவனுக்குப் போகும் நோக்க
துடன் மினியாப் போலிஸுக்கு ரயில் வண்டி ஏறின

நாட், ஏல் பல்கலைக் கழகத்திற்குள் நுழைந்த
அங்குள்ளோர் அவரைக் கிண்டல் செய்யவில்லை
ஆனால் அவரை ஆச்சரியத்துடன் ஏற்றுக்கொண்டன

வியர்க்க வியர்க்கப் பேனவை ஏர் உழுவதுபோல் அழுத்தி எழுதி எப்படியோ நுழைவுத் தேர்வில் தேறி விட்டார். கல்லூரியில் சேர்ந்ததும் ஓர் அறைத் தோழனும் அகப்பட்டுவிட்டான். அவன் பெயர் ரே கிரிபின்! அடர்த்தியான புருவமுள்ள அசிங்கியமான ஆள்; அவன் முன்பு நியூ இங்கிலாந்தில் ஆசிரியர் வேலை பார்த்தவன். கல்லூரிப் படிப்பு இருந்தால் ஆசிரியர் வேலை மூலம் அதிகம் சம்பாதிக்கலாம் என்ற நோக்கத்தோடுதான் அவன் படிக்க வந்திருந்தான். ரே கிரிபின் ஏழ்மை நிலைமையில் உள்ளவன்; அதனால், இரும்புக் கடைக்காரன் ஒருவனுடைய அவலட்சணமான மகனுக்குப் பாடம் சொல்லிக் கொடுக்கும் வேலையைப் பிடித்துக்கொண்டான். ஹோட்டலில் சாப்பாடு பரிமாறும் வேலை செய்து தம் சாப்பாட்டிற்கு வழிசெய்து கொண்டிருந்தான்.

நூட்டுக்கு இவன்தான் முக்கிய சிநேகிதன். இவனை நம்பியதால் நூட் தம்மை முட்டாள் ஆக்கிக்கொண்டார். அவர் எந்தக் குறிக்கோளோடு கல்லூரிக்கு வந்திருக்கிறார் என்பதை ரே கண்டு கொண்டான். இலக்கிய ஓடையில் நீந்தி விளையாட அவர் வந்திருக்கிறார் என்பதை அறிந்ததும் அவன் அவருக்குப் புத்தி சொல்லத் தொடங்கினான்.

"உம் போன்ற வயதானவர்களெல்லாம் ஆத்மா ஈடேறுவதற்கான முயற்சியில் ஈடுபடவேண்டும். அதை விட்டுவிட்டு, இந்த மேல் பூச்சான விஷயமெல்லாம் உமக்கு எதற்கு? அன்னியர்களும் ஓவியர்களும் இந்தக் கவிதைகளைக் கட்டிக்கொண்டு அழட்டும். பேசாமல் லத்தீனையும், கணிதத்தையும், பைபிளையும் மட்டும்

கொள்வார்கள். ஆனல், அதைச் சீர்திருத்த அவர்
தைரியமாக முன்வரமாட்டார்கள். இதை எல்
கேட்ட நூட் திகைத்துப்போனர். அவர்களுடை
பேச்சுக்கள் அவருக்கு அறுவடை காலங்களில் தம்மி
வேலைக்கு வந்தவர்கள் கண்டுங் காணுமல் பே
கொள்வது போல் இருந்தது.

ரே கிரிபிளின் நண்பர்களான இந்தப் புறம்பே
கோஷ்டியினர், வகுப்பில் இருந்த கலாபிமானிக
அறவே வெறுத்தார்கள். கில்பெர்ட் வாஷ்பர்ன் என்
புதிதாக ஒரு பையன் வந்திருந்தான். அவன் பு
பையன்கள் நடந்துகொள்வது போலவே நடந்
கொள்ளவில்லை. அவனது அழகுரசனை அவர்களுக்
அளவு கடந்த அருவருப்பைக் கொடுத்தது. மு
பெல்லாம் நூட்டிற்கு வாஷ்பர்னைப் போன்ற இளை
களைத்தான் பிடிக்கும். ஆனல் புறம்பேசும் கோஷ்
யினர் பேசிப் பேசி நூட் தன்னை ஒரு கெட்ட ஊதா
தனமான கிழவன் என்று நினைக்கும்படி செய்
விட்டனர்.

தனது அறைத் தோழனின் நண்பர்களோடு பழ
வேண்டுமென்று நூட் எவ்வளவோ பிரயாசைக
எடுத்துப் பார்த்தார்; முடியவில்லை. வகுப்பி
ரேயின் சகாக்கள் பத்துப் பேர்களைத் தவிர்த்த மற்ற
களும் கூட ரேயின் சகாக்கள் கிண்டல் செய்வார்கடு
என்று பயந்துகொண்டு நூட்டுடன் சேருவதில்லை.

இப்போதுகூட பன்றி இறைச்சி நிரம்பிய ஒ
பீப்பாயை அவர் ஒருவரே தூக்கி விடுவார். அவ்வள
பலசாலியான அவர் பள்ளியின் விளையாட்டு வீ
களோடு நட்புக்கொள்ள நினைத்தார். இதற்காகக் கா

பந்து விளையாட்டு மைதானத்தில் காத்திருப்பார். ஆனால், அவர்கள் நூட்டை முறைத்துப் பார்த்து ஏதோ குரோதம் பாராட்டிப் பதில் சொல்லுவர்கள்.

அந்த இடங் கூட முன்பிருந்த கவர்ச்சியை இழந்து விட்டது, இடமாவது இடம். ஜொரேல்மனில் இருப்பதும் இடந்தான் ஏல் பல்கலைக் கழகத்தினுள் இருப்பதும் இடந்தான். முன்பு கலைக் கோவில்கள் என்று நினைத்த கட்டிடங்கள் இப்போது அதற்கு மாருக தோற்றமளித்தன. அக்கட்டிடங்கள் வெறும் கல்லும் செங்கலும் தாம்; அங்கே ஜன்னல் ஓரமாகவோ கதவோரமாகவோ நின்று அவரை மற்றவர்கள் வேடிக்கை பார்த்தனர்.

சாப்பாட்டுக் கூடத்திற்குப் போனல் அங்கும் ஒரு நாளைக்கு மூன்று வேளையும் ஒரே கிலிதான். அவர் சாப்பிடும்போது மேஜையில் அவர் பக்கத்தில் உட்கார்ந் திருப்பவர்களுக்கு நூட்டின் தாடி எப்படித்தான் இருக்குமோ! துணிந்து, இருவர் மட்டும் பலரறிய அதைப் பற்றிக் கிண்டலாகப்பேசுவார்கள். அவர்களுள் ஒருவன் அச்சீசன் என்பவன். அவன் சிரத்தையுடன் படிக்கும் மாணவன்; நல்ல அறிவாளி. ஆனல் அவனுக்குக் கணக்கும் ஒழுக்கமும்தாம் விரோதிகள். நூட் ஒரு திட்டமான நோக்கமின்றி கல்லூரிக்கு வந்திருப்பது அவனுக்குச் சுத்தமாகப் பிடிக்க வில்லை. இன்னொருவன் ரொம்பவும் வேடிக்கையாகப் பேசுபவன்; தமாஷுக்காக, தெருவின் பெயர்ப் பலகைகளைத் திருடி வேறு இடத்தில் மாட்டும் குறும்புக்காரன். பிறரைக் கேலி பண்ணி எல்லாரையும் சிரிக்க வைப்பதில் அவனுக்கு அலாதியான ரசனை. அவன் தினம் மூன்று வேளையும் சாப்பிடும்போது

எப்படியோ சுற்றி வளைத்துப் பேசி நூட்டினுடைய தாடியைப்பற்றிக் குறிப்பிட்டு, சாப்பாட்டுக் கூடமே அதிர்ந்து போகும்படி மற்றவர்களைச் சிரிக்கவைப்பான். இதற்காகப் பயந்துகொண்டுதான் நூட் அந்தச் சாப்பாட்டுக் கூடத்திற்கே வருவதில்லை. பிளாக்கேட் ஓட்டலில் தனியாகச் சாப்பிட ஆரம்பித்தார்.

பேசிப் பழகுவதற்கு யாரும் கிடைக்காததால் நூட்டிற்குப் படிப்பே ஓடவில்லை. முன்பெல்லாம் குடிசையில் உட்கார்ந்துகொண்டு அவர் சாவகாசமாக ஒரு வாரகாலத்தில் படித்து வந்ததை இப்போது ஒரே நாளில் படிக்க வேண்டியதா யிருந்தது. அவரைப் போல இளமை உணர்ச்சியுடைய ஒருவன் அவருக்கு நண்பனாகக் கிடைத்திருந்தால் இந்த வேலை அவ்வளவு கடுமையாகத் தோன்றியிருக்காது. அவர்கள் எல்லோருமே குறைந்த வயதுள்ளவர்கள்; பணத்திற்காகப் பாடுபடுகிறவர்கள். விளையாட்டுக்களத்தில் கவனஞ் செலுத்தி விளையாடுகிறவர்கள். ஆசிரியர்களோ என்றும் பயிற்சி நோட்டைத் திருத்துவதையே தாங்கள் வாழ் நாளின் கடமையாக வைத்துக்கொண்டிருப்பவர்கள்.

ஒரு நாள் நூட் சோர்ந்துபோய் இருந்த போது தன்னைப் போலவே இளமை உணர்ச்சியுள்ள ஒருவரைச் சந்தித்தார்.

கல்லூரியிலேயே மிகவும் மதிக்கப்படுகிற பேராசிரியர் ஒருவர் தம் வகுப்பு மாணவர்களை, "நீங்கள் பிரெளலிங் பாடம் படிக்க வந்துவிட்டீர்களோ? முதலில் 'அதிசய உலகில் ஆலிஸ்' என்ற புத்தகத்தைப் படித்து விட்டு வாருங்கள்" என்று திட்டினர் என்று கேள்விப்பட்டார். நூட், உடனே பழைய புத்தகக் கடைகளுக்கு

சென்று, தேடிப் பிடித்து அந்த ஆலிஸ் புத்தகத்தை வாங்கி வந்துவிட்டார். அதை அவர் தம் அறையில் பகல்வேளையில் ரொட்டி சாப்பிட்டுக்கொண்டே வாசித்துக் கொண்டிருந்தார். அப்புத்தகத்தில் உள்ள சிறு பிள்ளைத் தனமான விஷயங்களை அவர் மிக ரஸித்தார். தமக்குத் தாமே சிரித்துக்கொண்டார். அப்போது ரே கிரிபின் உள்ளே நுழைந்தான்; அவர் கையிலிருந்த புத்தகத்தையும் பார்த்துவிட்டான்.

"ஐயோடா!" என்றான் ரே.

"நன்றாக இருக்கிறது. தமாஷான புத்தகம் இது" என்றார் நூட்.

'ஹ ஹ் ஹா' என்று கேலியாகச் சிரித்த ரே, ஐயோ 'அதிசய உலகில் ஆலீஸ்' தானே? கேள்விப் பட்டிருக்கிறேன். மடத்தனமான கதை. ஏன், நீங்கள் உண்மையிலேயே நல்ல புத்தகமாக வாசிக்கக் கூடாது? ஷேக்ஸ்பியர், பேரடைஸ்லாஸ்ட் — இந்த மாதிரி?"

"நல்லது அப்படியே செய்கிறேன் என்றார் நூட். அதற்குமேல் அவருக்குப் பேசத் தோன்றவில்லை.

ரே கிரிபினின் முட்டைக்கண் பார்வைக்கு எதிரில் இருந்துகொண்டு இனிமேல் அந்தப் புத்தகத்தை வாசிக்க முடியுமா? எனவே பிளெவ்ன்ஸ் பி. எச். டி. திறம்பட நடத்தும் சரித்திர வகுப்புக்கு முன்னதாகவே போய் உட்கார்ந்துவிட்டார்.

நூட், பிளெவ்ன்ஸ் பி. எச். டி யின் மேதையைப் பாராட்டினார். ஆனால் பெரும்பாலான பையன்கள் பிளெவ்ன்ஸை 'கிராக்' என்றார்கள். அவர் வகுப்பில் எல்லோரும் பத்திரிகை வாசித்துக் கொண்டிருப்பார்கள்; அல்லது, ஒருவரை ஒருவர் இடித்துத் தள்ளி சேஷ்டை பண்ணிகொண்டிருப்பார்கள்.

"மடையன் புருட்டாரி கூறியுள்ள தேதிக்கு இரண்டு ஆண்டுகளும் ஏழு நாளும் பின்னுல்தான் தெமிஸ்ட்டாகிலீஸின் இரண்டாவது திருமணம் நடந்தது" என்று தக்க ஆதாரங்காட்டி, சரித்திர பூர்வமாக பிளெவ்ன்ஸ் விளக்குவதை நூட் மிகக் கவனத்தோடு கேட்டுக்கொண்டிருப்பார். பிளெவ்ன்ஸின் கல்வித் திறமையை நூட் மிக ஆச்சரியத்துடன் போற்றுவார்.

ஞானமற்ற சில மாணவர்கள் அவருக்குப் பின்னுல் கோணங்கி காட்டுவார்கள்; கேலியாகச் சிரிப்பார்கள். "ஆகா, இவ்வாறு ஐயம் திரிபறக் கற்றிருக்கும் ஒருவரைப் பார்த்து, இந்த அறிவிலிகள் சிரிக்கிறுர்களே" என்று நூட் திருப்பிப் பார்ப்பார். அவர்களோ மேலும் நகைப்பார்கள். பிளெவ்ன்ஸிடம் இளமை ததும்புவதாக நூட்டிற்குத் தோன்றியது. பாவம், அவருக்காக இரக்கப்பட்டார். நூட், தம்மால் முடிந்த உதவியை அவருக்குச் செய்ய வேண்டும் என்று தீர்மானித்துக்கொண்டார்.

வகுப்பு முடிந்து மாணவர்கள் எல்லோரும் வெளியில் செல்லும் வரையில் காத்திருந்து, பிறகு பிளெவ்ன்ஸின் மேஜை அருகில் சென்றுர்.

"ஐயா, நீங்கள் மிகவும் நல்லவர். நான் உங்களுக்கு உதவியாக இருப்பேன். உங்களுக்கு வகுப்பில் யாராவது தொல்லை கொடுத்தால் என்னைக் கூப்பிடுங்கள். நான் அவர்களை செம்மையாக உதைக்கிறேன்" என்றுர் நூட்.

"அக்செல்ஃப்ராத் — நன்றி — அப்படிச் செய்ய வேண்டிய அவசியம் இருப்பதாக நான் நினைக்கவில்லை. மாணவர்களுக்கு விட்டுக்கொடுத்து வகுப்பை ஒழுங்காய் நடத்துபவன் என்று நான் பேர் வாங்கியிருக்கிறேன்.

சரி; வணக்கம் போய்வாருங்கள்; ஆ! ஒரு நிமிஷம் உங்களிடம் ஒன்று சொல்ல வேண்டுமென்று நினைத்தேன். ஆமாம் வகுப்பில் நான் உங்களிடம் கேள்வி கேட்கும்போது நீங்கள் எதற்காக ரொம்பவும் அலட்டிக் கொள்கிறீர்கள். ஒரு வரியில் சொல்ல வேண்டிய பதிலுக்கு நீங்கள் ஒரு பிரசங்கமே தொடங்கிவிடுகிறீர்களே ? மற்றும், இடை இடையே என்னிடம் ஏதோ விசேஷத்தைக் கண்டவர்போல் ஏன் சிரித்துக்கொள்ள வேண்டும்? வகுப்பைப் பொருத்தவரை அதற்கென்று உள்ள சம்பிரதாயப்படி நடக்கவேண்டும்; அதற்காகத் தான் சொன்னேன். வெளியில் என்னைப் பார்த்து எவ்வளவு வேண்டுமானாலும் சிரியும்; ஆட்சேபனை யில்லை '' என்றார்.

'' ஐயையோ ?'' என்று இழுத்தார் நூட். '' நான் எப்போதுமே வகுப்பில் உங்களைக் கேலி செய்தது இல்லையே ! நான் வகுப்பில் சிரித்ததும் இல்லையே ! அப்படியே சிரித்திருந்தால் அது எனக்கு அந்தப் பாடம் விளங்கி விட்டது என்ற திருப்தியை விளக்குவதாகவே இருக்கும்.''

'' சரி, சரி ; நல்லது ஞாபகம் இருக்கட்டும். வகுப்பில் அதிக ஜாக்கிரதையாகவே நடந்து கொள்ளுங்கள்; போய்வாருங்கள் '' என்றார்.

பிளெவ்ன்ஸ் பல் தெரியச் சிரித்துவிட்டுப்போய் விட்டார். நூட் அப்படியே அசந்து போய் வகுப்பில் உட்கார்ந்துவிட்டார். ஜன்னல் வழியாகக் கோடைக் கால வெயில் நெருப்பாகக் காய்ந்தது. வெளியில் பையன்களின் கூச்சல் கேட்டது. தது. வெளியில் பையன்களின் கூச்சல் கேட்டது. சட்டையின் கைகளைத் தடவி விட்டுக்கொண்டு கரும்

பலகையை வெறிக்கப் பார்த்தார் நூட். அக்டோபர் மாதத்தில் வயல்களிலெல்லாம் கதிரறுத்தபின் தாள் மட்டும் நிற்கும் காட்சி அவர் கண்முன் தோன்றியது. உடனே, தம் குடிசையைப்பற்றிய நினைப்பும் ஏற்பட்டது. தம்மைச் சுற்றிக் கல்லூரியினர் அனைவரும் நின்று கொண்டு கேலி செய்து சிரிப்பதாக அவருக்குத் தோன்றியதும் காளை மாதிரி கோபம் பொங் கியது. அவமானத்தால் தலை குனிந்தார். அவரது பூனை, எருமைக்கொம்பு நாற்காலி, குடிசை, அனுசரணை யார், ஊர் இவற்றையெல்லாம் மீண்டும் காணத் துடிக்க லானுர். அவர் கல்லூரிக்கு வந்து இப்பொழுது ஏறக் குறைய ஒரு மாதம் ஆகிறது.

அவர் வகுப்பு அறையை விட்டு வெளியே செல்லு முன் ஆசிரியர் அமரும் நாற்காலிக்குப் பின்னுல் போய் நின்றுகொண்டு வகுப்பை நோக்கினுர்.

"கொஞ்ச நாட்களுக்கு முன்னதாகவே நான் இங்கு படிக்க வந்திருந்தால் இதே இடத்தில் நான் ஒரு பேராசிரியராக நின்றிருக்கலாம்" என்று சொல்லிக் கொண்டார்.

இலையுதிர் காலத்தின் ஜிலுஜிலுப்பினுல் அமைதி யுற்றிருந்த தெரு வழியாக நடந்து சென்ற நூட், விட் சாலை வழியாக ஈஸ்ட் ராக்கின் சரிவிற்கு வந்துவிட்டார். பாறையோடு தழுவி நிற்கும் ஒளியின் அழகைக் கண்டார். இலைகளின் இன்னிசையையும் கேட்டார். நியூ இங்கிலாந்தைப் பற்றிய பழைய கதைகள் பரவி யுள்ள காற்றைச் சுவாசித்து மகிழ்ந்தார்.

"கவிதை எழுத வேண்டும் — கவிதை — எழுத முடியுமா என்று பார்க்க வேண்டும்" என்று சொல்லிக் கொண்டார் நூட்.

அவர் ஈஸ்ட் ராக்கின் உச்சிக்கே வந்து விட்டார். அங்கிருந்துகொண்டு ஏல் பல்கலைக் கழகத்தின் கட்டிடங்களைப் பார்த்தார். சமுத்திரத்திற்கு அப்பால் இருக்கும் ஆக்ஸ்போர்டைப் போலவும், லாங் அயிலண்டைப்போலவும் அவை இருந்தன. பருத்தி மரப் பிரதேசத்தராகிய அக்செல்ஃப்ராத்திற்கு இப்படிப்பட்ட இடங்களுக்கெல்லாம் தாம் வந்திருப்பதை நினைத்துப் பூரிப்பு ஏற்பட்டது.

ஈஸ்ட் ராக் என்ற பாறையின் விளிம்பில் யாரோ ஒருவன் பெஞ்சியின் மேல் அமர்ந்திருப்பதைக் கண்டார். அவன் வேறு யாருமில்லை—கில்பெர்ட் வாஷ்பர்ன் தான். கலா ரசிகன் என்றும் ஊரை ஏமாற்றுகிறவன் என்றும் அவனைப்பற்றி ரே கிரிபிள் கிண்டலாகச் சொல்லியிருக்கிறான். "அந்தப் பயல் இருப்பது வகுப்பிற்கே ஒரு மானக்கேடு. வகுப்பைவிட்டு வேறு எங்குமே போகாமல் அடைந்து கிடப்பவன். தன்னைப் பற்றி ரொம்பப் பெரிதாக நினைத்துக்கொண்டு யாரோடும் சேராமல் இருக்கிறான். பெரிய கவிஞன் என்ற எண்ணம் அவன் மனத்திற்குள். ஆனால் அவனுக்கு ஒரு வரிகூட சரியாக எழுதத் தெரியாது. பெரிய சோம்பேறி" என்று ரே அவனைப்பற்றி ஒரு தடவை நூட்டிடம் கூறியிருக்கிறான்.

வானத்தைப் பின்னணியாகக்கொண்டு அவன் அமர்ந்திருந்த காட்சி ரஸிக்க வேண்டிய காட்சிதான். கில் பொது நூட் அவனை உற்று நோக்கினார். கில் பொது வேலையில் நாட்டமுள்ளவன். யாரையும் எடுத்தெறிந்து பேசுபவன். கனஜோராய் உடை உடுத்தியிருந்த அவன் எதையோ சிந்தித்துக்கொண்டிருந்தான்.

"இந்தப் பயல் களத்து மேட்டில் வேலை செய்து வைக்கோலின்மேல் படுத்து உறங்கினானென்றால் வாழ்க்கையின் சுகதுக்கம் அவனுக்குத் தெரியும்" என்று ரே கிரிபிளின் தோரணையில் நூட்டும் அங்கலாய்த்தார்.

நூட்டைக் கண்டதும் கில் பெர்ட் வாஷ்பர்ன் எழுந்து அவரை நோக்கி வந்தான். நூட் உட்கார்ந்திருந்த பெஞ்சில் தயங்கித் தயங்கி உட்கார்ந்தான்.

"பிரமாதமான காட்சி" என்று ஆசை ததும்பும் இள நகையோடு நூட்டிடம் கில் கூறினான்."

கல்லூரிக்கு வந்து காணவேண்டும் என்று தாம் கருதியிருந்த எல்லா விஷயமும் அந்த இள நகையில் அடங்கியிருப்பதாக நூட் நினைத்தார். அவர் தம்முடைய சுபாவமான வழக்கப்படி தட்டுத்தடுமாறிக் கொண்டு நாக்குழறக் கூறினார்:—

"ஆமா, ஆத்தன்சின் கோட்டை கொத்தளங்கள் இங்கிருக்கிற மாதிரிதான் இருந்திருக்க வேண்டுமென்று நான் நினைக்கிறேன்," என்றார். நூட் இப்படிச் சொன்னபோது அவர் முகத்தில் விழுந்திருந்த ஒவ்வொரு சுருக்கமும் ஆழமாகியது.

"இங்கே பாருங்கள், அக்செல்ஃப்ராத்! நான் உங்களைப்பற்றி அடிக்கடி நினைப்பதுண்டு."

"அப்படியா?..."

"நாம் ஒருவரை ஒருவர் தெரிந்துகொள்ள வேண்டுமல்லவா? என்ன, நம்ம இரண்டு பேரையும் தானே வகுப்பிலே ஒதுக்கி வைத்திருக்கிறார்கள். நாம் இங்கே கனவு காண வந்திருக்கிறோம். அச்சீசன்,

கிப்லட்ஸ் உங்க அறையில் வசிப்பவர்—இந்தப் பயல்கள் எல்லாம் நம்மை முட்டாள்களாக நினைக்கின்றனர். படித்து மார்க்கு வாங்க வராதவர்கள் என்று நம்மைப் பற்றிக் கூறுகிறார்கள். என் கருத்தை நீங்கள் ஒப்பமாட்டீர்கள். ஆனால் நான் நினைக்கிறேன்—நாம் ரெண்டு பேரும் ஒரே நிலையில் இருக்கிறோம் என்று.''

''நான் இங்கு கனவு காண வந்திருக்கிறேன் என்று நீ எவ்வாறு முடிவு கட்டினாய்?'' என்று நூட் சிலிர்த்தார்.

''ஓ சாப்பாட்டுக் கூடத்திலே உங்கள் பக்கத்திலே தானே நான் உட்கார்ந்திருப்பேன். காலேஜுக்கு வந்ததற்கான காரணம் பற்றி அச்சீசன் விவாதிக்கும் போதெல்லாம் அவனை மட்டம் தட்டிப் பேசி, அவனை வாயடைக்கச் செய்ததை நான் பார்த்திருக்கிறேனே! ஆம், இது பழைய விஷயம்தான். இருந்தாலும் காயினும், ஆபேலும் ஈடன் விவசாயக் கல்லூரிக்குச் சென்ற பின்பு கூட இதைப்பற்றிப் பேசி இருப்பார்களா? ஆபெல் இருக்கிறானே, அவன் மார்க்கு மேலே ஆசை கொண்டவன்; அடக்க ஒடுக்கமானவன். காயின்தான் கவிதை கற்க விரும்பினவன்.''

''ஆமா, ஆமா! கணக்கு வகுப்பில்கூட இந்தக் கவிதையை வாசித்துக்கொண்டிராதே. அட்சர கணிதத்திலே மார்க்கு வாங்குகிறதுக்கு அது பயன் படாது' என்று புரபசர் ஆதாம் அடிக்கடி சொல்வது எனக்கு ஞாபகம் வருகிறது'' என்றார் நூட்.

''வாஸ்தவம், இதோ பாருங்கள். இந்தப் புத்தகம் உங்களுக்குப் பிடிக்குமென்று நினைக்கிறேன். இது, பார்க் முஸ்ஸெட் எழுதிய புத்தகம். இதை வாசிக்கலா

மென்று எடுத்து வந்தேன். போன வருஷம் வெளிநாடு சென்று திரும்பிய போது இதை வாங்கினேன்.''

கில் தனது சட்டைப் பையிலிருந்து ஒரு சிறிய புத்தகத்தை எடுத்தான். அப்படிக் கையடக்கமாக அழகாகப் பைண்ட் செய்த புத்தகத்தை நூட் அதற்கு முன் பார்த்ததே இல்லை. நூட் அதைத் தனது பெரிய கைகளால் வாங்கிக்கொண்டார். புத்தகம் அவரது பெரிய கைக்குள் மறைந்துவிட்டது. பளபளப்பான அட்டையைத் தடவிப் பார்த்தார்; ஏடுகளைப் புரட்டினர். புரியாத ஏதோ ஓர் அன்னிய மொழியில் அது அச்சடிக்கப் பட்டிருந்தது.

''என்னலே இதை வாசிக்க முடியாது. ஆனலும் இதுமாதிரி புத்தகந்தான் எனக்கு எப்போதுமே பிடிக்கும்'' என்று பெருமூச்சுவிட்டார் நூட்.

''நான் வாசிக்கிறேன்; கேளுங்கள். இது பிரஞ்சுக் கவிதை.''

கில் அந்த அன்னிய பாஷைக் கவிதையை ராகம் போட்டு உரக்கப் படித்தான். நூட் அறுபத்தைந்து வருட வாழ்க்கையில் ஓங்கிக் கிடந்த ஏக்கத்தை அது தணித்தது.

''வெகு அருமை'' என்ருர்.

''கேளுங்கள்! இன்றைக்கு இரவு ஹெர போட்டிலே சேயி கச்சேரி கேட்கப் போவோம். அவர்களில் சிலபேரைக் கூப்பிட்டேன். அவர்கள் வருகிற மாதிரி தெரியவில்லை'' என்ருன் கில்.

சேயி என்பவர் யார் என்பது நூட்டுக்குத் தெரியாது. எனினும், ''சரி நிச்சயமாய் நான் வருகிறேன்'' என்ருர்.

ஹெர்ஃபோட்டுக்குப் போனவுடன் சாப்பிடவும் கேலரி டிக்கட்டு வாங்கிப் பாட்டுக் கேட்கவும், பிறகு மெரிடென் வரையில் திரும்பி வருவதற்கும்தான் அவர்களிடம் பணம் இருந்தது.

மெரிடெனுக்கு வந்ததும், நியூ ஹேவனுக்கு நாம் நடந்தே போவோம். உங்களால் நடக்க முடியுமா?'' என்றான் கில். நியூ ஹேவன் அங்கிருந்து நான்கு மைலா, நாற்பது மைலா என்பது நாட்டிற்குத் தெரியாது எனினும், 'சரி' என்றார். கடந்த சில மாதங்களாகவே அவருக்குத் தம் பாரமான உடலைத் தூக்கிக் கொண்டு நடப்பது சிரமமாக இருந்தது. ஆனால் இன்று அவருக்கு அப்படித் தோன்றவில்லை.

நாட் முதல் முதலாகக் கேட்ட சங்கீதக் கச்சேரி, சேயி கச்சேரிதான். சேயி பாட்டு, முன்பு அவர் கதைகளில் படித்து, நம்ப முடியாதவை என்று நினைத்த எல்லாவற்றையும் நினைவுக்குக் கொண்டுவந்தது. வளர்ந்துயர்ந்த வீரர்கள், வெண்துகில் உடுத்துத் தொட்டால் துவண்டுவிடும் துடியிடை இளவரசியர், தூரதேச நகரங்களின் மாயக் கோட்டை வாயில்கள், வீரதீர பராக்கிரமச் செயல்கள் இவ்வளவையும் கண்டார்.

அக்டோபர் மாதத்து நிலவு வெளிச்சத்தில் அவர்கள் உரக்கப் பேசிக்கொண்டே வழி நடந்தனர்.

வழியில் ஆப்பிள் திருடப் போகும்போது நாய்கள் குலைக்கும். கில் தான் பெரும்பாலும் பேசிக்கொண்டு வந்தான். நாட் கேட்டுக்கொண்டே வந்துகொண்டிருந்தார். அதோடு அந்தக் காலத்தில் பனிக்காற்று, அறுவடை, கதிர் குலைதள்ளும் காலம் இவற்றைப்பற்றி

எல்லாம் தாம் கேட்ட கதைகளினூடே நூட்டின் மனம் நுழைந்து களித்தது. அச்சீசன், கிரிபிள் ஆகிய இருவரையும் அவர்கள் மனமாரத் திட்டினர்கள். இரண்டு பேரும் ஏதோ கந்தருவர்களைப் போல கை கோத்துக் கொண்டு தனி நடை போட்டனர். கில்பெர்ட் ஒரு வேட்டுவப் பாணனைப் போல் காட்சியளித்தான்.

அவர்கள் கல்லூரிக் காம்பவுண்டை நெருங்கும் போது ஏறக்குறைய காலை ஐந்து மணி இருக்கும்.

தம்முடைய உணர்ச்சிகளை வார்த்தைகளால் வெளியிட முடியாமல் தவித்தபடி கடைசியில் "அருமையாய் இருந்தது. இப்பொழுது நான் தூங்கப் போகிறேன். கனவிலும் இதைப்பற்றியே...... என்ருர் நூட்.

"தூங்கப் போகிறீர்களா! பசிக்கவில்லையா? இங்கேயே ஒரு நிமிஷம் காத்திருங்கள். நான் என் அறைக்குப் போய் கொஞ்சம் பணம் கொண்டு வருகிறேன். இருவரும் ஏதாவது சாப்பிடுவோம். கொஞ்சம் தயவு பண்ணி...!" என்றபடி கில் புறப்பட்டான்.

இரவு பூராவும் கூட நூட் காத்துக்கொண்டிருக்கத் தயார். அறுபத்தைந்து வயது வரை வாழ்ந்திருக்கிருர். ஆயிரத்து ஐநூறு மைல்கள் பிரயாணம் செய்திருக்கிருர் கில் பெர்ட் வாஷ்பர்னைக் கண்டுபிடிப்பதற்காக ரோ கிரிபிளின் தொல்லைகளையெல்லாம் சகித்துக்கொண்டு போயிருக்கிருர்.

கவிஞர்களுக்கு ஏற்றதான உணவு விடுதியைத் தேடி கோவில் தெரு வழியாக அவர்கள் சென்றனர். படாடோபமான இளைஞன் ஒருவனும் கிழவன்

ஒருவனும் தோள்மேல் கை போட்டுக்கொண்டு போவதைப் பார்த்துப் போலீஸ்காரர்கள்கூட ஆச்சரியப்பட்டார்கள். எல்லாச் சாப்பாட்டு விடுதிகளுமே அடைத்துக் கிடந்தன.

"செட்டோ கடை இப்பொழுது திறந்திருக்கும். ஏதாவது சாப்பிட வாங்கிக் கொண்டு என் அறைக்குப் போவோம். அங்கே தேயிலை இருக்கிறது" என்றான் கில்.

இருளாக இருந்த தெருவில் இரவு நேரத்தில் வேட்டைக்காரனைத் திரிந்து பழக்கப்பட்டவரைப்போல் கில் அருகில் அனுயாசமாக நடந்து போய்க்கொண்டிருந்தார் நூட். ஒக் வீதியில் கொஞ்ச நேரத்திற்கு முன்புதான் கடைகளைத் திறந்து வைத்திருந்தார்கள். அது ஏழை மக்கள் வசிக்கும் பகுதி. கில் ஒரு கடைக்குள் நுழைந்து பிஸ்கட் டின், பாலாடைக் கட்டி, கோழிக்கறி, பால் பானம் எல்லாம் வாங்கிக்கொண்டிருந்தான். நூட் வீதியில் நின்றுகொண்டு கருக்கல் வேளையில் கிழக்கு வெளுக்கின்ற காட்சியையும், பால்போல் மங்கலாக எரியும் தெரு விளக்குகளையும் பார்த்து ரசித்துக்கொண்டிருந்தார். கடைகளுக்கு முன்னால் தொங்கவிடப்பட்டிருந்த பெயர்ப் பலகைகளும், ருசிய எழுத்துக்கள் பொறிக்கப்பட்டிருந்த விளம்பரப் பலகைகளும், சால்வை போர்த்திய பெண்களும், தாடிவைத்த யூத குருக்களும், அவரது கண்களில் பட்டனர். இவை என்றும் உள்ளத்தை விட்டு அகலாத காட்சிகளாக அவர் மனத்தில் பதிந்து போயின. அன்று இரவு தாம் தூர தேசம் போனதுபோன்ற எண்ணம் அவருக்கு ஏற்பட்டது.

நூட் கற்பனை செய்துகொண்டிருந்தது போல் கில்வாஷ்பெர்னின் அறை பிரமாதமாக இருக்கவில்லை. அது அவனது பாரிஸ் வாழ்க்கையின் பிரதிபலிப்பாக இருந்ததே ஒழிய அவனது புதுவாழ்க்கைக்குப் பொருத்தமானதாய் இல்லை. தார்ப் பாய் வேய்ந்த குடிசையிலும், பன்றிகள் திரியும் பண்ணையிலும் வாழ்ந்த நூட் அக்செல்ஃப்ராத் திருப்தி நிறைந்த கண்களோடு அறையை நோக்கினார். அங்கிருந்த சாய்வு நாற்காலியில் நூட் கோழிபோல் முடக்கிச் சாய்ந்தார். கில் தீப்பற்ற வைத்து ஒரு பிரம்பு மேஜை மீது உணவுப் பதார்த்தங்களைப் பரப்பினான்.

சாப்பிடும்போது பெரிய பெரிய மனிதர்களைப் பற்றியும் வீரதீர லட்சியங்களைப் பற்றியும் பேசினர். அது நல்ல பயனுள்ள பேச்சுத்தான். இடை இடையே அச்சீசன், கிரிபிள், பிளெவன்ஸ் இவர்களெல்லாம் அவர்கள் பேச்சில் வந்து போனார்கள். அந்த நேரத்தில் அவர்கள் நிம்மதியாகத் தங்கள் படுக்கையில் உறங்கிக் கொண்டிருப்பார்கள். ஸ்டீவன்சன், அனடோல், பிரான்ஸ் முதலியவர்கள் எழுதியவற்றில் சில பகுதிகளை கில் வாசித்துக் காட்டினான். கடைசியில், அவன் தனது சொந்தக் கவிதைகளையும் வாசித்துக் காட்டினான்.

கவிதை நன்றாக இருந்ததா, இல்லையா என்ற கேள்விக்கு இடமில்லை. கவிதை எழுதிய ஒருவனைத் தாம் நேருக்கு நேர் பார்க்கிறோம் என்ற விஷயமே ஆச்சரியத்தை விளைவித்தது.

பேச்சின் வேகம் குறையலாயிற்று; இருவரும் கொட்டாவி விடவும் தொடங்கினார்கள். நூட் சட்டென எழுந்து, "போய் வருகிறேன்" என்று சொன்ன போது, கொஞ்சம் நேரம் தூங்கிவிட்டு வந்து, மறுபடியும் அந்த முடிவில்லாத இரவின் இன்பசாகரத்தில் நீந்தி விளையாட வேண்டுமென்ற எண்ணம் அவருக்கு ஏற்பட்டது.



ஆனால், அவர் அந்த அறையினின்றும் வெளியேறியபோது பொழுது விடிந்திருந்தது. காலை ஆறரை மணி இருக்கும். சிகப்பான மதிற்செங்கலின் மேல் சூரிய ஒளி பட்டுத் தெறித்தது.

"இனிமேல், அவன் அறைக்கு நான் அடிக்கடி போகலாம். கடைசியில் எனக்கு ஒரு நல்ல நண்பன் கிடைத்து விட்டான்" என்று தனக்குள் நூட் கூறிக் கொண்டார். கில் எடுத்துக்கொண்டு போகும்படி கேட்டுக்கொண்ட முஸ்ஸெட் எழுதிய புத்தகத்தைத் தன் மார்போடு அணைத்துக்கொண்டார்.

தான் வாசித்த வெஸ்ட்டிவினிட்டியை நோக்கி அவர் நடந்த போது தாம் மிகக் களைத்துப் போயிருப்பதை நூட் உணர்ந்தார். பகற்பொழுது ஏற ஏற அதற்கு முந்தின இரவு நடந்த சம்பவங்களை நம்ப முடியாத நிலை அதிகரித்தது.

அவர் தம் அறைக்குள் நுழைந்ததும் ஒரு முறை பெருமூச்சு விட்டார்: "வயோதிகமும் வாலிபமும் அதிக நாளைக்கு ஒன்றோடு ஒன்று சேர்ந்திருக்க முடியாது" என்று கூறிக்கொண்டார். மாடிப் படிகளில் ஏறிய போது, "மறுபடியும் அந்த இளைஞன் என்னைச் சந்தித்தால் அவனுக்கு என்னைப் பிடிக்காது. என் மனத்தில் உள்ளதையெல்லாம் முன்பே அவனிடம் சொல்லிவிட்டேன்" என்று கூறிக்கொண்டார். அறையைத் திறந்த போது, "இந்தக் கல்லூரிக்கு வந்ததற்கு இந்த ஓர் இரவு இன்பமே போதும் என் அநுபத்

தைந்து வருஷ வாழ்க்கையின் லட்சியம் பூர்த்தியாகி விட்டது. இந்த இன்பம் பங்கம் அடையுமுன் நான் போய்விட வேண்டும் " என்று கூறிக்கொண்டார்.

கில்லுக்கு ஒரு கடிதம் எழுதி வைத்துவிட்டு, தம் சாமான்களை மூட்டை கட்டினர். குறட்டை விட்டுக் கொண்டு தூங்கிய ரே கிரிபிளை அவர் எழுப்பவில்லை.

அன்று பிற்பகல் ஐந்து மணிக்கு மேற்கே சென்ற இரயில் வண்டியில் மலர்ந்த முகத்தோடு ஒரு வயோதிகர் உட்கார்ந்திருந்தார். அவரது கண்களில் அமைதி ஒளி வீசியது. அவர் கையில் சிறிய பிரஞ்சு மொழிப் புத்தகம் ஒன்று இருந்தது. அதில் ஓர் ஆச்சரியம் என்னவென்ருல், அந்த மனிதருக்கு பிரஞ்சு மொழி துளியும் தெரியாது என்பதுதான் !

---

# பின்னிக்னுக்குப் பண உதவி

## எஃப்ஸ்காட் பிட்ஸ்ஜெரால்டு

[முதலாம் உலக யுத்தம் முடிந்த, முதல் 10 ஆண்டு காலமான ஜாஸ் காலத்தின் முக்கியஸ்தராக விளங்கியவர், எஃப்ஸ்காட் பிட்ஸ்ஜெரால்டு (1896-1940) ஆவார். அவர் மின்சோட்டா மாநிலத்திலுள்ள செயிண்டு பாம் என்ற இடத்தில் பிறந்தவர். பிரின்ஸ்டனில் கல்வி கற்றவர். அங்கு பயிலுவதை நிறுத்திக்கொண்டு A.E.F.-ல் இளம் அதிகாரியாகச் சேர்ந்து நல்ல பெயருடன் வேலை பார்த்து வந்தார். பிற்காலத்தில் அவர் எழுத நேர்ந்த புத்தகங்களுக்கேற்ற பூர்வாங்கப் பயிற்சி அவருக் கேற்பட்டது. தொடக்கத்தில் அவர் எழுதிய "சுவர்க்கத்தின் இப்பக்கம்", "அழகானதும் தள்ளப்பட்டதும்" என்ற இரு புத்தகங்கள் நல்ல பெயரோடு விளங்கியதுடன் இளம் தலைமுறையினர்க்கான மற்ற கதைகளின் நடைக்கு வழிகாட்டி, இளைஞர்களுடைய உரையாடலும் மனப்போக்கும் அவ்விரண்டு புத்தகங்களை யொட்டியே அமையலாயின. 1929-ல் ஏற்பட்ட பொருளாதார நெருக்கடி அதுகாறும் பிட்ஸ்ஜெரால்டு பொறுப்பற்ற எந்த வாழ்க்கை குறித்து எழுதி வந்தாரோ அதற்கு முடிவு கட்டியது. அவருடைய வாழ்விலேயே பல இன்னல்கள் நேர்ந்தமையே அவருக்கு வாழ்க்கை குறித்து ஆழ்ந்த, தெளிவான அறிவை அளித்தது. அதன் காரணமாக 1930-க்குப் பிறகு அவர் எழுதிய கதைகள் அவருடைய முந்தைய நூல்களைக் காட்டிலும் சிறந்தவையாக

வும் ஆழ்ந்த அறிவின் படைப்பாகவும் பல்வேறு உணர்ச்சிகளின் சித்திரிப்பாகவும் உள்ளன. "மாபெரும் கேட்ஸ்பியும்", "மென்மையான இரவும்" அவருடைய சிறந்த நாவல்களாகும். "பின்னிகனுக்குப் பண உதவி" என்னும் இந்நூல், நூலாசிரியரின் பிரதிநிதி, வெளியீட்டாளர் ஆகியவர்களுக்கு அவர் கொடுக்க வேண்டிய கடன்களை வருணிக்கும் ஒரு நகைச்சுவை நிரம்பிய நூலாகும் ]

* * *

பின்னிகனுக்கும் எனக்கும், நாங்கள் எழுதும் கட்டுரை கதைகளை விற்றுக் கொடுக்கும் ஏஜெண்ட் ஒருவரேதான். திரு கேனனுடைய அலுவலகத்திற்கு நான் அடிக்கடி போயிருக்கிறேன். நான் போனபோதெல்லாம் ஒன்று பின்னிகன் வந்துபோன சமயமா யிருக்கும்; அல்லது வரப்போகும் சமயமா யிருக்கும். ஆகவே, நான் பின்னிகனைச் சந்தித்ததேயில்லை. இதே போல் எங்கள் இருவரது பிரசுரகர்த்தரும் ஒருவரேதான். அந்த பிரசுராலயத்திற்கும் நான் அடிக்கடி சென்றிருக்கிறேன். நான் போனபோதெல்லாம் 'பின்னிகன் இப்பொழுதுதானே வந்து போனார்' என்று கூறியிருக்கிறார்கள். அவர்கள் பின்னிகனைப் பற்றி, "ஓ, பின்னிகனா, இன்றுகூட வந்திருந்தாரே" என்று ஆழ்ந்த பெருமூச்சோடு பேசிக் கொள்வதிலிருந்து, அந்தப் பிரசித்தி பெற்ற ஆசிரியரின் வருகை அங்கு முக்கியத்துவம் பெற்றிருந்தது என்று தெரிந்துகொண்டேன். அவர் திரும்பிச் சென்றபொழுது ஏதோ ஒன்றைஎடுத்துச் சென்றிருக்கிறார் என்பதை சில குறிப்புக்களால் நான் உணர முடிந்தது. அது அவரது சிறந்த நாவல்



களில் ஒன்றின் கையெழுத்துப் பிரதியாக இருக்கலாம் என்று ஊகித்தேன். அவருடைய புத்தகங்களைச் சிறப்பிக்கும் தெளிந்த நடையையும் நகைச்சுவையையும் தோற்றுவிப்பதற்காக அவர் தம் கையெழுத்துப் பிரதிகளை ஒன்றுக்குப் பத்துமுறை திருத்தி யமைப்பது வழக்கமாம். ஆகவே, அவர் இப்பொழுது 'அதை' இறுதிப் பரிசீலனைக்காக எடுத்துச் சென்றிருக்கக் கூடும் என்று எண்ணினேன். ஆனால் பின்னிகன் அடிக்கடி வந்து போனபோதெல்லாம் பெரும்பாலும் பணம் சம்பந்தமாகத்தான் என்பதை நான் நாளாவட்டத்தில்தான் தெரிந்துகொண்டேன்.

"அடடா! நீங்கள் இப்பொழுதே போகிறீர்களா? நாளைக்குப் பின்னிகன் இங்கு வரப் போகிறாரே" என்பார் திரு கேனன். சிறிது ஆழ்ந்த யோசனைக்குப் பின் "நாளைய தினம் பின்னிகனோடு நான் கொஞ்ச நேரத்தைக் கழிக்க வேண்டியிருக்கும்" என்பார்.

டெலிங்கர் எங்கோ பக்கத்தில் இருக்கிறான் என்று கேள்விப்பட்டு நடுநடுங்கிய ஒரு பாங்கி அதிபரின் பேச்சை அவர் குரல் எனக்கு நினைவூட்டியது. அவருடைய கண்கள் எங்கேயோ தூரத்தில் நோக்கிக் கொண்டிருந்தன; தனக்குத்தானே அவர் பேசிக் கொண்டார்:

"நிச்சயமாக அவர் ஒரு கையெழுத்துப் பிரதியை எடுத்து வரலாம். உங்களுக்கும் தெரிந்திருக்குமே! அவர் இப்பொழுது ஒரு நாவலை எழுதிக் கொண்டிருக்கிறார். ஏன், ஒரு நாடகம்கூட எழுதுகிறாரே." எங்கோ நிகழ்ந்த ஒரு சுவையான நிகழ்ச்சியை மனக்கண்ணால் காணுபவரைப் போல் அவர் பேசினார். கண்களில்

நம்பிக்கை ஒளி தோன்ற அவர் தொடர்ந்தார்: "குறைந்த பட்சம் அவர் ஒரு சிறு கதையாவது கொண்டுவருவார்."

"ஓ, அவர் ஒரு சகலகலா வல்லவர் இல்லையா?" என்றேன் நான்.

ஆமாம். அவரால் எதையும் எழுத முடியும். மனம் வைத்துவிட்டாரென்றால் எதையும் செய்து விடுவார். இந்த மாதிரியான திறமையை வேறெவரிடத்தும் காண முடியாது என்று கேனன் பெருமிதத்துடன் கூறினர். "அவருடைய சமீப காலப் புத்தகம் எதையும் நான் பார்க்கவில்லை" என்றேன்.

அப்படியா? ஆனல் அவர் கடுமையாகவே உழைக்கிரூர். சில சஞ்சிகைகள் அவருடைய கதைகளை வாங்கி..............

"வைத்துக் கொண்டிருக்கின்றனவா? ஏன்? எதற்காக?"

"எல்லாம் நல்ல காலத்தை எதிர் நோக்கித்தான். பின்னிகனுடைய சிருஷ்டிகளை வைத்திருக்க அவர்கள் ஆசைப்படுகிரூர்கள்."

நிறையச் சம்பாதிக்கக்கூடிய பெயர் அவருக்கு இருக்கிறது. அவர் சிறந்த முறையிலேயே தம் வாழ்க்கையை ஆரம்பித்திருக்கிரூர். அதன் பிறகு புகழில் இறக்கம் ஏற்பட்ட போதிலும் சில ஆண்டுகளுக்கு ஒரு முறை அது மீண்டும் மேல் நோக்குப் பெற்றிருக்கிறது. அமெரிக்க எழுத்தாளர்களின் மத்தியில் அவர் ஒரு நிரந்தரமான இடத்தைப் பிடித்துக் கொண்டிருந்தார். அவரது வார்த்தை ஜாலம் பிரமிக்க வைப்பதாகும். அவருடைய வாக்கியங்கள், பாராக்கள்,



அத்தியாயங்கள் எல்லாம் சிறந்த கற்பனையின் அற்புத சிருஷ்டிகளாக சுடர்விட்டுப் பிரகாசித்தன. குயுக்தியுள்ள ஏழை. சினிமா எழுத்தாளர் ஒருவர் அவருடைய புத்தகங்களில் முரண்பாடற்ற கதையைப் பார்க்க முடியவில்லை என்று கூறியபொழுதுதான் அவருக்கும் பகைவர்கள் இருக்கிரூர்கள் என்பதை நான் உணர்ந்தேன்.

"படிக்கும் பொழுது அவருடைய கதைகள் நேர்த்தியாகத்தான் இருக்கும். ஆனல் அலங்காரங்களை நீக்கிவிட்டு சாராம்சத்தை மட்டும் பார்த்தால் அது வெறும் உளறல் ஆகத்தான் இருக்கும்" என்று அவர் கசப்போடு கூறினர்.

நான், திரு கேனனுடைய அலுவலகத்திலிருந்து ஐந்தாவது தெருவிலுள்ள என்னுடைய பிரசுரகர்த்தர்களின் காரியாலயத்திற்குச் சென்றேன். அங்கேயும் அவர்கள் பின்னிகனுடைய வரவை மறுநாள் எதிர்பார்த்துக் கொண்டிருப்பதாகத் தெரிந்தது. உண்மையில் பின்னிகனைப் பற்றிய விஷயங்களில் அவர்கள் பெரிதும் சிரத்தை காட்டுகிரூர்கள். எனது புத்தகங்கள் பற்றிப் பேசுவதற்காக ஏற்பாடு செய்யப்பட்ட தேநீர் விருந்தின் போதுகூட பின்னிகன் பற்றிய பேச்சுத்தான் அதிகமாயிருந்தது. எனக்கு விருந்தளித்த திரு ஜார்ஜ் ஜாகர்கூட தாமாகவே பின்னிகனைப் பற்றிப் பேசத் தொடங்கினர்:

உண்மையில் பின்னிகன் ஒரு சிறந்த எழுத்தாளர் தான்" என்றூர் அவர்.

"சந்தேகமில்லாமல்" என்றேன் நான்.

"உங்களுக்குத் தெரியுமா? உண்மையில் அவர் மிகவும் நன்ருகவே இருக்கிரூர்."

அதைப்பற்றி நான் ஒன்றும் கேட்காதபடியால், "அதிலென்ன சந்தேகம்?" என்றேன்.

"ஒன்றுமில்லை. கொஞ்ச நாட்களாக, பாவம், அவருக்கு ஏதோ கெட்ட காலம்."

அநுதாபத்தோடு நான் தலையசைத்தேன். "குறை குளத்தில் கரணம் அடிப்பது ஆபத்தான விஷயம் என்பது எனக்குத் தெரியும்."

இல்லையே; அது குறை குளம் அல்ல. அதில் நிறைய நீர் இருந்தது; விளிம்பு வரைத் ததும்பிக் கொண்டிருந்தது. இது பற்றிப் பின்னிகன் கூறுவதை நீங்கள் கேட்கவேண்டும்.

சிரிக்கச் சிரிக்கச் சொல்லுவார். பின்னிகன் சிறிதே சோர்வுற்றிருந்ததால் நீச்சல் குளத்தின் கைப்பிடிச் சுவர் மீதிருந்து குதித்துக் கொண்டிருந்திருக்கிருர். அந்தச் சமயத்தில் சில யுவதிகள் பதினைந்து அடி உயரத்திலிருந்த பலகையிலிருந்து கரணம் அடிப்பதைப் பார்த்தாராம். உடனே அவருக்குத் திடீரென்று அவரது வாலிபப் பிராயம் ஞாபகத்திற்கு வந்து விட்டதாம். உடனே அவர் தாமும் உயரத்திற்குச் சென்று அன்னப் பட்சியைப் போல் அழகாக நீரில் குதித்ததாகச் சொல்கிருர். ஆனல், அவர் அந்தரத்தில் இருக்கும்போதே—தண்ணீரைத் தொடும் முன்னரே—அவருடைய தோள்பட்டை எலும்பு முறிந்து விட்டது" என்று கூறி அவர் என் முகத்தைப் பார்த்தார். "என்ன ஆச்சரியப் படுகிறீர்களே! இந்த மாதிரி நிகழ்ச்சிகளைப் பற்றி நீங்கள் கேள்விப்பட்டதில்லையா? பந்தை எறிபவனின் புஜம் மூட்டிலிருந்தே பிய்த்துக்கொண்டு போய்விடுவது பற்றி?"



அந்தச் சமயத்தில் இம் மாதிரியான நிகழ்ச்சி எதையும் என்னல் நினைவிற்குக் கொண்டுவர முடியவில்லை.

கனவில் பேசுபவர் போல் அவர் தொடர்ந்து பேசினுர்: "பின்னிகன் விதானத்தில் இருந்தே எழுத வேண்டியதாயிற்று."

"என்ன விதானத்திலா?"

"ஆம்; விதானத்தில்தான்! அவரால் எழுதுவதை நிறுத்த முடியாது. நீங்கள் நம்பாமல் இருக்கலாம். ஆனல், அவருக்கு எழுத நிறைய விஷயங்கள் இருக்கின்றன. அதோடு திட மனதும் கொண்டவர். அதனல் ஏதோ ஒரு விதமான ஏற்பாட்டைச் செய்து, எழுத வேண்டிய காகிதத்தை விதானத்திலிருந்து தொங்கவிட்டுக் கொண்டு, மல்லாந்து படுத்த படியே அதில்—ஆகாயத்திலேயே எழுதினுர்."

அது மிகவும் துணிச்சலான ஏற்பாடுதான் என்பதை நான் ஒப்புக்கொள்ள வேண்டியிருந்தது.

"அது அவரது எழுத்து வேலையைப் பாதிக்கவில்லையா?" என்று நான் விசாரித்தேன். "சீனக்காரர்கள் செய்வதுபோல் அவரது கதைகளைக் கடைசியிலிருந்து படிக்க வேண்டி இருந்ததோ?"

"அவை முதலில் கொஞ்சம் குழப்பமாகத்தான் இருந்தன" என ஒப்புக்கொண்ட அவர், "ஆனல் இப்பொழுது எல்லாம் சரியாகிவிட்டது. அவரிடமிருந்து எனக்கு நிறையக் கடிதங்கள் வந்திருக்கின்றன. அவை எல்லாம் பழைய பின்னிகனுடைய ஜீவத் துடிப்பும் நம்பிக்கையும் எதிர்காலத் திட்டங்களும் கொண்டவையாகவே இருக்கின்றன" என்ருர்.

எங்கேயோ பார்க்கும் வெறித்த நோக்கு அவர் முகத்தில் தோன்றுவதைக் கவனித்த நான், பேச்சை என் சம்பந்தப்பட்ட விஷயங்களுக்குத் திருப்பினேன். நாங்கள் அவரது அலுவலகத்திற்குத் திரும்பியதும் மீண்டும் அதே பேச்சு ஆரம்பமாகியது. அதுவும் நான் எப்பொழுதும் செய்யாத காரியத்தைச் செய்துவிட்டதன் விளைவு அது. நான் பிறருக்கு வந்த தந்தியைப் படித்த குற்றத்தை ஒப்புக்கொள்ள வெட்கமடைகிறேன். என்ன செய்வது? நான் ஜாகருடைய அலுவலகத்திற்குச் சென்ற போது, அவர் கூடத்தில் இருந்தார். நான் அவரது அறைக்குச் சென்று அமர்ந்த இடத்தில் அந்தத் தந்தி என் முன்னால் மேஜை மேல் பிரித்துக் கிடந்ததால் அதை நான் படிக்க வேண்டியதாகிவிட்டது.

> “டைப்பிஸ்டிற்குச் சம்பளம் கொடுக்கவும் முடி வெட்டிக் கொள்ளவும், பென்சில்கள் வாங்கவும் குறைந்தது ஐம்பதாவது வேண்டும். வாழ்க்கை மிகச் சிரமமாக இருக்கிறது. நல்ல செய்திகளைப் பற்றிய கனவுடனேயே உயிரைப் பிடித்துக் கொண்டிருக்கும்
>
> பின்னிகன்.”

ஐம்பதே டாலர்கள்! என் கண்களையே என்னால் நம்ப முடியவில்லை. பின்னிகனுடைய சிறு கதைகளின் மதிப்பு சுமார் மூவாயிரம் டாலர்கள் என்று நான் கேள்விப்பட்டிருக்கிறேன். ஜார்ஜ் ஜாகர், நான் தந்தியை வெறித்து நோக்குவதைப் பார்த்துவிட்டார். அவர் அதைப் படித்துவிட்டு என்னைக் கூர்ந்து நோக்கியபடி பேச ஆரம்பித்தார்:



“நான் எப்படி மனதார இதைச் செய்ய முடியும் என்று தெரியவில்லை.”

நியூயார்க்கிலுள்ள செல்வம் கொழிக்கும் பிரசுர கர்த்தர்களின் அலுவலகத்தில்தானா இருக்கிறேன் என்ற சந்தேகம் எனக்கு ஏற்பட்டுவிட்டது. சுற்றுமுற்றும் பார்த்தேன். அப்பொழுதுதான் அந்தத் தந்தியை நான் தவறாக அர்த்தம் செய்து கொண்டிருக்கிறேன் என்பதை உணர்ந்தேன். பின்னிகன் 50 ஆயிரம் டாலர் முன் பணமாகக் கேட்டிருக்கிறார். அவ்வளவு பெரிய தொகை எந்தப் பிரசுரகர்த்தாவுக்கும் ஒரு பெரிய அதிர்ச்சியைத்தான் கொடுக்கும் என்பதில் சந்தேகம் இல்லை.

அதிருப்தியோடு திரு ஜாகர் கூறினார்: “போன வாரம்தான் அவருக்கு நூறு டாலர் அனுப்பினேன். ஒவ்வொரு சமயத்திலும் இது என் தொழிலை மிகவும் பாதிக்கிறது. அதனால் என் பாகஸ்தர்களிடம்கூட இதைச் சொல்ல எனக்குத் தைரியமில்லை. ஒரு சூட்டையும் ஒரு ஜதைப் பூட்சுகளையும் வாங்க வைத்திருந்த பணத்தை என் சொந்தப் பொறுப்பில் அனுப்பி வைத்தேன்.

“பின்னிகன் தொலைந்தார் என்கிறீர்களா?”

“தொலைவதா!” அவர் என்னைப் பார்த்து மௌன மாகச் சிரித்தார். உண்மையில் அவர் சிரித்த அந் முறை எனக்குப் பிடிக்கவில்லை. சிறிது நேரத்திற்கு பின் அவர் சுதாரித்துக் கொண்டார். “நீங்கள் இ பற்றி யாரிடமும் சொல்லக் கூடாது என்ன? உண்மை என்னவென்றால் பின்னிகன் மிகவும் மோசமான ப முடையில் இருக்கிறார். கடந்த சில வருடங்களில் அ வாழ்க்கையில் மிகவும் அடிபட்டு விட்டார். இப்பொழு

அதிலிருந்து அவர் மீண்டுவிட்டார். எனக்கு நம்பிக்கை இருக்கிறது. அவருக்கு நாங்கள் கொடுத்த பணம் பூராவையும் சல்லி விடாமல் திரும்பப் பெற்றுவிடலாம்'' என்று ஜாகர் ஒரு வார்த்தைக்காகத் திணறிக் கொண்டிருந்த பொழுது அவர் வாயிலிருந்து ''நாம் அவருக்குக் கொடுத்த'' என்ற பதங்கள் தவறாக வெளி வந்துவிட்டன. அதனால் இப்பொழுது அவர் பேச்சை வேறு திசையில் திருப்புவதற்கு ஆர்வம் காட்டினார்.

நான் நியூயார்க்கில் இருந்த ஒரு வார காலமும் பின்னிகன் விஷயத்திலேயே மூழ்கியிருந்தேன் என்று நீங்கள் நினைத்துவிடக் கூடாது. ஆனால், என்னுடைய ஏஜெண்ட், பிரசுரகர்த்தா இவர்களது அலுவலகங்களில் பின்னிகன் பேச்சு அதிகமாக அடிபட்டது. தவிர்க்க முடியாத நிலையில் எனக்கும் அதில் பங்கு ஏற்பட்டு விட்டது. உதாரணமாக இரண்டு நாட்களுக்குப் பிறகு நான் திரு கேனனின் அலுவலகத்தில் தொலை பேசியில் பேச முயன்றபொழுது, தற்செயலாக ஏற்பட்ட ஒரு தவறுதலின் விளைவாக—திரு கேனன் ஜார்ஜ் ஜாகரிடம் பேசிக் கொண்டிருந்த விஷயங்களைக் கேட்க நேர்ந்தது. ஒட்டுக்கேட்டதில் பாதிக் குற்றம்தான் என்னைச் சேரும். ஏனென்றால், நான் ஒரு பக்கத்துப் பேச்சைத்தானே கேட்க முடிந்தது! முழுப் பேச்சையும் கேட்ட முழுக் குற்றம் ஆகாதே இது!

''ஆனால்......அவர் நலமாக இருக்கிறார் என்று தான் நான் நினைத்தேன்...சில மாதங்களுக்கு முன்பு அவர் தம் இதயத்தைப்பற்றி ஏதோ சொன்னாரே... ஆனால், அது சரியாகிவிட்டது என்று நினைத்தேன்...



ஆமாம்; ஏதோ அறுவைச் சிகிச்சை செய்துகொள்ள வேண்டும் என்று சொன்னார்......புற்றுநோய் என்று சொன்னதாக ஞாபகம்......எனக்குக்கூட கையில் ஆப்பரேஷன் செய்துகொள்ள வேண்டும் என்றும் பண வசதி இல்லாததால் இன்னும் செய்து கொள்ளவில்லை என்று சொல்லிவிட நினைத்தேன்...இல்லை; நான் அதைச் சொல்லவில்லை...அவர் சந்தோஷமாகப் பேசினார்; அதைக் கெடுத்துவிட நான் விரும்பவில்லை.... இன்று அவர் ஒரு கதையைத் தொடங்கி யிருக்கிறார். தொலைபேசி மூலம் அதில் சில பகுதிகளை அவர் படித்துக் காட்டினார்.........அவர் கையில் தம்பிடிகூட இல்லாமல் இருந்தார். நான் 25 டாலர் கொடுத்தேன். தற்சமயம் எல்லாம் சரியாகி இருக்கும் என்று நினைக்கிறேன். அவர் இனி தொழிலைப் பற்றிக் கச்சிதமாக நடந்துகொள்ளுவார் என்றுதான் தோன்றுகிறது....''

இப்பொழுது எனக்கு விஷயம் பூராவாக விளங்கி விட்டது. அவர்கள் இருவரும் பின்னிகனைப் பற்றி நம்பிக்கை யிழக்காதபடி ஒருவரை யொருவர் உற்சாகப் படுத்திக் கொள்ளும் சதியில் ஈடுபட்டிருந்தார்கள். பின்னால் எழுதிக் கொடுப்பார் என்ற நம்பிக்கையுடன் அவர்கள் அவருக்கு ஏராளமான முன்பணம் கொடுத்திருக்கிறார்கள். அவர் இனி எழுதுவது பூராவும் அவர்களது கடனைத் தீர்ப்பதற்கே சரியா யிருக்கும். ஆகவே, பின்னிகனைப் பற்றி யாரும் தூஷணையாகப் பேசுவதை அவர்கள் விரும்பவில்லை. இதுபோல் தங்களுக்குள் பேசிக்கொள்வதைக்கூட அவர்கள் விரும்பவில்லை.

## 2

என்னுடைய கருத்தை நான் திரு. கேனனிடம் அப்பட்டமாகக் கூறிவிட்டேன்.

"பின்னிகன் வைத்ததெல்லாம் கொள்ளும் கலமாக இருந்தால், நீங்கள் அவருக்கு அளவில்லாமல் பணம் கொடுத்துக் கொண்டேயிருக்கமுடியுமா ? அவர் தொலைந்தாரென்றால், தொலைய வேண்டியதே. அதற்காக யார் என்ன செய்ய முடியும் ? எங்கேயோ பாதி நிறைந்த நீச்சல் குளத்தில் கரணம் அடித்து எலும்பை முறித்துக்கொண்ட பின்னிகனுக்காக நீங்கள் உங்கள் அறுவைச் சிகிச்சையை ஒத்திப் போடலாமா ?"

"அந்தக் குளம் நிறைந்துதான் இருந்தது. நிறைய தண்ணீர் இருந்தது," என்று திரு. கேனன் அமைதியாகச் சொன்னார்.

"நல்லது, நிறைந்திருந்ததோ காலியாகயிருந்ததோ ஆனால் எனக்கென்னவோ இந்த ஆள் தொல்லை கொடுக்கும் மனிதராகவே தோன்றுகிறார்" என்றேன்.

"இங்கே பாருங்கள். எனக்கு ஹாலிவுட்டிலிருந்து தந்தி மூலம் செய்திவரக் காத்துக்கொண்டிருக்கிறது. அதற்குள் நீங்கள் இதை ஒரு பார்வை பார்த்துவிடுங்கள்" என்று கூறி ஒரு கையெழுத்துப் பிரதியை என் மடியில் போட்டார் கேனன். "அவரைப் புரிந்துகொள்ள இது உங்களுக்கு உதவியாக இருக்கலாம்" நேற்றுத்தான் அவர் இதைக் கொண்டுவந்து கொடுத்துப் போனார்.

அது ஒரு சிறுகதைதான். வேண்டா வெறுப்புடன் நான் அதைப் படிக்க ஆரம்பித்தேன். ஐந்து



நிமிடத்திற்குள் அப்படியே அதில் மூழ்கி விட்டேன். அக்கதை அத்தனை அற்புதமாக இருந்தது; என் இதயத்தைத் தொட்டது. 'இம்மாதிரி எழுதும் திறன் எனக்கு ஏற்பட வேண்டும்' என்று கடவுளிடம் பிரார்த்தித்தேன். தொலைபேசியில் பேசிவிட்டு வந்த கேனனை நான் கதையைப் படித்து முடிக்கும் வரை காக்க வைத்துவிட்டேன். நான் அதனை முடித்த பொழுது, எழுத்துத் துறையில் மிகப் பழக்கப்பட்ட எனது வறண்ட கண்களில்கூட நீர் மல்கியது. நாட்டிலுள்ள எந்த சஞ்சிகையும் இக்கதையைப் பிரசுரிக்க தங்கள் இதழில் முதலிடம் கொடுக்கும்.

அப்பொழுது "பின்னிகன் இனி எழுதுவாரா?" என்ற கேள்விக்கு இடமே இராதல்லவா ?

## 3

பல மாதங்களுக்குப் பிறகு நான் மீண்டும் நியூயார்க்கிற்குச் சென்றேன். என்னுடைய ஏஜண்ட், பிரசுரகர்த்தர் இவர்களுடைய அலுவலகங்களைப் பொறுத்த மட்டில், பரபரப்பற்ற அமைதி நிலைமையைக் கண்டேன். அதன் பயனாக, உள்ளொளியால் உந்தப்பட்டு எழுதாவிட்டாலும்-மனச்சாட்சிக்கு விரோதமில்லாது எழுதிவந்த இலக்கியப் படைப்புகளைப் பற்றி திரு. கேனனிடம் ஆர அமரப் பேசவும், நாட்டுப்புறத்தில் உள்ள அவரது வீட்டில் அவரைச் சந்திக்கவும், கோடைக்கால மாலை வேளையைச் சிற்றுண்டி விடுதிகளின் தோட்டங்களில் ஜார்ஜ் ஜாகரோடு கழிக்கவும் வாய்ப்பு ஏற்பட்டது. பின்னிகன் எங்கோ வட துருவத்தில் இருக்கலாம்; உண்மையில் அவர் அங்குதான்

இருந்தார். அவரோடு பிரின் மாவ்ரைச் சேர்ந்த மூன்று மானிட இயல் ஆராய்ச்சியாளர்கள் உள்ளிட்ட ஒரு பெரிய கூட்டம் சென்று இருக்கிறது. அங்கு அவருக்குக் கதைகள் எழுத நிறையப் புது விஷயங்கள் கிடைக்கும் என்றே தோன்றியது. அங்கே அவர்கள் அனேக மாதங்கள் தங்கப் போகிறார்கள். ஒரு சிறு குடும்பமாக மகிழ்வுடன் இருக்கிறார்கள். இச் செய்திகள் என்னைப் பொறாமை கொள்ளச் செய்தன.

"இப்பொழுது எங்களுக்கு ரொம்ப சந்தோஷம். அவருக்கு ஆண்டவன் இதை வரப்பிரசாதமாக அளித்திருக்கிறார். அவர் புத்துணர்ச்சி பெற மிக அவசியம் தான்......இந்த......இந்த....." என்று இழுத்தார் திருகேனன்.

"பனியும் பனிக்கட்டியும்" என்று நான் முடித்தேன்.

"ஆம்; பனியும் பனிக்கட்டியும்தான். கடைசியாக அவர் சொன்னது அவரது ஆர்வத்தைப் பிரதிபலிப்பதாக இருக்கிறது. இனி அவர் எதை எழுதினாலும் அது தூய வெள்ளையாய் இருக்கும். அதன் பளபளப்பு கண்ணைப் பறிக்கும்."

"அது அப்படித்தான் இருக்கும் என்று நானும் நம்புகிறேன். அது சரி; அவருக்கு இதற்கெல்லாம் யார் பண உதவி செய்கிறார்கள்? சென்ற முறை நான் இங்கே வந்த பொழுது அந்த மனிதர் பணமுடையால் திண்டாடிக் கொண்டிருந்தார் எனக் கூறினீர்களே?"

"ஓ அந்த விஷயத்தில் அவர் மிகவும் நாணயமாக நடந்து கொண்டார். அவர் எனக்குக் கொஞ்சம் பணம் கொடுக்க வேண்டியிருந்தது. ஜார்ஜ் ஜாகருக்



கும் கொஞ்சம் பணம் கொடுக்க வேண்டியிருந்தது என்று நினைக்கிறேன்" என்றார். அடடா, என்ன வெளி வேஷம்! நன்றாகத் தெரிந்த ஒரு விஷயத்தையே 'நினைக்கிறேன்' என்று கூறுகிறாரே!

"அவருடைய ஆயுள் இன்ஷ்யூரன்ஸ் பணத்தில் பெரும் பகுதியை நாங்கள் அடைவதற்கு அவர் வசதி செய்து விட்டார். அதாவது அவர் திரும்பி வராத பட்சத்தில்தான். இது மாதிரிப் பிரயாணங்கள் அபாயகரமானவை என்பதுதான் தெரியுமே!"

"உண்மையில் அபாயகரமானதுதான். அதுவும் மூன்று மானிட இயல் ஆராய்ச்சியாளர்கள்கூடச் செல்லும் பொழுது."

"ஆகவே, ஏதாவது அபாயம் நேர்ந்தால் எனக்கும் ஜாகருக்கும் நஷ்டம் ஏற்படாதபடி பாதுகாப்புச் செய்துகொண்டு விட்டோம். இது சௌகரியமான ஏற்பாடுதானே?"

"இந்தப் பிரயாணத்துக்கு ஆயுள் இன்ஷ்யூரன்ஸ் கம்பெனியும் ஏதாவது பண உதவி செய்திருக்கிறதா?"

அவர் பதில் சொல்ல முடியாமல் தயங்கித் திணறினார்.

"இல்லை. அப்படியொன்றுமில்லை. உண்மையில் இந்தப் பிரயாணத்திற்கான காரணத்தை அறிந்த பொழுது அவர்கள் சிறிதே கலவரமடைந்தனர். ஒரு புத்தகத்தை எழுதும் திட்டத்துடன் அவர் இப் பிரயாணத்தை மேற்கொண்டதால் அவருக்கு மேலும் கொஞ்சம் பண உதவி செய்வதில் தவறில்லை என்று ஜாகரும் நானும் கருதிப் பணம் கொடுத்திருக்கிறோம்."

"இப்படிச் செய்தது சரியில்லை என்று எனக்குத் தோன்றுகிறது" என நான் பளிச்சென்று கூறினேன்.

“சரியில்லையா? ஆமாம், நாங்களும்கூட முதலில் தயங்கினோம் என்பதை ஒப்புக் கொள்கிறோம். கொள்கையளவில் இது தவறுதான் என்பது எனக்குத் தெரியும். முன்பெல்லாம் நான் அப்போதைக் கப்போது ஆசிரியர்களுக்குச் சிறிது முன்பணம் கொடுத்து உதவி வந்தேன். ஆனால் சமீப காலமாக, அப்படிக் கொடுப்பது தவறு என்று தீர்மானித்து, அதன்படி நடந்தும் வந்தேன். கடந்த இரண்டு ஆண்டுகளில், மார்க்கிரட் டிராகில் மிகவும் சங்கடப்பட்டுக் கொண்டிருந்த பொழுது, அந்தப் பெண்ணுக்காக மட்டும் என் கொள்கையை ஒரே ஒரு முறை கைவிட வேண்டியதாயிற்று. உங்களுக்கு அவளைத் தெரியுமா? அவள் பின்னிகனுடைய முன்னாள் காதலி.”

“எனக்குப் பின்னிகனையே தெரியாதே!”

“அது சரி, அவர் திரும்பி வரும் பொழுது—அவர் திரும்பி வந்தால்—அவரை நீங்கள் அவசியம் சந்திக்க வேண்டும். நீங்கள் அவரை விரும்புவீர்கள். அவர் மிகவும் விரும்பத்தக்க குணமுடையவர்.”

மீண்டும் நான் நியூயார்க்கை விட்டு, எனது கற்பனையின் வட துருவப் பகுதிக்குச் சென்றுவிட்டேன். கோடை காலம் மாறி மாரிக் காலமும் வந்தது. நவம்பர் மாதக் குளிர் நடு நடுங்கச் செய்தது. உடனே வட துருவக் குளிரைப் பற்றியும், பின்னிகன் கோஷ்டியாரின் கஷ்டங்களைப் பற்றியும் கற்பனை செய்து பார்த்தேன். அவர்மீது எனக்கு முன்பு ஏற்பட்ட பொறாமை பறந்துவிட்டது. இலக்கியத்தின் மூலமோ, மானிட இயல் ஆராய்ச்சி மூலமோ அவர் கொள்ளைப் பணம் சம்பாதிக்க விஷயம் சேகரித்துக்கொண்டிருக்கிறார்.




பிறகு நான் நியூயார்க்கில் இல்லாத மூன்று நாட்களில், பின்னிகனும் அவரது கோஷ்டியைச் சேர்ந்தவர்களும் பனிப் புயலில் சிக்கிக் கொண்டதாகவும், ஆர்க்டிக் பிரதேசம் ஒரு பெரிய அறிவாளியின் உயிரைப் பலி கொண்டுவிட்டது எனவும் பத்திரிகைகளில் படித்தேன்.

அவரது மறைவிற்காக நான் மிகவும் வருத்தப் பட்டேன். அதே சமயத்தில், கேனனும், ஜாகரும் தமக்கு நஷ்டம் ஏற்படாதபடி பாதுகாப்புச் செய்து கொண்டிருந்த விஷயம் சந்தோஷம் அளித்தது. பின்னிகன் இறந்து அதிக நாள் ஆகவில்லையாதலால், அவர்கள் இதுபற்றி என்னிடம் எதுவும் கூறவில்லை. ஆனால், இன்ஷ்யூரன்ஸ் கம்பெனிக்காரர்கள், அட்லாண்டிக் கடலில் கப்பலில் இருந்து விழுந்து விட்ட ஒருவர் விஷயத்தைப்போல பின்னிகன் விஷயத்திலும் ஹேபியஸ் கார்பஸ் என்றோ, உடலைக் காட்ட வேண்டுமென்றோ, அல்லது அவர்கள் பாஷையில் வேறு எப்படியோ அப்படி வற்புறுத்தப் போவதில்லை என்பதையும் தெரிந்துகொண்டேன். ஆகவே, அவர்களுக்கு எப்படியும் பணம் கிடைத்து விடும் என்று நிச்சயமாகத் தெரிந்தது.

பின்பு நான் ஜார்ஜ் ஜாகருடைய அலுவலகத்திற்குச் சென்று இருந்தபொழுது பின்னிகனுடைய மகன்—நல்ல தோற்றமுடைய ஓர் இளைஞன் வந்தான். அவனைப் பார்த்தே பின்னிகனுடைய தோற்றத்தை என்னால் ஊகிக்க முடிந்தது. பின்னிகன் வெகுளித்தனமான நாணமும், மிகவும் அமைதியான தோற்றமும், நினைத்ததை முழுவதும் வெளிப்படுத்த முடியாத மனப் போராட்டமும் உடையவர் என்பது தெரிந்தது. ஆனால்

அவரது இலக்கியச் சிருஷ்டிகளுக்கு இக் குணங்களே ஜீவ சக்தியாக விளங்கின.

அவன் சென்ற பிறகு, "பையனும் நன்றாக எழுதுவான்" என்றார் ஜார்ஜ். "சில பாடத் தகுந்த கவிதைகளை அவன் கொண்டுவந்திருக்கிறான். அவனது தந்தையின் தொழிலில் பிரவேசிக்க அவன் இன்னும் பக்குவமாகவில்லை. ஆனாலும் அவனுக்கு நல்ல எதிர்காலம் இருக்கிறது."

"அவனது கவிதைகளில் ஏதாவதொன்றை நான் பார்க்க முடியுமா ?"

"நிச்சயமாக—இதோ, அவன் வெளியே செல்லும் பொழுது கொடுத்துவிட்டுச் சென்ற கவிதை."

ஜார்ஜ் மேஜை டிராயருக்குள்ளிருந்து காகிதத்தை எடுத்து வைத்துக்கொண்டு, அதைப் படிப்பதற்குத் தொண்டையைச் சரிப்படுத்திக் கொண்டார். பிறகு கண்களைச் சிமிட்டிக்கொண்டு நாற்காலியில் சிறிதே குனிந்து அதைப் படித்தார் :

"அன்புள்ள ஜாகருக்கு, தங்களிடம் இதை நேரில் கேட்க நான் விரும்பவில்லை."—ஜாகர் வாய்விட்டு படிப்பதை நிறுத்தி விட்டார். அவருடைய கண்கள் மட்டும் மேலே வேகமாகப் படித்துக்கொண்டு போயின.

"அவனுக்கு எவ்வளவு வேண்டுமாம் ?" என்று நான் விசாரித்தேன்.

அவர் பெருமூச்செறிந்தார்.

"இதை அவனுடைய இலக்கியச் சிருஷ்டியென்றல்லவா நான் நினைக்கும்படி செய்துவிட்டான்," என்று வருத்தக் குரலில் கூறினார்.

நான் அவரைச் சமாதானப்படுத்தினேன். "உண்மையில் அது அவனது சிருஷ்டிதானே. ஆனால், இன்னும் தகுதி பெறவில்லை என்பதையே இது காட்டுகிறது!" என்றேன்.



இப்படிச் சொன்னதற்காக நான் பிறகு வருத்தப்பட்டேன். ஏனெனில், பின்னிகன் எப்படியோ தம்முடைய கடனை அடைத்துவிட்டார். இப்பொழுது அவர் உயிரோடு இருந்தால் நல்லது. இப்பொழுது நல்ல காலம் திரும்பி விட்டது. புத்தகங்கள் தேவையற்ற பொழுதுபோக்காகக் கருதப்பட்ட நிலைமை இப்பொழுது மாறிவிட்டது. பணப் புழக்கமற்ற காலத்தில் மிகச் சிரமப்பட்ட பல ஆசிரியர்கள் இப்பொழுது தூரப் பிரதேசங்களுக்கு யாத்திரை செல்கிறார்கள்; அடகு வைத்ததைத் திருப்பிவருகிறார்கள் ; ஓய்வும் வசதியும் இருந்தால்தான் எழுத முடியும் என்று கருதப்படும் நல்ல இலக்கியங்களையெல்லாம் சிருஷ்டிக்கிறார்கள். நானும் கூட ஹாலிவுட் அநுபவம் பெறுவதற்காக ஆயிரம் டாலர்கள் முன் பணமாகப் பெற்றிருக்கிறேன். சட்டிகளிலெல்லாம் கோழி இறைச்சி நிறைந்த வளம் கொழித்த பழங்காலப் பெருமையோடு செல்லப் போகிறேன். நான் கேனனிடம் பணம் பெற்றுக்கொண்டு விடைபெற்றுக்கொள்ளச் சென்றபொழுது, அவரும் நல்ல லாபம் பெற்றிருக்கிறார் என்று அறிய மகிழ்ச்சியாக இருந்தது. தாம் வாங்கியிருக்கிற மோட்டார்ப் படகை நான் வந்து பார்க்க வேண்டும் என்று அவர் விரும்பினார்.

ஆனால் கடைசி நிமிடத்தில் ஏதோ ஓர் இடையூறு அவரைத் தாமதப்படுத்திவிட்டது. எனக்குப் பொறுமை இல்லை. உடனே கிளம்ப வேண்டும் என்று முடிவு செய்தேன். அவரது உள்ளறைக் கதவைத் தட்டியும்

பதில் கிடைக்காதபடியால் நானே கதவைத் திறந்தேன்.

அலுவலகத்தின் உட்பகுதி ஏதோ குழப்பமாகக் காணப்பட்டது. திரு. கேனன் ஏக காலத்தில் பல தொலைபேசிகளைக் கவனித்துக்கொண்டு, சுருக்கெழுத்தாளரிடம் ஓர் இன்ஷ்யூரன்ஸ் கம்பெனி பற்றி ஏதோ சொல்லிக் கொண்டிருந்தார். வெளியே போவதற்குத் தயாராக ஒரு காரியதரிசி தன் தொப்பியையும் மேலங்கியையும் வேகமாக அணிந்துகொண்டிருந்தாள். இன்னொருத்தி தன் பர்சிலிருந்து பல பில்களை எடுத்து மேஜைமீது பரப்பிக் கணக்குப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

"அலுவலகத்தில் ஒரு சிறு குழப்பம். இன்னும் ஒரு நிமிடத்தில் அது முடிந்துவிடும். எங்களை இம் மாதிரி இதற்கு முன் பார்த்திருக்கவே மாட்டீர்கள்" என்றார் கேனன்.

"பின்னிகனுடைய இன்ஷ்யூரன்ஸ் விஷயமோ? ஒன்றும் பிரயோஜனமில்லையோ?"—இப்படி என்னால் கேட்காமலிருக்க முடியவில்லை.

"அவரது இன்ஷ்யூரன்ஸா; அதில் தகராறு துளி கூட இல்லை. இப்பொழுதுதான் நாங்கள் அவசரமாக சில நூறுகள் புரட்ட வேண்டியிருக்கிறது. நாங்கள் பணம் போட்டிருந்த பாங்கை இன்று மூடிவிட்டார்கள். அதனால் எங்களிடம் உள்ளதையெல்லாம் ஒன்று திரட்டுகிறோம்."

"சிறிது முன் நீங்கள் கொடுத்த பணம் இருக்கிறது. என் பிரயாணத்திற்கு இவ்வளவு பணம் தேவை இல்லை" என்று சொல்லி இரண்டு நூறு ரூபாய் நோட்டுகளை எடுத்து, "இது போதுமா?" என்றேன்.



"இது போதும். இது தற்போது எங்களைக் காப்பாற்றி விடும். பரவாயில்லை மிஸ் கார்ல்சன், திருமதி மேப்ல் நீங்கள் இப்போது போக வேண்டியதில்லை"

"எனக்கு நேரமாகி விட்டது; நான் போகலாமா?" என்றேன் நான்.

"இரண்டே நிமிடங்கள் பொறுங்கள். இந்தத் தந்திச் செய்திக்கு வழி செய்துவிட்டு வந்து விடுகிறேன். இது உண்மையிலேயே அற்புதமான செய்தி. உங்களுக்கு மிக மகிழ்ச்சி அளிக்கும்." என்றார்.

அந்தக் கடல் தந்தி நார்வே நாட்டிலுள்ள ஆஸ்லோ நகரிலிருந்து வந்திருந்தது. நான் அதைப் படிப்பதற்கு முன்பே அது என்னவாக யிருக்கும் என்று ஊகித்தேன்:

"நான் ஆச்சரியமாகப் பிழைத்திருக்கிறேன். ஆனால், அதிகாரிகள் என்னை நிறுத்தி வைத்திருக்கிறார்கள். தயை செய்து நாலு பேருக்கு வழிச் செலவிற்காகப் பணமும் உபரியாக இரு நூறும் தந்தி மூலம் அனுப்புங்கள். பிரசுரத்திற்கு நிறைய விஷயம் கொண்டு வருகிறேன். இறந்தவராகக் கருதப்பட்டவரின் வாழ்த்துகள்"
—பின்னிகன்.

"இது உண்மையில் ஆச்சரியம்தான். அவர் சொந்த விஷயத்தையே கதையாக எழுதிவிடலாம்.

"அவ்வளவு கடுமையாகப் பேசாதீர்கள்," என்றார் கேனன். "மிஸ் கார்ல்சன் நீங்கள் அந்தப் பெண்களின் பெற்றோருக்குத் தந்தி அனுப்பி விடுங்கள். அப்படியே ஜாகருக்கும் தகவல் தெரியப்படுத்தி விடுவது நல்லது."

சில நிமிடங்களுக்குப் பிறகு நாங்கள் தெருவில் சென்று கொண்டிருந்த பொழுது திரு. கேனன் இந்த ஆச்சரியமான செய்தியால் கல்லாகச் சமைந்து ஆழ்ந்த சிந்தனை வயப்பட்டவராக இருந்தார். நான் அவரது நிஷ்டையைக் கலைக்க விரும்பவில்லை. ஏனெனில், பார்க்கப் போனால் பின்னிகனை எனக்குத் தெரியாது. அதனால் கேனனின் மகிழ்ச்சியில் என்னால் இதய பூர்வமாகப் பங்கெடுத்துக்கொள்ள முடியவில்லை. மோட்டார் போட், காட்சி சாலையின் வாயிலை அடையும்வரை அவர் மௌனமாகவே வந்தார். நாங்கள் எங்கே போகிறோம் என்பதை அப்பொழுதுதான் புரிந்து கொண்டவரைப் போல பெயர்ப் பலகைக்குக் கீழே நின்று மேலே உற்றுப் பார்த்தார்.

ஓர் அடி பின்னால் நகர்ந்து கொண்டு "இப்போது நாம் இங்கே போவதில் பிரயோஜனம் இல்லை. நாம் குடிப்பதற்காகச் செல்கிறோம் என்றல்லவா நினைத்தேன்" என்றார்.

நாங்கள் அவ்விதமே செய்தோம். திரு கேனன் இன்னும் அந்தப் பேராச்சரியத்திலிருந்து மீள முடியாதவராக, ஒன்றும் தோன்றாதவராக இருந்தார். சாப்பிட்டதற்கான பணம் கொடுக்கும் பொறுப்பை நான் ஏற்றுக்கொள்ளும் வரை பாவம், மனிதன் திணறிப் போனார்!

அவர் நாள் முழுவதும் மிகுந்த குழப்பத்திலேயே இருந்தார் என்று நினைக்கிறேன். ஏனெனில், அவர் எவ்வளவோ கணக்கான பேர்வழியாக இருந்தும் அவர் எனக்கு அனுப்பிய ஸ்டேட்மெண்டில் நான் அவரிடம் ஆபீஸில் திருப்பிக் கொடுத்த இருநூறு டாலருக்கு



எந்தக் கணக்கும் காட்டவில்லை. இருந்த போதிலும், என்றாவது ஒருநாள் எனக்குப் பணம் கிடைத்துவிடும் என்று நம்பினேன். ஏனெனில் மறுபடியும் ஒருநாள் பின்னிகன் எழுதத்தான் போகிறார். மக்கள் அவரது எழுத்துக்களைப் பரபரப்புடன் வரவேற்கத்தான் போகிறார்கள். சமீப காலத்தில் நானே அவரைப் பற்றிய கதைகளை விசாரித்துப் பார்த்தேன். விளிம்பு வரை திரும்பியிருந்த நீர் நிறைந்த நீச்சற் குளத்தைக் குறை குளம் என்றதைப் போல், அவை பெரும்பாலும் கட்டுக் கதைகளே என்பதைத் தெரிந்துகொண்டேன்.

இதுவரை வட துருவப் பிரயாணம் பற்றி ஒரே ஒரு சிறு கதைதான் எழுதியிருக்கிறார். அதுவும் காதல் கதை! ஒரு வேளை, அவர் எதிர்பார்த்தது போல் வட துருவ விஷயம் பெரிய விஷயமாக இருக்காது போலும். ஆனால் திரைப்படக்காரர்களுக்கு அவரைப் பற்றி நல்ல அபிப்பிராயம் ஏற்பட்டுள்ளது. அவர்கள் சிரத்தை காட்ட ஆரம்பித்தார்களானால், அவர் சமாளித்துக்கொண்டு விடுவார் என்று நான் நினைக்கிறேன். அவர் நிச்சயம் சமாளிப்பதுதான் நல்லது.

———

# தீயும் தீக்கல்லும்

## டோராத்தி கேன்பீல்டு

[டோராத்தி கேன்பீல்டு (1879-1958) புத்தகம், படிப்பு இதுபோன்ற சூழ்நிலையிலேயே வளர்ந்தவர். அவரது தந்தையார் ஜேம்ஸ் எச், கேன்பீல்டு லாரன்ஸி லுள்ள கன்சாஸ் பல்கலைக்கழகத்தின் தலைவராக இருந்த போது அவருக்கு மகளாக டோராத்தி பிறந்தார். ஓஹியோ மாகாணத்திலும், கொலம்பியா பல்கலைக் கழகத்திலும் அவர் கல்வி பயின்றார். 1904-ஆம் ஆண்டில் தத்துவக் கலையில் டாக்டர் பட்டம் பெற் றார், ஜான் ஆர். பிஷரை அவர் மணம் செய்துகொண் டதும் கணவருடன் வெர்மாண்ட் மாகாணத்திலுள்ள ஏர்லிங்டனில் வாழ்ந்து வந்தார். அவர் அப்பொழுது அடிக்கடி ஐரோப்பாவுக்கும் போய் வந்தார். அவருடைய முதல் நாவல் "அணில் கூண்டு" 1912-இல் பிரசுரமா மாயிற்று. இரண்டாவது நாவல் "வளைந்த கிளை" 1915-ல் பிரசுரமாகியது. அவரது நாவல்களிலே மிகவும் சிறப்பானது, "ஆழமான ஓடை" தான். நாவல் களைத் தவிரப் பல சிறுகதைகளையும் அவர் எழுதியிருக் கிறார். அவரது சிறுகதைகள் "ஹில்ஸ்பரோ மக்கள்" என்ற பெயரில் தொகுப்பாக வெளிவந்திருக்கிறது. "தீயும் தீக்கல்லும்" என்ற இந்தக் கதை அத்தொகுப்பி லிருந்து தேர்ந்தெடுக்கப் பட்டதாகும்.]

* * * *

**என்** கணவரின் ஒன்றுவிட்ட சகோதரர் நகரி லிருந்து வந்திருந்தார். அவர் தோற்றத்தில் வழக்க

மான உற்சாகமில்லே; மிகவும் அலுத்தவர் போல் காணப்பட்டார். அவ்வப்போது மோன நிலேயிலும் ஆழ்ந்தார். சாய்வு நாற்காலியில் அவர் நீட்டிப் படுத்துக்கொண்டு அவர் அதிக எரிச்சலுடன் பேசினுர். "நம் நாட்டு மக்களின் வாழ்க்கை உணர்ச்சியற்று வறண்டுபோய் விட்டதாகக் கூறினுர்."

"சமய தத்துவங்களேயும் அறநெறிக் கட்டுப்பாடுகளேயும் அப்படியே கடைப்பிடிக்க வேண்டுமென்ற கொள்கை, மக்கள் மனத்தில் வலுவாக வேரூன்றி வளர்ந்திருந்த அந்தக் காலத்தில், இருநூறு ஆண்டுகளுக்கு முன்பு சமயச் சகிப்புணர்ச்சி மக்களிடையே இல்லாமலிருந்திருக்கலாம். ஆனுல், இப்பொழுது அத்தகைய மனப்பான்மை அடியோடு மறைந்து மண்ணுகி விட்டது. மதத் தத்துவார்த்தங்களினுல் இந்த உலகத்தில் உருப்படியான பலன் எதையுமே காண முடியாது என்பதை மக்கள் உணர்ந்துவிட்டனர். ஆனுல், சமூகம் இப்பொழுது உணர்ச்சியற்றுக் கிடக்கிறது." ஏதோ பெரிய தத்துவத்தைக் கண்டு விட்டவரைப் போல இப்படிப் பேசிக்கொண்டே போனுர். அந்தச் சமயத்தில் மேசைமேல் இருந்த தண்ணீர் கூஜாவை அவர் பக்கமாக நகர்த்தி வைத்தேன். அதனுள் போடப்பட்டிருந்த "ஐஸ்" கட்டி கடகட வெனச் சப்தித்து அவரது கவனத்தைக் கவர்ந்து, தோட்டத்தின் பக்கம் திருப்பியது. வெர்மான்ட் மக்களின் வாழ்க்கைச் சீர்கேட்டை நினைத்து மனம் புழுங்குவதைவிட தோட்டத்தின் இயற்கை வனப்பைக் கண்டு களிப்பது மேல் என்பதை நான் அவருக்குச் சொல்லாமல் சுட்டிக் காட்டினேன். தங்க நிறமான மலர்கள், தம் மஞ்சள் நிற இதழ்களின்

பிரகாசத்தைத் தீப் பிழம்புபோல் வெளிப்படுத்திக் கொண்டிருந்தன. வலிமையும் பசுமையும் வாய்ந்த கத்தி போன்ற நீண்ட இலைகள் எதிராளிகளைச் சண்டைக்கு இழுக்கச் சவால் விடுவதுபோல் கம்பீரமாக ஆடி அசைந்துகொண்டிருந்தன. அவற்றின் அசைவில் ஜீவசக்தி ததும்பியது.

அச் செடிகளுக்கு அப்பால் பரந்து விரிந்து கிடந்த அழகிய வயல் வெளியில் புத்துணர்ச்சியுடன் காட்சியளித்தான் அதோ நிராம் பர்டன். அவன் நிலத்தை உழுது கொண்டிருந்தான். அவன் தன் காரியத்திலேயே கண்ணுங் கருத்துமாகக் காணப்பட்டான். ஏரில் பூட்டப்பட்டிருந்த குதிரைகளின் கடிவாளக் கயிற்றை அவன் தனது பலம் பொருந்திய கழுத்தில் மாட்டிக் கொண்டு, ஒரு தேர்ந்த கலைஞனைப் போல் ஏரின் மேழியைத் தன் பலமான கைகளால் அழுத்தமாகப் பிடித்திருந்தான். கடும் வசந்தகால வெயில் கொளுத்திக் கொண்டிருந்தது. அது நிராமின் தலையில்பட்டு அவனது அடர்ந்த செம்பட்டை நிற மயிர்த் தலையைப் பிரகாசிக்கச் செய்தது. புதிதாகக் கிளறிப் போடப்பட்ட மண்ணின் மணம் அவனைச் சுற்றித் தூபமிட்டுக் கொண்டிருந்தது. அவனுக்கு அப்பால் தூரத்தில் அந்த மலையருவி பேரிரைச்சலுடன் வழிந்து ஓடிக் கொண்டிருந்தது.

கலப்பையை நேராகச் செலுத்துவதிலேயே முழுக் கவனத்துடன் இருந்தான் நிராம். கலப்பை ஒரு சிறிது அதன் தடத்திலிருந்து விலகிச் சென்றாலும் அதை மறுகணமே நேராக்கிச் சீராக்கி விடுவதில் தனது முழுத் திறமையையும் அவன் காட்டிக் கொண்டிருந்தான். நிலத்தைத் துளைத்துப் பெயர்த்துச் செல்லும் கலப்பையின் "மழு" அவ்வப்போது பெரிய கல்லில் சிக்கித் தடைப்படும்பொழுது நிராமின் முகத்தில் ஒருவிதச் சஞ்சல உணர்வு தட்டுப்படும். ஆனால் அடுத்த வினாடியே அவன் கல்லைப் பெயர்த்துத் தூர எறிந்துவிட்டு கலப்பையை நேராக்கியவுடன் அவனது முகத்திலே மீண்டும் உற்சாகமும் தெம்பும் குடி புகுந்துவிடும்.



இதுவரை எதுவுமே பேசாமல் மௌனமாக உட்கார்ந்திருந்த என் மைத்துனர் (கணவரின் ஒன்றுவிட்ட சகோதரர்) தமது கையைப் பலமாக ஆட்டியபடி வயலில் உழுது கொண்டிருந்த நிராமைச் சுட்டிக் காட்டினார். நிராம் தலை குனிந்து, ஏரில் பூட்டப்பட்டிருந்த குதிரைகளின் கால்களை உற்றுக் கவனித்தவண்ணம் தன் வேலையில் ஈடுபட்டிருந்தான். "அதோ! இப்பொழுது நான் சொன்ன கருத்துக்கு நிதர்சனமான உதாரணம்! இந்த வசந்த காலத்தில் இந்த அருமையான நாளில் பாடிக் களிக்கவோ, உற்சாகத்துடன் சீட்டியடித்து மகிழவோ, அல்லது, இயற்கை எழிலை நிமிர்ந்து பார்த்து ஆனந்திக்கவோ விரும்பாத ஒரு மனிதனை உலகத்தில் வேறு எந்த நாட்டிலாவது, காண முடியுமா?" என்று என்னைப் பார்த்துக் கேட்டார்.

நான் எதுவும் பதில் சொல்லவில்லை; ஆனால் என்ன சொல்வது என்று புரியாததால் அல்ல. நிராம் சில குறிக்கோள்களை உடையவன்; தானாகக் கட்டுப்பாடுகளை விதித்துக் கொண்டவன். ஆகவே, எனது மைத்துனரைப் போன்ற மனப் போக்குள்ள ஒருவரிடம் நிராமைப் பற்றி நான் பேச விரும்பவில்லை. நாங்கள் இருவரும் நிராமையே பார்த்துக்கொண்டு மௌனமாக உட்கார்ந்திருந்தோம்.

நண்பகல் ஆகிவிட்டது என்பதை அறிவிக்கும் கிராமத்தின் சங்கு ஒலித்தது. சங்கொலியை கேட்ட மாத்திரத்தில் மதி நுட்பம் வாய்ந்த அக் குதிரைகள் வயல் மத்தியில் நின்றுவிட்டன.

நிராம் குதிரைகளை ஏரிலிருந்து அவிழ்த்து, அவற்றை மர நிழலுக்கு இட்டுச் சென்று, அவற்றின் கழுத்தில் தீனிப் பைகளை மாட்டினன். பின்பு அவன் அங்கிருந்து எங்கள் வீடு நோக்கி வந்தான்.

"தான் ஒரு புதிய இங்கிலாந்துக்காரனுக இருந்தாலும், உங்கள் வீட்டு அழகி ஈவ்லீன் ஆனைப் பார்ப்பதற்காகத்தானே அவன் ஏதாவது சாக்குச் சொல்லிக்கொண்டு உங்கள் வீட்டுக்கு அடிக்கடி வருகிருன்?" என்று மைத்துனர் மெதுவாக முணு முணுத்தது என் காதில் விழுந்தது. நான் அவரைக் கடுமையாகப் பார்த்தேன். ஆனல், அவர் தரையைப் பார்த்துக்கொண்டிருந்தார். தரையையே நோக்கிக் கொண்டிருந்தார் என்பதைவிட, தனது மீசையில் உள்ள வெள்ளை மயிர்களை எண்ணுவதில் முனைந்திருந்தார் எனலாம்.

வீட்டை நெருங்கிய நிராம், வீட்டின் முன்புறமிருந்த புல்தரையில் வேலிக்கு அப்பால் வந்து நின்றுன். நல்ல உயரமான உருவமுள்ளவனுதலால், அவன் சுலபமாக வேலியின் மீது வளைந்து, கைகளை நீட்டி, மஞ்சள் நிறக் காகிதத்தில் சுற்றியிருந்த ஒரு சிறு காகிதப் பொட்டலத்தை என்னிடம் தந்தான். தற்கால நாகரீகப்படி அவன் தொப்பியைத் தூக்கியோ, 'காலை வந்தனம்' என்று கூறியோ, அல்லது வேறு எந்த முறையிலும் எனக்கு மரியாதை தெரிவிக்காமல் நேரடியாக தான் வந்த விஷயத்தைச் சொன்னுன்:



"எனது சின்னம்மா இதை உங்களிடம் கொடுக்கச் சொன்னுள். நீங்கள் திராட்சை ரஸம் கொடுத்ததற்கு நன்றி தெரிவிக்கவும் சொன்னுள்." அவன் இதைக் கூறியபோது தன் அழகிய நீல நிறக் கண்களால் என்னை உற்றுக் கவனித்தான். அப் பார்வையில் சோகம் ததும்பியிருந்தது. தான் சொல்ல வந்ததைச் சொல்லி முடித்ததும், ஏதோ ஒரு பெரிய மலை போன்ற காரியத்தைச் செய்து முடித்து விட்டது போன்ற நிம் மதிப் பெருமூச்சு விட்டான் நிராம்.

நானும் சில சமயம் பட்டணத்துக்குச் சென்று வந்தவள் தான்; எனக்கும் நகரத்துப் பழக்க வழக்கங்கள் ஓரளவு தெரியும். நிராம் கொடுத்த காகிதப் பொட்டலத்தைப் பிரித்துப் பார்த்த போது "என்ன நிராம் இது?" என்று உரக்கக் கத்தினேன். அதில் பழங் காலத்திய அழகிய கழுத்துப் பட்டை ஒன்று இருந்தது. "நிராம்! உன் சின்னம்மா இதையெல்லாம் எதற்காகக் கொடுக்க வேண்டும்? பழமையான நினைவுச் சின்னமாக அவள் பாதுகாக்க வேண்டியது இது! நான் அவ்வப்போது அவளுக்குச் செய்யும் ஒவ்வொரு சிறு உதவிக்கும் அவள் இதுபோல் பதிலுக்கு ஏதாவது தர வேண்டுமா என்ன? அடுத்த வீட்டில் இருக்கும் ஒருத்தி ஒரு சில புட்டி பழ ரசத்தைக் கொடுத்து உதவக் கூடாதா? இதற்கெல்லாமா பதில் உதவியை எதிர் பார்ப்பார்கள்? உன் சின்னம்மா இப்படிச் செய்வது நன்ருக இல்லை. பிரதிபலன் அளிக்காமல் அவள் என்னிடமிருந்து இதுவரையில் ஒரு சிறு உதவியைக் கூட பெற்றதேயில்லை. என் சிறு உதவியைக் காட்டிலும்

பன்மடங்கு மதிப்புள்ள எதையாவது அவள் அனுப்பி வைத்து விடுகிறாள்!''

ஒரு குழந்தையைப் போல் நான் இதைச் சொல்லி முடித்ததும், ''அதெல்லாம் எனக்கு ஒன்றும் தெரியாது. சின்னம்மா உங்களிடம் கொடுக்கச் சொன்னாள். கொடுத்துவிட்டேன்'' என்று தீர்மானமாகக் கூறி நிறுத்தினான் நிராம்.

நாற்காலியில் சாய்ந்திருந்த மைத்துனரின் உடல் அசைந்தது. ஆனால் அவர் பக்கம் நான் திரும்பவில்லை. நாட்டுப்புறத்தானை நிராமை இரக்கமற்ற அவர் திகைப்புடன் பார்க்கிறார் என்பதும், அவனது நாகரிகமற்ற நடையுடை பாவனைகளை அப்படியே அவர் தம் மனத் திரையில் பதிய வைத்துக்கொள்ள முயலுகிறார் என்பதும் எனக்குத் தெரியும்.

''உன் சித்திக்கு இப்பொழுது உடம்பு எப்படி இருக்கிறது, நிராம்?'' என்று கேட்டேன்.

''மோசமாகத்தான் இருக்கிறது.''

இதற்கு மேல் நிராமால் ஒன்றும் பேச இயலவில்லை. குறும்பான வார்த்தைகளை அள்ளி வீசும் வழக்கமுடைய மைத்துனர் தம் வாயைக் கையால் பொத்திக் கொண்டார்.

''டாக்டரால் அவளைக் குணப்படுத்த முடியாதா?''— என்று மீண்டும் நானே வினவினேன்.

மௌனமாய் நின்ற நிராம் தனது உணர்வு பெற்று, தலையை நிமிர்த்தி தூரத்தில் தெரிந்த மலையை நோக்கினான். பின்னர் ஆகாயத்தைப் பார்த்தான். ''மின்சாரத்தின் மூலம் அவளை ஓரளவு குணப்படுத்தலாம் என்கிறார் டாக்டர். அவளுக்காகச் சில பாட்டரிகளை



வாங்கப் போகிறேன்; ஆனால் அதெல்லாம் ரப்பர் பாண்டேஜ்களுக்காக நான் பட்ட கடன் தீர்ந்த பின்னர் தான்'' என்றான்.

அதன் பின் நீண்ட மௌனம் நிலவியது. எனது மைத்துனர் நாற்காலியிலிருந்து எழுந்து நின்று விட்டார். பிறகு வாசலை நோக்கிச் சாவதானமாக நடந்துகொண்டே, தண்ணீர்க் கூஜாவையும் கண்ணாடி டம்ளர்களையும் எடுத்துச் செல்லுவதற்கு ஈவ்லீன் ஆனை இங்கே கொஞ்சம் வரச் சொல்லட்டுமா? என்று கேட்டார்.

அவர் இப்படிக் கேட்டது என்னைக் கிண்டல் செய்யும் தோரணையில் இருந்தது.

இதைக் கேட்டதும் நிராமின் முகம் வெளுத்தது. தாடைத் தசைகள் முறுக்கேறின. உடலில் ஏதோ ஒரு புத்துணர்வு ஏற்பட்டது. எனினும் அவனது கண்களிலோ அதே கவலைக் குறிகள் தென்பட்டன. அவனது அகத்தின் வேதனை முகத்தில் பிரதிபலித்தது. 10 வயதுச் சிறுவனாக இருந்தபோது இதே போன்றுதான் தோற்றமளித்தான். 30 வயது இளைஞனை இன்றும் அப்படியே தோன்றுகிறான்.

''வேண்டாம்; வேண்டாம். உள்ளே போகும் போது நானே அவற்றை எடுத்துச் செல்கிறேன்''— மைத்துனரின் கேள்விக்கு நான் இப்படி விடையளித்தேன்.

நிராம் சற்று நேரம் நின்று கொண்டிருந்தான். பிறகு பிரிவு வணக்கமோ, உபசார வார்த்தைகளோ தெரிவிக்காமலேயே வயலுக்குச் சென்று தன் வேலையை மீண்டும் கவனிக்கலானான்.

எங்கள் வீட்டு முகப்பு மண்டபம் மனத்தை மயக்கும் தோற்றமுடையது. விண் மீன்களின் ஒளி, அதைச் சுற்றிலும் இருளில் வீசிக்கொண்டிருந்தது. செடிகளில் மலர்ந்திருந்த புஷ்பங்களின் வாசனையையும், காட்டுத் திராட்சை மலர்களின் மணத்தையும், உழுத நிலத்தின் மண் வாடையையும் லேசான தென்றல் காற்றுச் சுமந்து வந்தது. இந்த மண்டபத்திற்குள் விட்டுச் சென்றுகொண்டிருந்தது. வீடு ஒரு சிறு குன்றின் மீது அமைந்திருந்தது. அதைச் சுற்றிலும் சரிவான புல்தரை இருந்தது. அதன் அடிவாரத்தில் அருவி ஒன்று சலசலவென்ற ஓசையோடு ஓடிக்கொண்டிருந்தது. மலைமீது பனிக்கட்டி உருகிக்கொண்டிருந்ததால் ஆற்றில் வெள்ளம் கரை புரண்டோடிக் கொண்டிருந்தது. பாறைகளுக்கிடையே புகுந்து ஓடிய அந்த அருவியின் வீர கீதத்தை வானிலிருந்த நட்சத்திரங்கள் ரஸித்துக்கொண்டிருந்தன.

வீட்டின் முற்றத்தில் நான், என் கணவர் பால், அவருடைய ஒன்றுவிட்ட சகோதரர் ஆகிய மூவரும் பிரம்பு நாற்காலிகளில் சாய்ந்து கிடந்தோம். நடுத்தர வயதடைந்திருந்த எங்கள் உடல்கள் அங்கிருந்ததே தவிர எங்கள் உள்ளங்கள் அந்த இருள் சூழ்ந்த இரவின் இனிமையை ரஸித்துக்கொண்டிருந்தன. எங்களுடைய உள்ளங்கள் இளமைக் கால இன்ப நினைவுகளில் சஞ்சரித்துக் கொண்டிருந்தன. எனது மைத்துனர் விஷயம் எப்படியோ எனக்குத் தெரியாது. ஆனால், என்னையும் என் கணவர் பாலையும் பொறுத்த வரையில் இந்த எண்ணம் ஏற்பட்டிருந்தது உண்மை. அருகருகே அமர்ந்து, கையோடு கை



கோத்துக்கொண்டு, 20 ஆண்டுகளுக்கு முந்திய இன்ப நினைவுகளில் நாங்கள் மூழ்கித் திளைத்திருந்தோம். ஹோரேஸ்—அவர்தான் என் மைத்துனர்—என்ன நினைக்கிறார் என்பதை எவராலும் அறிந்துகொள்ள முடியாது. அவரது வெளித் தோற்றத்திலிருந்து அவரது உள்ள உணர்வைப் புரிந்துகொள்வது சாத்தியமேயில்லை. அவர் நெடுநேர மௌனத்திற்குப் பின்பு, "இந்த இரவுக் காலம் நயமில்லாத முறையில் காதல் செய்வதற்குத் தூண்டுவதாக இருக்கிறது" என்று கூறினார் ஹோராரேஸ்.

நான் இதற்கு அளித்த பதில் சம்பந்தமற்றதாகத் தோன்றியபோதிலும் அது சந்தர்ப்பத்திற்குப் பொருத்தமாய் இருந்ததாக நான் நினைத்தேன். நான் நாற்காலியிலிருந்து எழுந்துகொண்டே, "அடடா! இப்பொழுதுதான் ஞாபகம் வருகிறது. நான் ஈவ்லின் ஆனைப் பார்க்க வேண்டும். நாளைக்கு நடக்கவிருக்கும் விருந்தைப் பற்றிய நினைவே எனக்கு இல்லை" என்றேன்.

"ஈவ்லின்! ஈவ்லின்!" எந்த நேரமும் ஈவ்லினைப் பற்றிய எண்ணம் தானா? அவளையும் அவளைப்பற்றிய பேச்சையும் மறந்து உன்னால் கொஞ்ச நேரம்கூட இருக்க முடியாதா?" என்று கிண்டலாகக் கேட்டார் ஹோரேஸ்.

அவர் சொன்னதைக் காதில் வாங்கிக் கொள்ளாமல், இருட்டில் தட்டித் தடவிக்கொண்டு நான் நேராகச் சமையற்கட்டுக்குச் சென்றேன். சமையற் கட்டின் இரு கதவுகளும் மூடப்பட்டிருந்தன. பலகாரங்களின் வாசனையை முகர்ந்துகொண்டே சமையல் அறைக்

செய்தியைத் தெரிவித்தேன். ஈவ்லீனும் தனது அத்தை எம்மா, உருளைக் கிழங்குத் தோட்டமொன்றை வாங்கியிருந்த தகவலைத் தெரிவித்தாள். இப்படிப் பேசி அவளுக்குத் தெளிவூட்டினேன்.

ஈவ்லீன் ஓர் அனாதைப் பெண். அவளை, கன்னியாகவே காலங் கழித்த அவளது பணக்கார அத்தை வளர்த்து வந்தாள். அத்தை எம்மா உறுதி நெஞ்சம் படைத்தவள். அவள் தன் விவசாயப் பண்ணையைத் தானே கவனித்துக் கொள்ளுகிறாள். சிறிது நேரத்திற்குப் பிறகு எங்கள் பேச்சு நிராமைப் பற்றியதாக மாறியது.

"நிராம் பர்டன் தன் சின்னம்மாவுக்கு இன்னும் உடம்பு மோசமாகவேதான் இருக்கிறது" என்று சொன்னான். இச் செய்தி மிகவும் வருந்தத் தக்க நிலை இல்லையா?" என்று நான் அவளை பேச்சுக்கிழுத்தேன். மௌனம் என்னும் கருங் குகையிலிருந்து ஈவ்லீனை உரையாடல் என்னும் வெளிச்சத்திற்கு இழுத்து வந்து விட வேண்டுமென்ற எண்ணத்தில் நான் இதை வேண்டு மென்றேதான் சொன்னேன். அதற்கும் அவள் எவ்வித பதிலும் சொல்லவில்லை. "சித்திக்காக நிராம் தனது சக்தியையும்மீறி அரும்பாடு படுகிறான் என்று அவனை அறிந்தவர்கள் எல்லோருமே சொல்கிறார்கள்" என்று நான் மீண்டும் கூறினேன்.

கடைசியில் ஈவ்லீன் பேசினாள். அவளது குரல் கிணற்றிலிருந்து கேட்பது போல் மிகவும் மெதுவாக இருந்தது. "அவர் தன் கடமையைவிட அதிகமாக ஒன்றும் செய்துவிட வில்லை. அவர் சிறுவனாக இருந்த பொழுது அவருடைய தந்தை நோயில் கிடந்தபோது



சின்னம்மா எவ்வளவு பாடுபட்டாள் தெரியுமா? நிராமுக்கும் அவர் தகப்பனாருக்கும் அவள் தையல் வேலை செய்து சம்பாதித்துச் சோறு போட்டாள்" என்று கூறிய ஈவ்லீன் பேச்சை சிறிது நிறுத்திவிட்டு மீண்டும் கூறினாள்: "எனவே, நிராம் இதற்கெல்லாம் மிகவும் கடமைப்பட்டவர். அவர் செய்ய வேண்டிய கடமையை விட அதிகமாக எதுவும் செய்துவிட வில்லை என்பது தான் என் கருத்து" என்றாள்.

"இருந்தாலும், ஓர் இளைஞன் மனத்தில் தான் திருமணம் செய்துகொள்ள முடியவில்லையே என்ற எண்ணம் வருத்தத்தை உண்டு பண்ணத்தானே செய்யும்?" என்று நான் தொடர்ந்தேன். நாங்கள் பேச விரும்பிய விஷயத்துக்கு அநேகமாக வந்து விட்டதாக நான் எண்ணினேன். ஆனால் ஈவ்லீன் பதிலளிக்கவில்லை. அவள் முகம் நோயாளியின் முகத்தைப் போல் கறுத்துச் சுருங்கியது. மேலும் பேசவே விரும்பாதவளைப் போல் உதடுகளை அழுத்தமாக மூடிக்கொண்டாள். எனினும், நிராமைப் பற்றிக் குறை கூறிப் பேசினால் அவள் சும்மா இருக்கமாட்டாள் என்பது எனக்குத் தெரியும். "நிராம் இதுபோல் செய்வது பெருந்தவறு என்று நினைக்கிறேன். மனைவி என்று ஒருத்தி இருந்தால் அவனுக்கு எவ்வளவோ உதவியாக இருக்குமே? அவள் அவனது சின்னம்மாவைக் கவனித்துக் கொள்ளுவாள்; வீட்டு வேலையையும் பார்த்துக் கொள்ளுவாள் அல்லவா?" என்றேன். ஈவ்லீன் இதை கேட்டதும் சற்றே உணர்ச்சி வசப்பட்டாள். அவள் எரிச்சலுடன் மடமடவென்று பேசினாள்: "அதெல்லாம் சரிதான். ஆனால், எது சரி, எது தப்பு என்பதை நிராம் நன்றாக

" ஆமாம்! திருமதி. பர்டனைத்தான் சொல்லுகிறேன். அவள் என் அத்தைதான். அவளது இயற் பெயர் தான் எம்லீன். ஆனால், அந்தப் பெயரில் நான் அவளைக் குறிப்பிடுவதே யில்லை. என்னை, அத்தை எம்மா வளர்த்தாள் என்பதுதான் உங்களுக்குத் தெரியுமே. எம்மாவும் எம்லீனும்—இரட்டைக் குழந்தை களாகப் பிறந்தவர்கள். அவர்கள் பருவம் அடைந் ததும் இருவருமே நிராமின் தந்தையைக் காதலித்தார் கள். அப்போது நிராம் சிறு குழந்தையாக இருந்தார். தாய் இறந்துவிட்டாள். மனைவியை இழந்த பர்டனை மணம் செய்துகொள்ள சகோதரிகள் இருவருமே ஆசைப்பட்டார்கள். ஆனால், எம்லீன்தான் அவரைக் கலியாணம் செய்துகொண்டாள். அதற்குப் பின் அவர்களிடையே மனஸ்தாபம் ஏற்பட்டது. எம்லீ னுடன் எம்மா பேசுவதை நிறுத்திவிட்டாள்" என்று ஈவ்லீன் கூறினாள்.

இதைக் கேட்டதும் எனக்குத் திடீரெனக் காலில் சுடுதண்ணீரை ஊற்றியது போன்ற உணர்ச்சி ஏற்பட்டது. "அப்படியா, சங்கதி? உன் அத்தை எம்மாவையும் திருமதி பர்டனையும் எனக்குப் பல ஆண்டுகளாகத் தெரியும். ஆனால், இந்த விஷயத்தைப் பற்றி நான் கேள்விப்படவே இல்லையே!"

"இதெல்லாம் பழைய கதை" என்று ஈவ்லீன் மிக வும் அலட்சியமாகக் கூறினாள்.

"இது நடந்து எவ்வளவோ வருஷங்களாகி விட்டன. சகோதரிகள் இருவருமே பிடிவாத குணம் உடையவர்கள். அதனால் இந்த விஷயம்பற்றி அவர் களிடம் யாருமே பேசுவதில்லை. முதலில் எம்மா மணக்க விரும்பியவரை எம்லீன் மணந்துகொண்டு விட்டதால், எம்மா கோபம் கொண்டு சகோதரியுடன் பேசுவதை நிறுத்தினாள். பிறகு அவள் சொந்த விவ சாயத்தின் மூலம் பணக்காரி ஆகிவிட்டாள். ஆனால் எம்லீன் ஏழையாகிவிட்டதால் அவள் எம்மாவுடன் பேச விரும்பவில்லை. பர்டன் வாத நோயால் பீடிக்கப் பட்டதன் விளைவாக அவர்கள் தம் பண்ணையை இழந்து விட்டார்கள். வாழ்க்கை நடத்துவதற்கு எம் லீன் தையல் வேலை செய்து பொருளீட்ட வேண்டிய தாயிற்று. பர்டன் நல்ல குணவான். அன்புள்ளம் கொண்டவர் என்று நினைக்கிறேன். அவர் இறந்த பின் எம்லீன் மறுமணம் செய்துகொள்ளவில்லை. மற்றொரு ஆணழகனைக் கல்யாணம் செய்துகொள்வதை விட, தனது கணவனின் பழைய சட்டையின் கந்தல் துணியைப் பார்த்துக் கொண்டிருப்பதிலேயே திருப்தி கண்டாள் எம்லீன்.



இரு உள்ளக் காதலர்களது அன்புப் பிணைப்பின் மேன்மையை இச்சிறு சரிதை மூலம் உணர்ந்தேன். திருமதி. பர்டனுக்கு சுயேச்சை மனப்போக்கு ஏற்பட்ட தற்கான காரணத்தையும் அதன் மூலம் அறிந்து கொண்டேன். மனைவியின் பிற்கால வாழ்க்கைக்கு வழிவகை செய்து வைக்காமல் போய்விட்டாரே என்ற பழி தன் கணவர்மீது விழுந்து விடாமல் பார்த்துக் கொள்ளுவதில் திருமதி. பர்டன் எவ்வளவு கண்ணுங் கருத்துமாக இருக்கிறார்! கணவனின் நினைவுதான் அவளுக்கு மூச்சு; கணவனின் கௌரவம்தான் அவளுக்கு உயிர்! என்று தன் பேச்சை நிறுத் தினாள்.

நான் ஈவ்லீனைப் பார்த்தபடி நின்றேன். கருங் கல்லைப் போன்ற மன உறுதியுடன் இளமை எழில் குலுங்க நின்றுகொண்டிருந்த அவளது தோள்களை அன்புடன் பற்றினேன். ஈவ்லீன்! நீயும் நிராமும் இப்படியே காலந்தள்ளப் போகிறீர்களா? எவருடைய உதவியும் உங்களுக்கு வேண்டாமா?'' என்று உணர்ச்சி மிக்க குரலில் கூறினேன்.

ஈவ்லீன் என்னை நோக்கினாள். அவளது முகம் திடீரெனச் சாம்பல் நிறமடைந்தது.

''இல்லை, அம்மா. இப்படியே இருந்துவிடும் எண்ணமில்லை. நாங்கள் ஒரு முடிவுக்கு வந்துவிட்டோம். எங்கள் காதல் கைகூடக் கூடியது அல்ல. இனிமேல் எங்கும் ஒன்றாகச் செல்வதில்லை; ஒருவரையொருவர் பார்ப்பதில்லை என்று தீர்மானித்து விட்டோம். இப்படிச் சந்திக்காமலிருப்பதுதான் எங்களுக்கு நல்லது...'' இதற்குமேல் அவளால் பேச முடியவில்லை. குரல் கம்மியது. முகத்தைக் கைகளில் புதைத்துக்கொண்டாள். அவள் உடலில் அனல் வீசியது.

இப்பொழுதுதான் எனக்கு விஷயம் புரிந்தது. வசந்தகால இரவை ஆனந்தமாகக் கழிக்காமல், அவள் இருண்ட அறைக்குள் அடைபட்டுக் கிடந்ததின் இரகசியமும் தெளிவாகிவிட்டது!

எனக்கும் துக்கம் தொண்டையை அடைத்தது; வார்த்தைகள் வெளிவரவில்லை; அவளை அன்புடன் கட்டி அணைத்துக்கொண்டேனே தவிர, ஆறுதலாக ஒரு வார்த்தைகூடச் சொல்ல முடியவில்லை. உணர்ச்சிக் கொந்தளிப்பில் சிக்கி எவ்வளவு நேரம் இருந்



தோமோ தெரியவில்லை. எங்களுக்குப் பின்னால் கதவு திறக்கும் சத்தம் கேட்டவுடன்தான் சுய உணர்வு பெற்றோம். ஈவ்லீன் தன் முகத்தைச் சுவர்ப் பக்கம் திருப்பிக் கொண்டாள். நான் கதவுப் பக்கம் திரும்பிப் பார்த்தேன். எனது மைத்துனர் ஹோரேஸ் காலைத் தேய்த்துத் தேய்த்து நடந்துகொண்டு, விளக்கு ஒளியில் கூசிய கண்களை மூடிமூடி விழித்துக்கொண்டு உள்ளே வந்தார். அவர் மிகக் களைப்பாகக் காணப்பட்டார். எங்களைப் பார்த்த அவர் எதுவும் சொல்லாமல் தொட்டி முற்றத்தை நோக்கிச் சென்றார். பிறகு, ''எனக்குக் குடிப்பதற்கு ஒருவரும் ஒன்றும் தரவில்லை. ஆகவே, கொஞ்சம் தண்ணீராவது குடித்துவிட்டுப் போகலாமென்று வந்தேன்'' என்றார். அவர் தண்ணீர் எடுத்துக் குடித்துவிட்டு, வெளிப்புற வாசலுக்குச் சென்று கதவைத் திறந்தார். ''இங்கு இவ்வளவு சூடாகவும், புழுக்கமாகவும் இருக்கிறதே! உங்களுக்குத் தெரியவில்லையா?'' என்று கேட்டார்.

அறைக்குள் திடீரெனக் குளிர்ந்த காற்று வீசியது. விளக்குப் படபடவென அடித்து அணைந்தது. அறை முழுவதும் இருள் நிரம்பியது. மலர் மணம் காற்றில் மிதந்து வந்தது. அருவியின் சப்தமும் கேட்டது. இருள்மத்தியில் ஈவ்லீன் தனக்குள் பேசிக் கொள்வது போல் கூறினாள். ''இந்த வசந்தகாலத்தைப் போல், வேறு எந்த வசந்தகாலத்திலும் இந்தச் சிற்றாறு இவ்வளவு சத்தம் எழுப்பியதில்லை.''

* * * *

அன்று இரவு, என்னை யாரோ தட்டி எழுப்பியது போல் நான் திடுக்கிட்டுக் கண்விழித்தேன். ஆனால்

உண்மையில் என்னை யாரும் கூப்பிடவில்லை. ஆழ்ந்த உறக்கத்தில் மூழ்கி இருந்த அந்த வீட்டில் அமைதி நிலவியிருந்தது. வீட்டின் அருகில் ஓடிக்கொண்டிருக்கும் ஆற்றின் ஓசைதான் பெரிதாகக் கேட்டுக்கொண்டிருந்தது. இந்த அமைதிக்கு மத்தியில் ஏதோ ஒரு பயங்கர எண்ணம் என் மனத்தில் ஏற்பட்டது. உடனே படுக்கையிலிருந்து குதித்து எழுந்தேன். என் கணவர் உறக்கக் கலக்கத்தில் 'என்ன விஷயம்?' எனக் கேட்டார். நான் 'ஒன்றுமில்லை' எனப் பதிலளித்துவிட்டு, எனது உடைகளை அணிந்துகொண்டேன். ஏதாவது சத்தம் கேட்கிறதா எனக் கூர்ந்து கவனித்தேன். என் சிந்தனையில் என்னென்னவோ பயங்கரமான கதைகள் நினைவுக்கு வந்தன. எங்கும் ஒரே நிசப்தம். திடீரென எதையோ நினைத்தவாறு ஹால்வழியாகச் சென்று மாடிப் படியேறி ஈவ்லீன் அறைக்குச் சென்றேன். கதவைத் தட்டாமலே கதவைத் திறந்தேன். அங்கு ஈவ்லீனைக் காணாததால் திடுக்கிட்டேன். அங்கிருந்து ஓடினேன். என் கணவருக்குக் குரல் கொடுத்து, பின் தொடரும்படி கூவிவிட்டு, மாடிப் படிகளில் பறந்து சென்று, முன் கதவுகளைத் திறந்துகொண்டு, ஆற்றை நோக்கி ஓட்டமாக ஓடினேன். விண்மீன்கள் சிந்திய ஒளியில் எல்லாம் தெளிவாகத் தெரிந்தது. கரையோரமாக துருவித் துருவிப் பார்த்தேன். ஆ! அதோ இருக்கிறாளே அவள் ஈவ்லீனா? ஆம்; ஈவ்லீனேதான்! என் ஆயுளிலேயே கண நேரம் ஏற்பட்ட பயங்கரம் அது. அதை நினைக்கவே பயமாயிருக்கிறது. நானும் ஈவ்லீனும் ஆற்றங்கரையில் ஒருவரை யொருவர் தழுவியபடி நின்றோம். இருவரும் சொட்டச் சொட்ட நனைந்திருந்தோம். குளிரால் எங்கள் உடல்கள் நடுங்கின. இந்த நிலையில் ஹோரேஸ் அங்கு வந்துவிட்டார். அவர் தம் வழக்கமான கிண்டலுடன் "உங்கள் இருவருக்கும் என்ன பைத்தியமா? அல்லது தூக்கத்தில் எழுந்து நடமாடும் வியாதியா?" என்று கேட்டார். ஈவ்லீன் என் அணைப்பிலிருந்து விடுபட முயன்றாள். நான் சிறிது பின்பக்கமாக நகர்ந்து நின்றேன். அவள் உச்சி முதல் உள்ளங்கால் வரை ஒரே நடுக்கமாய் இருந்தது. அவள் ஹோரேஸ் சொன்ன வார்த்தைகளை எடுத்துக்கொண்டு, "ஆமாம், ஆமாம்...நிஜமாகத்தான்...... எனது தாத்தாவுக்கு தூக்கத்தில் நடமாடும் வியாதி உண்டாம். இந்த வியாதி அந்தப் பரம்பரையிலுள்ள ஒவ்வொருவருக்கும் ஏற்படத்தான் செய்யுமாமே" என்றாள்.



ஈவ்லீன் தைரியமாகவும், சமயோசிதமாகவும் இப்படிப் பொருத்தமான பதில் அளித்தது என்னை ஆச்சரியத்தில் ஆழ்த்தியது.

மைத்துனருக்குப் பின்னால் என் கணவர் பாலும் வந்து சேர்ந்தார். அவர் ஏன் முதலில் வரவில்லை என்று ஆச்சரியப்பட்டேன். பிறகு எல்லோரும் வீட்டுக்குச் சென்றோம். கனமான போர்வைகளுக்குள் புகுந்து கொண்டோம். ஆனால், அன்றிரவு அதற்குப் பிறகு எனக்கு உறக்கமே வரவில்லை.

வைகறை நேரத்தில்தான் அசதி மிகுதியினால் கண்ணயர்ந்தேன். அந்த நேரத்திலும் அப்பப்பா! எத்தனைவிதப் பயங்கரக் கனவுகள்? விடிந்து வெகு நேரம் ஆன பின்தான் நான் கண் விழித்தேன். கண்ணைத் திறந்து பார்த்தபோது, ஈவ்லீன் கதவை மூடிக்

கொண்டிருந்தாள். "அடடா உங்களை நான் எழுப்பி விட்டேனா? அந்தச் சிறுவன் ஹாரிஸ் உங்களுக்கு ஒரு கடிதம் கொண்டு வந்திருக்கிறான்" என்றாள் ஈவ்லின். நான் படுக்கையில் உட்கார்ந்துகொண்டே, "யார் அந்த ஹாரிஸ் சிறுவன்? அவன் எதற்காக எனக்குக் கடிதம் கொண்டு வருகிறான்?" என்று கேட்டேன்.

ஈவ்லீன் வழக்கம்போல் தன்னடக்கத்துடன் பதில் ஏதும் சொல்லாமல் கீழே இறங்கிச் சென்று கடிதத்தை எடுத்து வந்து கொடுத்தாள். அக்கடிதத்தில் நான்கே வரிகள்தாம் இருந்தன. எனக்கு மிகவும் ஆச்சரியமாக இருந்தது. அக்கடிதம் திருமதி பர்டனால் எழுதப்பட்டிருந்தது! எனக்கு மேலும் வியப்பையூட்டியது.

"நீயும் உன் கணவரும் காரில் என் வீட்டுக்கு உடனே வரவேண்டும்" எனத் திட்டவட்டமாக அக்கடிதத்தில் திருமதி. பர்டன் குறிப்பிட்டிருந்தாள். 'காரில்' 'உடனே' என்ற பதங்கள் முக்கியமானவை என்று குறிக்க, அவள் அவ்வார்த்தைகளின் கீழ் கோடிட்டிருந்தாள். மர்மமான இவ்வுத்திரவு மிகுந்த வியப்பை அளித்தது. பாலிடம் கடிதத்தைக் காட்டினேன். அவர் மறுக்கவில்லை. பேசாமல் காரைத் தயார் செய்து என்னையும் அழைத்துக் கொண்டு புறப்பட்டார். வீட்டில் ஹோரேஸைக் காணவில்லை. ஆனால், கிராமத்தின் மறுபுறத்தில் சாலையில் அவரது நெட்டையான கூன் விழுந்த உருவம் தென்பட்டது. அவர் கையில் பிரம்பு ஒன்று இருந்தது. அதை அவர் சுழற்றி, சாலையோரம் இருந்த செடிகளின் துளிர்களைத் தட்டிப் பிய்த்தபடியே நடந்து வந்துகொண்டிருந்தார். அவரையும் எங்கள்



கூட வரும்படி அழைத்தோம்; அவர் மறுத்துவிட்டார். தனது உடல் தசையைக் குறைப்பதற்காக உடற்பயிற்சி செய்துகொண்டிருப்பதாகவும், அதை விட்டு விட்டு மோட்டாரில் வரமுடியாதென்றும் கூறிவிட்டார்.

நாங்கள் திருமதி. பர்டனின் வீட்டை அடைந்தோம். எங்களை வரவேற்க அங்கு ஒருவரும் இல்லை. அந்த வீட்டில் குறுகலான மூன்று அறைகள்தாம் இருந்தன. ஓர் அறையில் திருமதி. பர்டன் நோயுடன் அவதிப்பட்டுக்கொண்டு கிடந்தாள். நிராம் வயல் வேலைகளுக்குச் சென்றுவிடுவான். அப்பொழுதெல்லாம் திருமதி. பர்டன் அந்த அறையில் தன்னந்தனியேதான் படுத்துக் கிடப்பாள்.

என்ன செய்வதென்று எங்களுக்குப் புரியவில்லை. பால், வெளியில் காரிலேயே உட்கார்ந்திருந்தார். நான் மட்டும் கதவருகில் சென்றேன். திருமதி. பர்டன் தனது வழக்கமான வறண்ட குரலில், "உள்ளே வாம்மா!" என்று அழைத்தாள். நான் அறைக்குள் சென்றேன். அவளைப் பார்த்தவுடன் அவள் தோற்றத்தில் என்றுமில்லாத ஒரு புதுமையைக் கண்டேன்.

அவள் படுக்கையில் மல்லாந்து படுத்திருந்தாள். அவளால் கொஞ்சம்கூட எழுந்திருக்க முடியவில்லை. முதுமையால் வற்றி வறண்டுபோன முகம் தலையணையில் புதைந்திருந்தது. நான் அறைக்குள் நுழைந்தவுடனேயே என்னை அவளது கண்கள் கண்டு கொண்டன. அந்தக் கண்களில் ஒருவகைத் தீட்சண்யத்தையும் பார்வையில் உறுதியையும் கண்டேன். என்னுடைய தோற்றத்திலிருந்து எனது வியப்புணர்ச்சியை அவள் உணர்ந்திருக்க வேண்டும். சற்று

நேரம் என்னையே பார்த்துக்கொண்டிருந்த அவள், ''என்னைத் தூக்கிக் காரில் வைத்து, அடுத்த கிராமத்தில் உள்ள ஹீலட் பண்ணைக்கு அழைத்துச் செல்லும்படி பாலிடம் சொல்வாயா?'' என்றாள். ''எனது உடல் மிகவும் ஒட்டி உலர்ந்துபோயிருக்கிறது. ஆதலால் காரின் பின்புற ஆசனத்தில் குறுக்கிப் படுத்துக் கொண்டுவிடுவேன்.'' அவளுடைய பேச்சிலே அழுத்தம் இருந்தது; ஆயினும், குரலில் நடுக்கம் காணப்பட்டது. அவளுடைய எதிர்பாராத வேண்டுகோள் எங்களுக்கு ஆச்சரியம் விளைவித்ததைக் கண்டாள். ''எம்மா ஹீலட் என்னுடன் பிறந்த சகோதரிதான். அவளை நான் பார்க்க விரும்புகிறேன். இதில் ஆச்சரியம் ஒன்றுமில்லையே!'' என்றாள்.

பிரிந்திருந்த ஒரு குடும்பத்தை மீண்டும் இணைத்து வைப்பதற்கு நாங்கள் ஒரு கருவியாகப் பயன்படப் போகிறோம் என்பதை உணர்ந்தேன். நான் வெளியே இருந்த பாலிடம் சென்று அக்கிழவியின் விருப்பத்தைத் தெரிவித்தேன். ''திருமதி. பர்டனைப்போல் லேசான உடலுடையவர்களைத் தூக்கிக்கொண்டு 10 முறை இந்த நகரை வலம் வர என்னால் முடியும். ஆனால், வைத்தியரின் சம்மதம் பெறாமல் நான் அவளைத் தூக்க மாட்டேன்'' என்று என் கணவர் பதிலளித்தார். ''உள்ளே சென்று உங்கள் ஆட்சேபணையை நீங்களே நேரடியாகக் கிழவியிடம் கூறுங்கள்'' என்று கூறி, கணவரை உள்ளே அனுப்பினேன். வீட்டுக்குள் சென்ற பால் சிறிது நேரத்தில் கிழவியைத் தூக்கிக்கொண்டு வெளியே வந்தார். அவள் படுத்திருந்த நிலையிலேயே அவளை அலக்காகத் தூக்கிக்கொண்டு வந்து நின்றார் அவர். படுக்கை விரிப்பு அவர் கையிலிருந்து தொங்கியது. பல வருஷ காலத்திற்குப் பின் கிழவி நீல வானை நேரில் கண்டாள்!



கார் புறப்பட்டது. எங்களில் ஒருவரும் பேசவில்லை. திருமதி. பர்டன் யாரையும் உற்றுப்பார்க்கவில்லை; ஒரு வார்த்தையும் சொல்லவில்லை. ஆயினும், ஏதோ ஒரு காரியத்தை முடிக்க அவள் உறுதிகொண்டிருக்கிறாள் என்பது மட்டும் தெரிந்தது.

திருமதி. எம்மா ஹீலட்டின் வீட்டை அடையும்வரை நாங்கள் அனைவரும் மௌன விரதமே அனுசரித்தோம். வீடு வந்து சேர்ந்ததும், திருமதி. பர்டன் தனது பலத்தையெல்லாம் ஒன்று திரட்டி, ''என்னை வீட்டுக்குள் தூக்கிச் செல்லுங்கள்'' என்றாள்.

''வீட்டில் ஹீலட் இருக்கிறாளா என்று பார்த்துவிட்டு வந்து விடுகிறேனே'' என்றேன் நான். வேண்டாமென்பதற்கு அடையாளமாக அவள் தலையை ஆட்டிவிட்டு, பால் மீது பார்வையைத் திருப்பினாள். அப்பார்வை ஆணையிடுவதாக இருந்தது. பால் அவளைக் கைகளால் தூக்கிக்கொண்டு நடந்தார். அவருக்கு முன்னால் சென்ற நான் கதவைத் தட்டி வீட்டில் உள்ளவர்கள் என்ன நினைப்பார்களோ என்று அஞ்சினேன். ஆனால் உள்ளே இருந்து ஒரு பதிலும் வரவில்லை. ''கதவைத் திறந்துகொண்டு உள்ளே போங்கள்'' என்று திருமதி. பர்டன் கட்டளையிட்டாள். அதன்படியே செய்தோம். அகலமான முன் அறையில் ஒருவரையும் காணவில்லை. மற்ற பல அறைகளிலும் ஆட்கள் இருப்பதற்கான அறிகுறியைக் கூடக் காணோம்.

"எம்மா வெளியில் கோழிகளுக்குத் தீனி போட்டுக்கொண்டிருப்பாள்" என்று திருமதி. பர்டன் கூறிவிட்டு, "என்னை மேல் மாடியில் வலது புறமிருக்கும் முதல் அறைக்குக் கொண்டு செல்லுங்கள்" என்று பழைய குரலிலேயே கட்டளையிட்டாள். என் கணவர் என்னைக் கேள்விக் குறியுடன் பார்த்தார். ஆயினும், ஏதும் கூருமலே கிழவியைத் தூக்கிக்கொண்டு மாடிப் படியேறி மேலே சென்று வலது பக்க அறைமுன் நின்ருர். நான் கதவைத் திறந்துவிட்டதும் அந்தப் பெரிய படுக்கை அறைக்குள் நுழைந்தார்.

"என்னைப் படுக்கையில் கிடத்துங்கள். அந்தச் சன்னல் கதவுகளைக் கொஞ்சம் திறந்துவிடுங்கள்" என்று திருமதி. பர்டன் முன்போலவே ஆணையிட்டாள். பால் அவளைப் படுக்கை மீது கிடத்திஞர். நான் ஓடிச் சென்று சன்னல் கதவுகளைத் திறந்தேன். அவளுடைய கண்களில் இன்னும் பிரகாசம் குறையவில்லை. "பால்! சீக்கிரம்! சீக்கீரம்! உங்கள் பிளாஸ்க் இருக்கிறதல்லவா?" எனக் கிழவி கேட்டாள். பிறகு எனக்கு மட்டும் கேட்கக்கூடிய மெல்லிய குரலில் "மாடிப்படி அருகில் உள்ள அலமாரியில் இருக்கிறது. எடுத்துக்கொண்டு ஓடிவா" என்ருள். நான் மாடிப் படிகளில் பறந்து சென்றேன். ஒரு பழைய பாட்டிலுடன் திரும்பினேன். அந்தப் பாட்டிலின் அடியில் ஒரு சிறிதே பிராந்தி இருந்தது. திருமதி. பர்டனின் காய்ந்துபோன உதடுகளை நனைப்பதற்கு அந்தப் பிராந்தி பயன்பட்டது.

நான் கிழவியின் பக்கமாகக் குனிந்துகொண்டிருந்தேன். பால் மேலும் சில சன்னல் கதவுகளைத் திறந்தார்.



அறைக்குள் நல்ல வெளிச்சம் வந்தது. கீழே முன்னறையில் ஒரு பெண்மணியின் கனத்த காலடிச் சத்தம் கேட்டது. அவள் மாடிக்கு வந்து, அறையின் வாயிற் படியில் மிகுந்த திகைப்புடன் நின்ருள்.

திருமதி. பர்டன் என்னை ஒரு பக்கம் பிடித்துக்கொண்டாள். உடம்பைச் சிறிதளவு நகர்த்துவதற்குக் கூடத் திராணி இல்லாதிருந்தபோதிலும், புதிதாக உள்ளே வந்த பெண்மணியை வரவேற்பதற்காக அவள் மிகவும் சங்கடப்பட்டு எழுந்திருக்க முயன்ருள். பிறகு "அடி எம்மா! இதோ வந்துவிட்டேன்" என்று ஒரு மாதிரியான குரலில் கூறிஞள். பேசமுடியாமல் மூச்சுத் திணறியது. எனினும், உயிரைக் கையில் பிடித்துக்கொண்டு பேசிஞள். "எம்மா! நான் வந்த விஷயத்தை சொல்கிறேன் கேள்—என் நிராமும், உன் ஈவ்லீனும் சின்னஞ் சிறு வயதிலிருந்தே ஒன்ருக ஓடி ஆடி விளையாடிஞர்கள்; இருவரும் சேர்ந்தே பள்ளிக்கூடம் சென்ருர்கள். இது உனக்கும் தெரியும்; நானும் அறிவேன். ஆனல் இதை நாம் வெளிக்குக் காட்டிக்கொள்ளவில்லை. இப்பொழுதோ அவர்கள் காதலுக்குத் தடங்கல் ஏற்பட்டிருக்கிறது. இந்த இளம் உள்ளங்களை இணைத்து வைக்க முடியவில்லை. நிராம் சம்பாதிக்கும் பணம் எனது வைத்தியச் செலவுக்கே காணவில்லை. அத்தை 'ஹெட்டி' மாதிரி நான் இப்படியே—இதே உடல் நிலையிலேயே பல வருடங்கள் உயிருடன் இருப்பேன் என்று வைத்தியர் சொல்கிருர். நிராமுக்கோ இப்பொழுது 31 வயதாகிவிட்டது; ஈவ்லீனும் 28 வயதை எட்டிவிட்டாள். அவர்களும் இதுநாள்வரை காத்திருந்து விட்டார்கள்.

அவர்களை இணைத்து வைக்க என்ன வழி என்று யோசித்தேன்; ஒன்றும் புரியவில்லை. உடம்பு சுகமாக இல்லாவிட்டாலும் அவர்கள் இருவரும் மகிழ்ச்சியுடன் வாழ்வதைக்கூட நான் காணமுடியவில்லை. கடவுள் என் தலையில் இப்படி எழுதியிருக்கிறார். இதையெல்லாம் நினைக்கும்பொழுது 'லீஷ்' மாமா செய்த மாதிரி தற்கொலை செய்துகொண்டாலென்ன என்று கூடத் தோன்றும். ஆனால், நான் இறந்துவிட்டால், தங்களால்தான் நான் செத்துவிட்டேன் என்று நிராமும் ஈவ்லீனும் சங்கடப்பட்டுக்கொண்டேயிருப்பார்கள். மண வாழ்வை அவர்கள் மகிழ்ச்சியுடன் கழிக்க முடியாது. ஆகவே, இப்பொழுதுள்ள வழி ஒன்றே ஒன்றுதான். ஆண்டவன் என்னை அழைத்துக்கொள்ளும்வரை நீதான் என்னைக் காப்பாற்றி வரவேண்டும். டாக்டர் கூறுவதுபோல் நான் அவ்வளவு வருஷங்கள் உயிருடன் இருக்கமாட்டேன் என்றுதான் எனக்குத் தோன்றுகிறது'' என்று திருமதி. பர்டன் சொல்லி முடித்தாள்.

என் காதுகளில் மணியடித்து ஓய்ந்ததுபோன்ற உணர்வு ஏற்பட்டது. திருமதி. பர்டன் இப்பொழுது தியாகத்தின் பலிபீடத்தில் தன்னைக் கிடத்திவிட்டாள். எவருடைய உதவியையுமே ஏற்றுக்கொள்ளாத அவள் இப்பொழுதோ கருணை கோரிக் கெஞ்சுகிறாள்! தன் கோரிக்கை நிராகரிக்கப்படக் கூடும் என்பதை நன்றாக உணர்ந்திருந்தும் தன் சகோதரியிடம் அவள் மண்டியிட்டுப் பணிந்து மன்றாடுகிறாள்! என் கண்களையும் காதுகளையும் நம்பவே முடியவில்லை!

பால் என்னைத் துயரத்துடன் பார்த்தார். அவளுக்கு அங்கு இருக்கவே பிடிக்கவில்லை. நான் பொறுமையிழந்தவளாய், ''திருமதி. பர்டன் இனி நாங்கள் போகலாமல்லவா?'' என்று கேட்டேன். வாயிற்படியில் நின்றுகொண்டிருந்த ஸ்திரீயைப் பார்ப்பதற்கே எனக்குத் தைரியம் வரவில்லை.



''போகாதே, இரு'' என்று கூறுவதற்கு அடையாளமாக திருமதி. பர்டன் கையை ஆட்டினாள். அவள் கையை ஆட்டிய அதிகாரத் தோரணையிலிருந்து அவள் ஒரு கடும் போராட்டத்தை எதிர்பார்க்கிறாள் என்பது விளங்கியது. ''நீ இங்கே இருக்கவேண்டும். நான் சொல்வதை நீ கேட்கவேண்டும் அவசியமேற்பட்டால் நீ அதை இந்த ஊர் ஜனங்களிடம் தெரிவிக்க வேண்டும்'' என்று என்னைப் பார்த்துச் சொன்ன திருமதி. பர்டன், மௌனமாகவே வாயிற்படியில் நின்று கொண்டிருந்த ஸ்திரீயின் பக்கம் திரும்பி, ''இதோ பார், எம்மா! நீ நிலைமையைச் சரியாகப் புரிந்துகொள்ள வேண்டும். நாம் இருவரும் இதுவரை எவருக்கும் நன்மை செய்தது கிடையாது. நாம் இதுபோலவே வாழ்வதால் யாருக்கும் நன்மையில்லை. என் வைராக்கியம் இரண்டு ஆத்மாக்களின் வாழ்க்கையில் குறுக்கிடுகிறது. உனக்கு நிறையப் பணம் இருக்கிறது; செலவழிக்க வழிதான் இல்லை. நான் தற்கொலை செய்துகொண்டு அவர்களுக்கு இடையூறாய் இராமல் ஒழியலாம். ஆனால் அது சாஸ்திர விரோதமாகும். திருமதி. பர்டன் பேசுவதை திடீரென நிறுத்திவிட்டாள். சில நிமிடநேரம் பயங்கர அமைதி நிலவியது. பிறகு, பெருங்கூச்சலில், ''எம்மா! உன்னால்தான் முடியும்! சரி என்று சொல்! இல்லாவிட்டால் நான் நிராம் வீட்டுக்குத் திருப்பவே மாட்டேன்! நான்

தெருவோரமிருக்கும் சாக்கடையருகில் விழுந்து கிடப்பேன். மாளிகையும், நிலபுலன்களும், பாங்கியிலே நிறையப் பணமும் வைத்துப் பெரு வாழ்வு வாழும் என் உடன்பிறந்த சகோதரிதான் என் இந்த நிலைக்குக் காரணம்; பசி பட்டினியால் நான் சாவதற்கு அவள் தான் பொறுப்பாளி? என்று நான் ஒவ்வொருவரிடமும் சொல்வேன்...'' என்று பயங்கரமாகக் கத்தினுள். பேச முடியாமல் திடீரென அவள் தொண்டை அடைத்தது. அவள் படுக்கையில் சுருண்டு விழுந்தாள். அவளது கண்கள் சொருகிக்கொண்டன.

"ஐயோ; கடவுளே; போய்விட்டாள்!'' என்று கத்திக்கொண்டே படுக்கையருகில் ஓடினுர் என் கணவர். வாயிற்படியில் கல்லாகச் சமைந்து நின்றுகொண்டிருந்த ஸ்திரீயின் உடல் அசைவதைக் கண்டேன். அவள் மெதுவாக அறைக்குள் வந்தாள். எனக்கும் பாலுக்கும் நடுவே வந்துநின்ருள். திருமதி. பர்டனின் வாயில் பிராந்தியைப் புகட்டினேம். அவள் கைகளைச் சூடு வரும்படி தேய்த்தோம். திருமதி. பர்டன் இறந்துவிட்டாள் அல்லது இன்னும் கொஞ்சநேரத்தில் இறந்துவிடுவாள் என்று நாங்கள் மூவரும் எண்ணினேம். காற்றுவரும்படி விசிறினேம்; சூடு ஏற்றுவதற்காக உடலைத்தேய்த்தோம். சன்னல் கதவுகளைத் திறக்கும்படி கத்தினேம்; தண்ணீர் கொண்டுவரும்படி கூச்சலிட்டோம். சிறிதுநேர ஆசுவாசுத்திற்குப் பிறகு திருமதி பர்டனின் நீலம்தோய்ந்த உதடுகள் அசைந்தன. அவள் மெதுவாக முணு முணுத்தாள். "எம்மா! நேற்றிரவு ஈவ்லின் ஆன் ஆற்றில் விழுந்து தற்கொலை செய்துகொள்ளப் போனுள். அதனுல்தான் நான் இப்



படித் தீர்மானம் செய்தேன்...'' அவள் பேச்சு நின்றது. மீண்டும் உயிருக்கு மன்ருட ஆரம்பித்தாள். அவளுடைய உயிர்த்திரி அணைந்துவிடாமல் பார்த்துக் கொள்ளுவதற்கு மறுபடியும் நாங்கள் மூவரும் படாத பாடு பட்டோம்.

"சுடுதண்ணீர் இருக்கிறதா?'' என்று பால் கேட்டார். உடனே, "ஓ, இருக்கிறது. அடுப்பிலிருக்கும் கெட்டிலில் இருக்கிறது'' என்று எம்மா கூறினுள். என் கணவர் கீழே உள்ள சமையற்கட்டை நோக்கி ஓடினுர். நான் எம்மா ஹிலட்டின் முகத்தைப் பார்த்தேன். அவள் குனிந்து தன் சகோதரியின் முகத்தை நோக்கிக்கொண்டிருந்தாள். முப்பது ஆண்டுகளாக அவள் பார்க்காத முகமல்லவா? திருமதி. பர்டன் கடைசியில் ஜெயித்துவிட்டாள். மரணப்போராட்டத்திலும் அவளுக்கு வெற்றி கிட்டிவிட்டது. அவளது உடலில் மீண்டும் சூடு ஏற்படத்தொடங்கியது

பால், வெந்நீர் கெட்டிலுடன் திரும்பினுர். ஒரு பாட்டிலில் வெந்நீர் நிரப்பப்பட்டது. எம்மா நிமிர்ந்து உட்கார்ந்தாள். வீட்டின் எஜமானிக்கு உரிய அதிகார தோரணையில் அவள் கட்டளைகள் பிறப்பிக்கத்தொடங்கினுள். "காரில் சென்று டாக்டரை உடனே அழைத்து வா!'' என்று அவள் பாலிடம் கூறினுள். "உம், சீக்கிரம் போ. இப்பொழுது அவளுக்குப் பரவாயில்லை. டாக்டர் வரும்வரை நானும் உன் மனைவியும் அவளைக் கவனித்துக்கொள்கிருேம் என்ருள் எம்மா.

பால் அங்கிருந்து சென்றவுடன், எம்மா பீரோவின் டிராயரிலிருந்து வெள்ளையான பொருள் ஒன்றை எடுத்தாள். தன் சகோதரி அணிந்திருந்த ஒட்டுப்போட்ட

கவுனை அகற்றிவிட்டு, அவளுக்கு ஒரு மிருதுவான கம்பளிக் கவுனை போட்டுவிட்டாள். அந்த கவுனில் அழகாக பூச்சித்திர வேலை செய்யப்பட்டிருந்தது. திருமதி. பர்டன் இலேசாகக் கண்ணைத் திறந்து பார்த்தாள். எம்லின் " நீ சும்மா படுத்துத் தூங்கு. இந்தப் பிராந்தியைக் கொஞ்சம் குடி " என்று எம்மா அன்புக் கட்டளையிட்டாள். திருமதி. பர்டன். கண்களை மூடிக்கொண்டாள். சிறிதுநேரம் கழித்து மீண்டும் அவள் கண்களை இலேசாகத் திறந்து, தன்னை அலங்கரித்த புதிய ஆடையை ஒருமுறை நோட்டமிட்டாள். இப்பொழுது அவள் சாவின் பிடியிலிருந்து அநேகமாக மீண்டுவிட்டாள்; அதனால் நீண்ட நிம்மதிப் பெருமூச்சு விட்டாள். "பேஷ் உன் பூச்சித்திர வேலைத்திறமை இப்பொழுதும் குறைந்துவிட வில்லையே ! எம்மா! நீ செய்து கொடுத்த பூ வேலைப்பாட்டை பார்த்துவிட்டு அத்தை 'சூ' வானளாவப் புகழ்ந்தாளே, ஞாபகம் இருக்கிறதா உனக்கு?" என்று சகோதரியின் கைத்திறனைப் புகழ்ந்தாள் திருமதி. பர்டன்.

" இருக்கிறது. ஆனால் கொஞ்சநாட்களாக நான் பூச்சித்திர வேலையைத் தொடவே இல்லை " என்று எம்மா ஹீலட் பதிலளித்தாள். அவள் இதைக் கூறிய பொழுதே அவள் தன் சகோதரியின் தலையடியில் இருந்த தலையணையைச் சரிப்படுத்தினாள்.

" இப்பொழுது நீ கொஞ்சம் அசையாமல் படுத்திரு." நான் கீழே போய் உனக்கு ஒரு கோப்பை தேநீர் தயாரித்துக்கொண்டு வருகிறேன் " என்று ஒரு நர்ஸைப் போல அதிகாரம் கலந்த குரலில் ஹீலட் கூறிவிட்டுச் சென்றாள்.



ஹீலட்டைப் பின் தொடர்ந்து நானும் சமையலறைக்குள் சென்றேன். காலைச் சம்பவத்தைப் பற்றி யாராவது என்னிடம் கேட்டால் என்ன சொல்ல வேண்டும் என்பதை அறிய நான் ஆவல் கொண்டேன். ஹீலட் ஏதாவது சொல்வாள் எனக் காத்திருந்தேன். ஆனால், அவளோ இது பற்றி எவ்விதப் பரபரப்புமே காட்டாமல், மிகவும் சாவதானமாகத் தேநீர் கலக்கிக் கொண்டிருந்தாள். என்னால் பொறுக்க முடியவில்லை; வாய் விட்டே கேட்டுவிட்டேன்: " நிராமிடமும் ஈவ்லீனிடமும் நான் என்ன சொல்லட்டும்? இதைப் பற்றி வேறு யாராவது கேட்டால் நான் என்ன பதில் சொல்வது ?—வார்த்தைகள் என் வாயிலிருந்து திக்கித் திக்கி வெளிவந்தன.

நான் ஊராரிடம் சொல்லப்போகும் செய்தியில் தான் தன்னுடைய குடும்பத்தின் பெருமையும் கௌரவமும் அடங்கி இருக்கிறது என்பதை ஹீலட் நன்கு உணர்ந்துகொண்டாள். அதனால், இரும்பு நெஞ்சங் கொண்ட அவள்கூட சற்றுக் கலங்கினாள். நடந்துகொண்டே யிருந்தவள் திடீரென நின்றாள். அமைதியாக ஆனால், பரிதாபமாக என்னைப் பார்த்தாள். அவள் வாயிலிருந்து வார்த்தைகள் வெளிப்பட மறுத்தன.

" வெறுப்பூட்டக் கூடிய முறையில் நான் எதையும் வெளியிட மாட்டேன்" என்று நான் உறுதி கூறினேன்.

ஈவ்லீன் ஆன் உங்களை விட்டுப் பிரிந்து சென்று விட்டதால், "நீங்கள் இங்கே தனியாக இருந்ததாகவும் அதனால் உங்கள் சகோதரியை உங்களுடன் வந்து

இருக்கும்படிச் செய்திருப்பதாகவும், நிராம்—ஈவ்லீன் இருவருக்கும் சீக்கிரமே திருமணம் செய்து வைக்கப் போவதாகவும் சொல்லட்டுமா?'' என்று கேட்டேன்.

எம்மா ஹீலட் மீண்டும் நீண்டதொரு பெருமூச்சு விட்டாள்! கொதிக்கும் தேநீர்க் கோப்பையுடன் மாடிப் படிகளை நோக்கிச் சென்றாள். கழுத்தை மட்டும் என் பக்கமாகத் திருப்பி, ''சரி, அம்மா! நீ சொல்வது தான் சரியான வழி என்று எனக்குத் தோன்றுகிறது'' என்றாள்.

* * *

அன்று திருமண நாள். நிராம் மணமகனாகவும், ஈவலீன்ஆன் மணமகளாகவும் நின்று கொண்டிருக்கிறார்கள். அவர்கள் இருவரும் விறைப்பாக நிற்கிறார்கள். ஈவ்லீன் மட்டும் சற்று வெளுப்பாகத் தோற்றமளித்தாள். நிராம் புதிய கறுப்புக் கால்சட்டை அணிந்திருந்தான். அவர்கள் இருவரும் பாதிரியாரைப் பார்த்துக்கொண்டிருந்தார்கள். பாதிரியார் சொன்ன மந்திரங்களை அவர்கள் மெல்லிய குரலில் திருப்பிச் சொன்னார்கள். அவர்களுக்குப் பின்னால், திருமணத்திற்கு வந்திருந்தவர்கள் நின்று கொண்டிருந்தனர். அவர்கள் சலவை செய்த வெண்மையான ஆடைகளை அணிந்து பளிச்செனத் தோற்றமளித்தார்கள். அவர்கள் புதிய தொப்பிகளையும் அணிந்திருந்தனர். வத்திகளின் வாசனை கமகமத்துக் கொண்டிருந்தது. கல்யாணத்துக்கு வந்திருந்த பெரியவர்களின் மத்தியில் பால், ஹோரேஸ், நான் ஆகிய மூவரும் இருந்தோம். நானும் என் கணவரும் கை கோத்து நின்றோம். ஹோரேஸ் தனது கடிகாரத்துடன் தொங்கிக் கொண்டிருந்த கறுப்பு நாடாவின் நுனியை கையில் சுற்றுவதும் பிரிப்பதுமாக



இருந்தார். அவர் அலுத்தவர் போல் காணப்பட்டார். திறந்திருந்த சன்னல்களின் வழியாகக் காற்று வீசிக் கொண்டிருந்தது.

''ஆண்டவன் உங்களை இணைத்து வைக்கிறார்...'' என்று சொல்லி பாதிரியார் திருமணச் சடங்கை முடித்தார். கல்யாணம் நல்லவிதமாக முடிவடைந்தது. நிராமும், ஈவ்லீனும் கணவன் மனைவியாகி விட்டனர். விருந்து ஆரம்பமாகியது. சூடான காப்பி, கோழிக் குழம்பு, பிஸ்கோத்து, ஐஸ்கிரீம் போன்ற உணவு வகைகளைப் பரிமாறுவதில் நாங்கள் ஈடுபட்டோம். விருந்தும் முடிந்தது. பிறகு புது மணமக்களைக் காரில் வைத்து ''புது மணமக்கள்'' என்ற பலகையை காரின் பின்புறம் தொங்கவிட்டு நண்பர்கள் கேலியும் செய்தார்கள். மணமக்களின் கார் புறப்படுவதை நாங்கள் பார்த்துக் கொண்டிருந்தோம். கார் புறப்பட்டு, குன்றிலிருந்து இறங்கிக் கொண்டிருந்தது. ஈவ்லீன் தனது கைக்குட்டையை ஆட்டிக் கொண்டே சென்றாள். எங்களுடன் நின்று கொண்டிருந்த பெண்களும் சிறுமிகளும் கண்களில் கண்ணீர்மல்க பதிலுக்குக் கைகளை ஆட்டி வழியனுப்பினர்.

நிராமும், ஈவ்லீனும் சென்ற கார் எங்கள் பார்வையிலிருந்து மறைந்து விட்டது. கூட்டமும் கலையத் தொடங்கியது. அவரவர்கள் கார்களில் ஏறிப் புறப் புறப்படலானார்கள். நானும் எங்கள் காரில் ஏறினேன். திடீரென என் மனதில் ஒரு கேள்வி முளைத்தது; ''ஆமாம்! அன்று இரவு—ஈவ்லீன் தற்கொலை செய்து கொள்ள முயன்றது கிழவி பர்டனுக்கு எப்படித் தெரிந்தது?'' என்று உரக்கவே கேட்டேன்.

ஹோரேஸ் மிகவும் சாதாரணமாகக் காரின் கதவைத் திறந்து கொண்டு, சரியாகப் பொருந்தாமல் இருந்த கதவை இழுத்து அடித்துச் சாத்தினர். அந்த ஓசையுடன் கலந்து "நான்தான் அவளிடம் சொன்னேன்" என்று ஹோரேஸ் கூறிய வார்த்தைகள் என் காதுகளில் விழுந்தன.

———

# குளிர்காலப் பனியும் காற்றும்

## வால்டர் வான் டில்பர்க் கிளார்க்

[இவர் நியூ இங்கிலாந்தில் 1909-ஆம் ஆண்டில் பிறந்தார். நிவாடாவில் கல்வி பயின்றார். பொதுப் பள்ளிகளில் பல ஆண்டுகளாக ஆங்கிலம், நாடகவியல், விளையாட்டுக்கள் ஆகியவைகளைக் கற்பித்தார். ஆக்ஸ்போ நிகழ்ச்சி, நடுக்க இலைகள் நகரம், பூனையின் அடிச்சுவடு ஆகிய மூன்று நாவல்களை அவர் எழுதி யுள்ளார். பெரும்பாலும் மேற்கத்திய நாவல்கள், சினிமாப் படங்கள் ஆகியவற்றில் வரும் காட்சிகள், பொருள்கள் பற்றியே அவர் எழுதினார். ஆனால் எடுத்துக் கொண்ட பொருளை அவர் கையாளும் திறமை காரண மாக அவருடைய இலக்கியப் படைப்புக்கள் தரமுள்ள தாகவே இருக்கின்றன. அவருடைய நடை வியக்கத் தக்கதே. "விழிப்பாயுள்ள கடவுளரும் மற்ற கதை களும் என்ற கதைக் கொத்தில்" குளிர்காலப் பனியும் காற்றும் என்னும் இக்கதை அடங்கியதாகும். இது உலோகங்களைத் தேடி அலையும் ஞாபகசக்தி குறைவா யுள்ள, ஒருவரைப் பற்றிய கதையாகும். கதையில் இரக்க உணர்ச்சி நிரம்ப இருக்கிறது. ஆனால், வெறும் உணர்ச்சியைக் கொண்டு மட்டுமே கருத்தை வெளியிடும் போக்கு இக் கதையில் இல்லை].

* * *

அந்திமயங்கும் நேரம். பாரவண்டிகள் செல்லும் அந்தப் பழங்கால மலைப்பாதை உச்சியின் கடைசி

எல்லையை எட்டிவிட்டார் மைக்பிரானின். கம்ஸ்டாக்கின் காலந்தொட்டுப் பொன்மலைக்குக் கீழ்ப்புறமாகச் செல் வதற்கு உள்ள ஒரே சாலை இதுதான். இந்தச் சாலை மிகவும் குறுகலானது. கரடுமுரடான பூமியில் இரண்டு வண்டித் தாரைகள் பள்ளமாக இருந்தன. இரு தாரை களின் இடைப் பகுதி நெடுகிலும் அடர்ந்த புற் புதர் கள் வளர்ந்திருந்தன. ஆழமான பள்ளங்களும், உயர்ந்த மேடும், கடுந்திருப்பங்களும் அந்தச் சாலை நெடுக நிறைய இருந்தன. மலை உச்சியிலிருந்து அந்தச் சாலை செங்குத்தாகக் கீழ் இறங்கிப் பொன் மலைக்குச் செல்கிறது. மலைச்சரிவு ஓரமாக அந்தச் சாலை வளைந்து வளைந்து செல்கிறது. கணவாயின் மறு புறத் தில் இப்பொழுது நன்கு சமதளப்படுத்தப்பட்ட நல்ல சாலை இருக்கிறது. ஆனால், மைக்பிரானின் அந்தச் சாலையில் செல்லும் வழக்கமில்லை. ஏனென்றால், அந்தச் சாலையில் அடிக்கடி பெருஞ் சத்தம் எழுப்பிக் கொண்டு மோட்டர்கள் வரும். அவை அவரை நிலை தடுமாறவைக்கும். அதனால் அவரது சிந்தனை ஓட்டமும் அவ்வப்போது தடைபட்டுவிடும். அவர் அடிக்கடி பின்புறம் திரும்பித் தனது கழுதை 'அன்னி' தனக்குப் பின்னால் சாலையின் ஓரமாகப் பாதுகாப்பான முறையில் வந்துகொண்டிருக்கிறதா என்பதைப் பார்த்துக்கொள்ள வேண்டியிருக்கும் அல்லவா? கார்களைக் கண்டால் மைக்குக்கு எப்பொழுதுமே ஒரே வெறுப்புத்தான். அவர் வழக்கமாகச் செல்லும் பழைய சாலையில் இந்தக் கார் களின் தொல்லை கிடையாது. தன் கழுதையைப் பற்றிய கவலையின்றி நடந்து செல்லலாம். எப்பொழுதா வது கழுதையின் குளம்பொலிச் சத்தம் நிற்கும்



பொழுது மட்டும் திரும்பிப் பார்த்துக் கொண்டால் போதும். அப்பொழுதும்கூட அவரது சிந்தனைத் தொடர் அறுபட்டுவிடாது. உண்மையில், கழுதையின் குளம்புச் சத்தம் அவரது சிந்தனைக்கு ஒருவகையில் தூண்டுகோலாகவே இருந்தது. "டக்டக்" என்ற அச்சத்தம் நிற்கும்பொழுது, அவரும் நிற்பார்; பின்னால் திரும்பிக் கழுதை என்ன செய்கிறது என்பதைப் பார்ப்பார். பிறகு மீண்டும் நடை தொடங்கும். அந்த நடையில் அதே நிதானம்; ஒரே சீரான வேகம். நடக்கும்போது கைகள் மிகவும் அரிதாகவே ஆடின, இடுப்புக்கு மேலுள்ள உடற் பகுதி சற்று முன்புறமாகக் கூனியிருந்தது. மறுபடியும் நடக்கத் தொடங்கியதும் சிந்தனை சிதறிவிட்டதே என்ற நினைவுகூட இல்லாமல் விட்டுப்போன பழைய நினைவையோ, அல்லது ஏதாவது புதிய கதையையோ அவரது மனம் மீண்டும் சிந்திக்கத் தொடங்கிவிடும். தம் கற்பனையில் தோன்றும் எண்ணங்களுக்கும், கதைக்கும் இடையூறு ஏற்படுவதை மைக் விரும்ப வில்லை. அப்படியே இடையூறு ஏற்படுவதனால் அது அவர் மனதில் தோன்றிய—அவர் தேடி அலைவது பற்றிய—ஒரு புதுக்கருத்தால் தான் ஏற்படவேண்டும். அல்லது அவர் கதையில் வரும் ஒரு கருத்து அவரது ஞாபக சக்திக்கு அதிக வேலையளித்திருக்கும். அல்லது புதிய நல்ல கதை பற்றிய கருத்தாகவும் அது இருக்கக் கூடும்.

அந்த முதியவரின் தலைக்கு மேலாக இருந்த மலை முகடுகளிலிருந்து வீசிய செறிவார்ந்த பொன்னொளி கிழக்குப்புறம் அடர்ந்திருந்த பனிப் படலத்தின் மீது

பட்டுத் தெறித்துக் கவின்மிகு காட்சியாகத் திகழ்ந்தது. எல்லா நாட்களிலும் இங்கு இது போல்தான் நாள் முழுவதும் பனிக்காற்று அடித்துக் கொண்டிருக்கிறது. என்ருலும், இப்பொழுது பெரும் பனிமழை ஏதுவும் பெய்யவில்லை. காற்றில் மிதந்து வந்த பனிமாவு மட்டும் புல் தரையில் படிந்திருந்தது. அதனுல் நிலம் வெறுமையாகக் காட்சி தந்தது. இதை யெல்லாம் கண்டு மைக்பிரானீன் ஏமாந்துவிட வில்லை. இது பெருங்காற்றுடன் மழை பெய்யும் காலமல்ல; குளிர் காலத்தின் தொடக்கம் தான். இன்றிரவு இல்லாவிட்டால் நாளை, அல்லது நாளை மறுநாள் பனிமழை பெய்யத் தொடங்கிவிடும். மலைமுகடுகளைப் பனிப்படலம் மூடிவிடும். பாலைவனத்திற் கூட வெண்பனிக் கம்பளம் ஒரு மணி நேரத்தில் விரிக்கப்பட்டு விடும். ஐம்பத்திரண்டு ஆண்டுகளாக இந்நாட்டில் வாழ்ந்து வரும் மைக்பிரானீனுக்கு இதெல்லாம் மனப்பாடம் ஆயினும், இதைப்பற்றியெல்லாம் அவர் அதிகமாகச் சிந்திப்பதில்லை. இந்தக் காலத்தைச் சமாளிப்பதற்கு என்னென்ன செய்து கொள்ள வேண்டும் என்பதை மட்டும் தான் அவர் சிந்திப்பார். மூன்றும் நாள் இரவு திடீரென்று கண்விழித்தார். வெகுதூரத்திலிருந்து வீசிய காற்றிலே ஒருவித மாற்றத்தைக் கண்டார். அந்த வாடைக் காற்று, அவரது போர்வைகளையும் துளைத்துக்கொண்டு உள் நுழைந்து, உடல் எலும்புகளை ஊசி கொண்டு குத்துவதைப்போல் தாக்கியது. மைக் அதிலிருந்து குளிர்காலம் தொடங்கிவிட்டது என்பதை உணர்ந்து கொண்டார். ஆனுல், வானம் சுத்தமாகவே இருந்தது. மலை அடுக்குகளின் கறுமையான முகடுகளுக்கு மேலே நட்சத்திரங்கள் கண்



சிமிட்டிக்கொண்டிருந்தன. ஆங்கோர் விண்மீன் கூட்டம், பூவுலகில் கவிந்திருக்கும் அடர்ந்த இருளைச் சிறிதும் மதியாமல் வெண் முத்துப் பற்களைக் காட்டிக் கைகொட்டிச் சிரித்து விளையாடிக் கொண்டிருந்தது. அரைத் தூக்கத்திலிருந்த மைக், ஊதைக் காற்று தன் உடலைத் தழுவுவதை உணர்ந்து சிந்தித்தார். கழுதை 'அன்னி' கால்கள் கட்டப்பட்டிருந்ததால் குழம்பிய நிலையில் அங்குமிங்கும் தாவிக் குதித்துக் கொண்டிருந்தது. மைக்கின் மனதில் சிந்தனை ஓடியது. ஏது குளிர் காலம் வந்துவிட்டமாதிரி இருக்கிறதே? ஆனுல் இந்த வருடக் குளிர் காலம் தாமதமாக வருகிறதே, டிசம்பர் மாதம் கூடப் பிறந்து விட்டதே'' என்று முணுமுணுத்துக் கொண்டார். பிறகு, மனதில் ஒருவிதமான மகிழ்ச்சியுடன் அவர் மீண்டும் உறங்கிவிட்டார். பொன்மலைக்கு மீண்டும் செல்லும் நினைவுதான் அவரது மன மகிழ்ச்சிக்குக் காரணம். மைக்பிரானீனுடைய வாழ்க்கையின் மறுபாதி பொன்மலைதான்.

குளிர் காலத்தின் அறிகுறிகள் தொடங்கியவுடன் அவர் பொன்மலைக்குத் திரும்பி விடுவது வழக்கம்.

மார்ச் அல்லது ஏப்ரல் மாதத்திலிருந்து குளிர் காலம் வரும் வரை, அவர் தமது ஒரே சகாவான கழுதையுடன் ஒயிட்பைன்ஸ், விர்ஜினியர்ஸ் ஆகிய மலைகளுக்கிடையே எங்கேயாவது சுற்றி அலைந்து கொண்டே இருப்பார். குளிர் காலத்திற்கான அறிகுறிகள் தென்பட்டதும் அவர் தம் கழுதையுடன் பொன்மலையை நோக்கிப் பயணம் தொடங்குவார்.

மைக்பிரானீன் தம் பயணத் துணையாக எத்தனையோ கழுதைகளை அழைத்துப் போயிருக்கிறுர்.

18 இருக்குமா? இல்லை இருபதா? யோசித்தார்; அவருக்குச் சரியாக நினைவில்லை. அவற்றையெல்லாம் அவருக்கு நினைவில் வைத்துக்கொள்ள முடியவில்லை. எனினும் இளைஞராக இருந்தபோது அவர் வைத்திருந்த கழுதைகள் மட்டும் நன்றாக நினைவிலிருந்தன. அந்தக் காலத்தில் பொன்மலைக்குத் திரும்பி வந்தபோதெல்லாம் அவருக்குப் பெண்களைப் பற்றிய எண்ணம்தான் அதிகமாயிருந்தது. ஆகவே, விந்தையான தோற்றமுள்ள கழுதைகளையோ, அல்லது விசித்திரமான நிகழ்ச்சிகளில் மேரியாபோல் பங்குகொண்ட கழுதைகளையோ, அல்லது, வயிற்றில் பந்துபோல் நிறத்திட்டு உடைய கழுதைகளையோ பற்றித்தான் அவர் நினைவில் வைத்துக்கொள்ள முடிந்தது. அவருக்கு ஒரு நிகழ்ச்சி நேற்றுத்தான் நடந்ததுபோல தெளிவாக நினைவுக்கு வந்தது. ஹாமில்டனில் அந்தச் சம்பவம் நிகழ்ந்தது. அந்த நாளில் ஹாமில்டன் பள்ளத்தாக்கு ஜன சந்தடி மிகுந்ததாய் இருந்தது. கட்டிடங்கள் நெருக்கமாக அமைந்திருந்தன. அங்கு வசித்த மக்கள் மிகச் சுறுசுறுப்பாகக் காணப்பட்டனர். "வெல்ஸ்பார்கோ கட்டிட"த்தில் ஓர் அறையில் மைக் தங்கி ஓர் இரவைக் கழித்திருக்கிறார். காற்றினால் அசைந்த இரும்புக் கதவு ஒன்று சுவரில் படார் என்று மோதிக்கொண்டிருந்ததையும் பொருட்படுத்தாமல் அவர் சுகமான நித்திரையில் ஆழ்ந்திருந்தார். காலையில் எழுந்து பார்த்தபோது அவரது கழுதை "மேரியா"வைக் காணவில்லை. அது எங்கு சென்றது என்பதும் புரியவில்லை. தரையில் கழுதையின் கால் குளம்புச்சுவடுகள் பதிந்திருந்ததை அவர் கண்டார்.



கழன்றுபோய்த் தொங்கிக்கொண்டிருந்த குளம்பை இழுத்து நடந்து சென்ற அக்கழுதையின் கால் சுவட்டைப் பின்பற்றியே சென்றார். கருவூலக் குன்றுவரையிலும் அவர் சென்றுவிட்டார். சாலையின் விளிம்பையும் எட்டிவிட்டார். ஆனாலும் கழுதை காணாமலே போய்விட்டது. இவையெல்லாம் அவருக்கு நன்றாக ஞாபகத்தில் இருந்தன. அவரிடம் இருந்த மற்ற கழுதைகள் இந்த மேரியா கழுதையவ்வளவு முட்டாள் கழுதைகளாக இருக்கவில்லை. அதன்பின் கடந்த 20 ஆண்டுகளில் அவர் எத்தனையோ கழுதைகளை வாங்கியிருக்கிறார். ஆனால் குறிப்பிட்ட ஏதோ அடையாளம் இல்லாத கழுதைகளை ஞாபகத்தில் வைப்பது சாத்தியமற்ற வேலை அல்லவா? அவருக்கு இவை ஞாபகமில்லை. அதற்காக அவர் சிரமம் எடுத்துக்கொள்ளவுமில்லை. பெண் கழுதைகளையெல்லாம் "ஆனி" என்றும், ஆண் கழுதைகளை "ஜேக்" என்று மட்டும் அவர் ஞாபகத்தில் வைத்துக்கொண்டார்.

கழுதையின் குளம்புச் சத்தம் நின்றது. மைக்கும் நின்றுவிட்டார்; திரும்பிப் பார்த்தார். சாலையோரமிருந்த காய்ந்த புல்லை கடித்து இழுக்க முயன்றுகொண்டிருந்தது கழுதை ஆனி. "வா! மேரியா?" எனப் பொறுமையுடன் கூறினார் மைக். புல்லை கடித்து இழுப்பதை உடனே நிறுத்திவிட்டு கழுதை அவரருகே வந்தது. அதன் கரிய மூக்கு சுருங்கி விரிந்துகொண்டிருந்தது. அதன் வாயில் சிக்கியிருந்த புல் மீசையைப்போல் இரு புறங்களிலும் நீட்டிக்கொண்டிருந்தது. மைக் தொடர்ந்து நடக்க ஆரம்பித்தார்; அவரைக் கழுதை பின் தொடர்ந்தது.

அவர் முன்பு குளிர் காலத்தில் மலைமீது அகப்பட்டுக் கொண்டு தவித்தது ஞாபகத்திற்கு வந்தது. ஆனால் அது நடந்து எவ்வளவு காலம் ஆகி இருக்கும்? அது அவருக்கு நினைவில்லை. அவரது மனத்திரையில் பல வருஷக் குளிர் காலங்களின் தொடக்கங்கள் அனைத்தும் ஒருங்கே நினைவுக்கு வந்து குழப்பத்தை உண்டாக்கின. எல்லாக் குளிர் காலங்களும் மொத்தமாக நினைவிற்கு வந்து ஒரே குளிர் காலமாகத் தோன்றியது. இதையெல்லாம் அவர் மறந்து போய் எவ்வளவோ நாட்களாகி விட்டன. இப்பொழுது நினைவுக்குக் கொண்டு வருவதென்றால் இலேசான காரியமா? ஆயினும், ஒரே ஒரு சம்பவம் மட்டும் அவருக்குத் தெளிவாக நினைவுக்கு வந்தது. அப்பொழுது அவர் வாலிப முறுக்குடன் இருந்தார். வயது முப்பத்தைந்து நாற்பது, அல்லது நாற்பத்தைந்துக்குள் தான் இருக்கும். தம் வயதைத் திட்ட வட்டமாகத் தீர்மானிப்பதற்குக் கூட அவர் தனது நினைவுக் கயிற்றை வெகு நேரம் சுண்டிப் பார்க்க வேண்டியிருந்தது. இந்தச் சின்ன விஷயத்திற்கெல்லாம் இவ்வளவு தொல்லைப்படுவது? சிக்கல் விழுந்த நூல் கண்டைப் போல் பல தேதிகள், ஒன்றோடு ஒன்று பிணைத்துக் கொண்டு அவர் மனதில் குழப்பத்தை உண்டு பண்ணின. எந்தக் குறிப்பிட்ட நிகழ்ச்சியைக் கொண்டு தேதியை நிர்ணயிப்பது? ஏதாவது விசேட நிகழ்ச்சி நிகழ்ந்திருந்தாலல்லவா நினைவுக்குவரும்? அவர் அந்த மலைக்கு வருவதும் போவதும் தான் எப்போதும் ஒரே விதமாகத் தானே இருந்திருக்கிறது. ஆனால் ஒன்று மட்டும் நிச்சயம் அவர் எப்போதோ ஒரு சமயம் இளைஞராக இருந்திருக்கிறார். இதை மறுப்பதற்கில்லை யல்லவா? அந்த வாலிப முறுக்கில் எதைக் கண்டும் அவர் அஞ்சாமல் இருந்திருக்கிறார்; குளிர் காலம் கூட அவரை நடுங்க வைத்தது கிடையாது. அவருடைய உடலில் அவ்வளவு தெம்பு இருந்தது. அதை அவர் பல வகையிலும் நிரூபித்துமிருக்கிறார். கடுங் குளிரில் மலைக்காடுகளில் சுற்றித் திரிந்தும், மரங்களில் ஏறிக் குதித்தும் பனிப் பாறைகளில் சறுக்கி விளையாடியும் அவர் குளிர் காலத்தைக் கழித்திருக்கிறார். மலைகளில் கொத்துங் குலையுமாக அடர்ந்திருந்து மரங்களில் வெண் பனி படிந்து, வெண்ணிற மலைச் சரிவுகளில் நீலநிற நிழலை வீழ்த்திக் கொண்டிருந்த காட்சிகள் மைக்கின் நினைவில் பளிச்சிட்டன. அடுக்கடுக்காக அமைந்திருந்த குன்றுகள் ஒன்றின் மீது ஒன்று நீல நிழலை விழச் செய்தன. எங்கும் அமைதி குடிகொண்டிருந்த அந்த நேரத்தில், தன் 'பிக்காசி'னால் பனிக் கட்டியைக் கொத்திக் கொத்தி மைக் மலைமீது ஏறிய போது ஏற்பட்ட சத்தம் மணி ஓசைபோல் "கணீர் கணீர்" என்று ஒலித்தது. அந்தக் குன்றுகளில் அலைந்து திரிந்தும், மலை நிழல்களில் ஓடியும் ஆடியும் மகிழ்வுடன் கழித்த அந்த இளமைக் காலம் மைக்கின் மனதில் பசுமையாக இருந்தது. தாம் மும்மரமாக மலையாராய்ச்சி நடத்தி வருவதாக மைக்கின் மனதிற்குள் எண்ணம். அதற்காக அவர் தம்முடன் கல் துளைக்கும் கருவியையும், சம்மட்டியையும் கூட எடுத்துச் சென்றிருந்தார். ஆனால் அவர் உண்மையில் மலைப் பகுதியில் வீண் பொழுதுதான் போக்கி வந்தார். இதையெல்லாம் எண்ணிப் பார்த்த மைக் அப்போது

தமக்கு 35 வயது இருக்கலாம் என்ற முடிவுக்கு ஒரு வாறு வந்தார். அதன் பின் உல்லாசப் பொழுது போக்குக்கான இடந்தேடித் தான் போனது நினைவுக்கு வந்தது. பிறகு இருவிதப் பருவ காலத்தை நினைத்துக் கொண்டார்; குளிர் காலம்; வசந்த காலம். வசந்த காலத்தில் தென்றல் வீசும். வெள்ளை நிறப் புகைக் கூட்டம் போன்று வானில் தவழ்ந்து செல்லும் மென்மையான முகில் கூட்டங்கள் குன்றுகளைத் தாண்டும்போது முகடுகளில் கருநிழல் விழும். மலை முகடுகளில் மேகக் கூட்டங்களைக் காண முடியாது. சூரியன் தன் பொன்னிறக் கிரணங்களால் மலைகளைத் தழுவிக் கொண்டிருப்பான். இந்தக் கண் கொள்ளாக் காட்சியைக் காணும் பொழுது மனிதனுக்கு ஒரு பக்கம் மகிழ்ச்சி வெள்ளம் பெருக்கெடுத்தோடினாலும், மறு பக்கம் துயர மேகங்கள் மனதில் கவியும். ஏன்? வசந்தம் சும்மாவா இருக்கும்? வசந்தம் தன் எழிலை உமிழ்ந்து சிங்காரப் புன்னகையுடன் சிரித்து விளையாடும் பொழுது ஒவ்வொரு ஆணுக்கும் தன் மனைவியுடன் களித்த இன்ப இரவுதான் நினைவுக்கு வரும்; மணமாகாதவர் மனதிலோ, கன்னிப்பெண் தோன்றித் தொல்லை தருவாள்; அல்லது, பத்திரிகைகளில் பார்த்த நடிகைகளின் உருவத்தைக் கொண்டு அவன் கற்பனையில் தீட்டிய காரிகை சந்திரபிம்ப வதனம், கருமுகிலனைய நீண்ட கூந்தல், அளவோடு அழகாக அமைந்த கரங்கள், கால்கள், கண்டவுடன் உள்ளத்தைக் கொள்ளைக் கொள்ளும் அங்க அவயங்கள், மனதைச் சுண்டி இழுக்கும் எடுப்பான மார்பகங்கள்—இவற்றுடன் கனவில் வந்து களிநடம் புரிவாள். ஆனால்



கண்ணுடன் கண் நோக்கி, காதல் மொழி பேசி, அன்புடன் அணைத்து வசந்தத்தைச் சுவைப்பதற்கு அந்தச் சொப்பன சுந்தரி, தனிமை இவையெல்லாம் நேரில் அநுபவிக்கும் வாய்ப்பு இல்லையே என்ற வருத்தமும் கூடவே எழும். ஆனால் மைக்பிரானின், மாதர்களைப் பார்த்தோ, மடவார் தம் மயக்கும் மொழிகள் கேட்டோ வெகு நாட்கள் ஆகிவிட்டன. ஆகவே, பனிக் காலத்தில் மைக்கின் மனதில் பழைய நண்பர்கள் தாம் கேட்டறிந்த இடங்கள் தாம் நெடு நாட்களாகச் செல்லாத இடங்கள் இவை பற்றிய எண்ணங்களே ஏற்பட்டு வந்தன. 1912-ஆம் ஆண்டுக் கோடை காலத்தைக் கழித்த பொன் மலையை அவர் அடிக்கடி ஞாபகப்படுத்திக் கொள்வார். வசந்த காலம் முடிந்து குளிர் காலம் தொடங்கும் பொழுது பொன் மலையைப் பற்றிச் சிந்திக்கத் தொடங்குவார். பொன் மலைக்கு வந்தால், நான்காவது தெருவிலுள்ள திருமதி. ரைட்டின் வீட்டில் தம் அறைக்குச் செல்வார்; "உலக மாளிகை" என்ற உணவு விடுதியிலிருக்கும் சாப்பாட்டு அறையில் உணவருந்துவார்; "லக்கிபாய்" என்ற சவரக் கடைக்குச் செல்வார்; அங்கு டாம் கன்னோவருடனும் மற்ற நண்பர்களுடனும் உரையாடி மகிழ்வார்; சீட்டாடுவார்; மதுபானம் அருந்துவார். குளிர் காலத்தில் பொன் மலையில் மைக்பிரானினுடைய அன்றாட வேலை இது தான். இந்த 52 ஆண்டுகளில் அவர் மூன்று அல்லது நான்கு முறைதான் குளிர் காலத்திற்குத் தம் சொந்த ஊரான பொன்மலைக்குத் திரும்பாமல் இருந்திருக்கிறார்.

இப்போதும் இந்தக் குளிர் காலத்திலும் அவர் வழக்கம் போல் பொன்மலைக்குத்தான் செல்கிறார்.

இதுவும் அவரது வழக்கமான பயணம்தான் என்ருலும், இன்று இப் பயணத்தில் அவருக்கு ஏதோ மாறுபாடு தோன்றியது. வழக்கமான முறையிலேயே அவர் பயணத்தைத் துவக்கினர். ஆனல், அகன்று விரிந்த இரண்டு பள்ளத்தாக்குகளையும், அவற்றுக்கிடையே அமைந்த கணவாயையும் கடந்து வந்தவுடன் மைக்கின் மனதில் இந்த மாறுபாடு தென்படத் தொடங்கியது. அவரது உடலில் புதுவிதமான இளமைத் தெம்பு தோன்றியது. மனதிலே புதிய உற்சாகம் பிறந்தது; ஆனல் திடீரென மறுபடியும் அவர் கிழட்டுத் தன்மையை உணர்ந்தார். அவரது வயதையும் மீறிய முதுமை உள்ளத்தில் புகுந்தது. அவர் தலையை நிமிர்த்தி மலை முகடுகள் தெளிவாகத் தெரிகின்றனவா அல்லது முகில் கூட்டங்கள் மூடிக் கொண்டிருக்கின்றனவா என்பதை ஒரு தரம் பார்த்துக் கொண்டார். உண்மையிலேயே கடும் பனி பெய்யும் பொழுது அந்த இடத்தில் தாம் சிக்கிக் கொண்டால் மீழ்வது எவ்வளவு கடினம் என்பதை எண்ணிப் பார்த்தார். அதை நினைத்த பொழுதே அவர் உடல் நடுங்கியது. இன்னும் கடக்க வேண்டிய தொலைவைக் கணக்கிட்டார். அவ்வளவு தூரத்தையும் கடந்தாக வேண்டுமே என்று கவலை கொண்டார். பனிக் காற்று அவரது உடலில் ஒவ்வொரு அணுவையும் துளைத்தது. தான் அணிந்திருந்த கனத்த கம்பளி உடைகளைப் பலமுறை இழுத்து உடல் முழுவதையும் மூடிக் கொண்டார். அவருக்கு நெடு நாட்களாகவே கீல் வாய்வு உண்டு. இப்பொழுது அந்த வாய்வு உடம்பின் ஒவ்வொரு மூட்டிலும் தங்கி, கடும் வலியை ஏற்படுத்தியது. இதை



யெல்லாம் உணர்ந்தபோது, தான் மிகவும் மெதுவாக நடந்து செல்வதாக நினைத்தார். எனினும், இந்த நினைப்பு அவரது நடையின் வேகத்தைச் சிறிதளவும் அதிகப்படுத்தவில்லை. அதற்கு அவர் முயற்சி எடுக்கவுமில்லை. சில சமயங்களில் மிகவும் களைப்பு ஏற்படுவதாக அவருக்குத் தோன்றியது.

மைக்கின் உடல் நிலை இப்படி இருந்த போதிலும் மனம் மட்டும் பளிங்குபோலத் தெளிவாகவும், பாறையைப் போல் உறுதியாகவும் இருந்தது. சுறுசுறுப்புடன் பயமின்றிச் செயலாற்றிய நாட்கள் முதல், கடந்த பல ஆண்டுகளில் நிகழ்ந்த பல விதமான நிகழ்ச்சிகள் அவருக்குத் தெளிவாக நினைவுக்கு வந்தன. பல ஆண்டுகளாக அவர் நினைத்துக்கூடப் பார்க்காத சில பழைய சம்பவங்களும் ஞாபகத்துக்கு வந்தன. யூரேக்காவில் இளமங்கையொருத்தியுடன் இன்பம் அனுபவித்த சம்பவமும் அவரது சிந்தனையில் திடீரென மின்னலிட்டது. "அடடே! அந்த இளம் பெண்ணின் பெயர்கூட நினைவுக்கு வருகிறதே? 'ஆர்மண்டி'! ஆமாம்! அது தான் அவள் பெயர். வேடிக்கையான பெயர்தான். அவளைப் போன்ற விலை மாதர்கள் எப்பொழுதுமே தொழிலுக்கேற்றபடி பொருத்தமான கவர்ச்சிப் பெயர்களைத் தேர்ந்தெடுத்துச் சூட்டிக் கொள்கின்றனர். செஸிலி, ரோச்மண்டி, பெல்லி, கிளையர் இவை போன்ற கவர்ச்சியான பெயர்களும், டயமண்ட் கேட் ஹார்ஸ்ஷீசால் போன்ற கடினமான பெயர்களும், இந்தியன் கேட், ரோமன் மேரி, போன்ற பெயர்களும் அவர்களுக்கு எப்படியோ கிடைத்து விடுகின்றனவே.

ஆனால் ஆர்மண்டி என்ற பெயரில் ஒரு தனி அழகு இருக்கிறது,'' என்று எண்ணினார் மைக்.

ஆர்மண்டி இப்பொழுது தன் அருகில் அமர்ந்திருப்பது போலவே உணர்ந்தார் மைக். அன்று அவள் படுக்கையில் நடந்துகொண்டது போல் இப்போதும் நடக்கவில்லை. அப்பொழுது எப்படி நடந்தாள்? அட, சனியனே! நினைவுக்கு வரவில்லையே ஒன்றுகூட நினைவில்லையோ! அவருக்கு இன்பம் அளித்துள்ள—அடிக்கடி பழகிய—வேறு பெண்கள் தான் நினைவுக்கு வருகிறார்கள். அவர்கள் பஞ்சணையில் அவருக்கு அளித்த இன்ப நினைவுகளும் தோன்றுகின்றன. ஆனால், ஆர்மண்டி...? அவளுடன் ஒரே ஒரு இரவைத் தான் அவர் கழித்தார். அதுமட்டும் தான் அவரது எண்ணத்தில் நிலைத்திருக்கிறது. அதை நினைக்கும் பொழுது இன்பம் சுரக்கிறது. ஓட்டல் ஒன்றின் மேல் மாடியில், ஓர் அறையில், ஆர்மண்டி இருக்கிறாள். தெருவின் எதிர் சாரியில் இருந்த ஒரு பொழுது போக்கு விடுதியிலிருந்து பியானோ இசை கேட்டுக்கொண்டிருக்கிறது. அந்தப் பாட்டின் மெட்டு அவருக்கு மிகப் பழக்கமானது தான். ஆனால் அது என்ன ராகம் என்பது தான் அவருக்குத் தெரியாது. அந்த மெட்டு மகிழ்ச்சி நேரத்தில் பாட வேண்டிய ஒன்றுதான். எனினும், ஒருவகைச் சோகச் சுருதியுடன் கலந்து மெட்டு கேட்டுக்கொண்டிருந்தது. வீதியிலிருந்த ஓட்டல்களின் ஒளி விளக்குகள் இரவைப் பகலாக்கிக் கொண்டிருந்தன. மக்கள் நடமாட்டம் அந்த ஒளியில் நன்றாகத் தெரிந்தது. அந்த ஒளி விளக்குகளுக்கு அப்பால் தெரிந்த மலைகள் காரிருளில் மூழ்கிக்கிடந்தது. ஆர்மண்டி வெண்மையான பட்டு உடை அணிந்து எழில் பொங்கும் மங்கையாகக் காட்சி தந்தாள். டாலருடன் கூடிய தங்கச் சங்கிலி அவள் கழுத்தில் மின்னியது. அவள் மாநிறம் தான். முகத்தில் வெண்மையான பவுடரை அழுத்தமாகப் பூசியிருந்தாள். இருந்தாலும், அவள் மேனியின் மாநிறம் முழுவதையும் மறைக்க முடியவில்லை. அவள் அணிந்திருந்த டாலர் இருதய வடிவில் இருந்தது. டாலரைத் திறந்து பார்த்தால், அதில் ஒரு பெண்ணை ஒரு ஆண் இலேசாகப் பற்றி அணைத்துக் கொண்டிருப்பதுபோன்ற படத்தைக் காணலாம். அப் படத்தின் ஆண், பெண் இருவர் கையிலும் தங்க நிறத்தில் இரண்டு எழுத்துக்கள் பொறிக்கப்பட்டிருந்தன. இந்தப் படத்தில் இருப்பவர்கள் யார்? இந்த டாலர் அவளுடையதுதானோ? என்பதை ஆர்மண்டி சொல்ல மறுத்துவிட்டாள். மைக் சன்னலோரமாக வந்து நின்று, பியானோ இசை வரும் திசையை நோக்கிக் கொண்டிருந்தார். கையில் ஒயின் கோப்பையுடன் ஒயிலாக வந்த ஆர்மண்டி, மைக்கின் உடலுடன் உரசிக்கொண்டு நின்றாள். ஆர்மண்டியைக் கால்முதல் தலைவரை ஒருமுறை கூர்ந்து பார்த்தார் மைக். அவள் காலில் வெள்ளை சாட்டின் ஸ்லிப்பர் அணிந்து கொண்டிருந்தாள். அவளது அழகிய பெரிய தொப்பி துணிப் பெட்டியின்மேல் வைக்கப்பட்டிருந்தது. அதில் கறுப்பு, வெள்ளை இறகுகள் செருக்கப்பட்டிருந்தன. அவரது தோல் கோட்டு படுக்கையின் கால் பக்கத்தில் கிடந்தது. அறையின் மத்தியில் எண்ணெய் விளக்கு ஒன்று மங்கலாக எரிந்துகொண்டிருந்தது.

ஆர்மண்டி மெதுவாக, சிறிதே பயத்துடன் பேசினாள்;

குரலில்தான் எவ்வளவு இனிமை; மென்மை? அவள் அவரை அடிக்கடி உற்று நோக்கினாள். அவரது சிந்தனையில் ஓடும் எண்ணம் என்ன என்பதை அவள் அறிய முயல்கிறாளோ? மைக் தனது கைகளைக் கட்டிக் கொண்டு நின்றிருந்தார். உருண்டு திரண்டிருந்த கட்டான மார்பில் அவர் மடித்துக்கொண்டிருந்த கைகள் பெரிதாகத் தோன்றின. ஒருவித அவசரமும் காட்டாதவரைப் போல் அவர் நிதானமாக நின்றுகொண்டிருந்தாலும், உண்மையில் ஆர்மண்டியின் அழகு அவரை ஒவ்வொரு கணமும் மயக்கிப் போதை ஏற்றிக் கொண்டிருந்தது. அவர் மனம் அவளை எந்தெந்த வகையிலெல்லாம் அனுபவிக்கலாம் என்பதைச் சிந்தித்துக் கொண்டு இருந்தது.

அந்தச் சமயத்தில், குதிரையின் காலடிச் சத்தம் கேட்டது. மேற்குத் திசையிலிருந்து கரிய நிறக் குதிரை ஒன்று கம்பீரமாக தலைநிமிர்ந்தபடி வந்து கொண்டிருந்தது. அதன்மீது தோற்றப் பொலிவோடு கூடிய ஒரு மனிதன் அமர்ந்திருந்தான். அவன் கவர்ச்சியான உடைகள் அணிந்திருந்தான். வீதியோரத்தில் நடந்து சென்றுகொண்டிருந்த நண்பர்களைப் பார்த்தவுடன் ஒரு உயர்தர அதிகாரியைப் போல் அவன் "சலாம்" செய்தான்; சிலருக்குத் தலையை இலேசாகக் குனிந்து மரியாதை தெரிவித்தான். வேறு சிலருக்குத் தொப்பியைத் தொட்டு வணக்கம் தெரிவித்தான். "இந்த மனிதன் யார்?" என்று ஆர்மண்டியிடம் கேட்டார் மைக். "அந்த ஆள் இந்த வட்டாரத்தில் முக்கியமான ஒரு பிரமுகர். பொனன்சாவில் அவருக்குச் சொந்தமான சுரங்கம் ஒன்று இருக்கிறது" என்று ஆர்மண்டி பதிலளித்தாள். அவளின் இப்பதில் மைக்குக்கு மகிழ்ச்சி அளிக்கவில்லை. "அவள் அவனைப்பற்றி இவ்வளவு தூரம் தெரிந்திருக்கும் அளவுக்கு அவன் பெரிய மனிதனா?" இந்த எண்ணம் அவருக்கு எரிச்சலை ஊட்டியது. அந்த ஆளை அவர் கேலி செய்தார். அவன் சவாரி செய்த விதத்தை ஏளனம் செய்தார். அவனது "அரச தோரணை"யைக் கிண்டல் செய்தார். அவரது கிண்டல் மொழி ஆர்மண்டிக்குச் சிரிப்பை மூட்டியது. அவள் சிரித்தாள்; மீண்டும் மீண்டும் சிரித்தாள். மைக்கின் உற்சாகம் தாளவில்லை. அவள் சிரிக்கவேண்டும் என்பதற்காக மேன்மேலும் சிரிப்பு வெடிகளை அள்ளி வீசினார். ஆர்மண்டி அதற்குப் பரிசாக அவருக்கு ஒயின் கொடுத்தாள். மைக்குக்கு எப்பொழுதும் ஒயின் பிடிக்காது. விஸ்கிதான் அவருக்கு விருப்பம். ஆனால், இந்த அருமையான சந்தர்ப்பத்தில் அவரது விருப்பு வெறுப்புகளுக்கு இடங்கொடுத்து அனந்தத்தைக் கெடுத்துக்கொள்வது புத்திசாலித்தனமா? ஆகவே, ஆர்மண்டி கொடுத்த ஒயினை ஆவலுடன் வாங்கிக் குடித்தார்.

எத்தனையோ ஆண்டுகளுக்கு முன்பு நிகழ்ந்த—நினைவிலிருந்து முற்றும் நீங்கிவிட்டிருந்த—இந்த நிகழ்ச்சி இப்பொழுது மைக்கின் ஞாபகத்துக்கு வந்தது. ஆர்மண்டியும் அவரும் என்னென்னமோ பேசி மகிழ்ந்தார்கள். ஆனால் அவையெல்லாம் நினைவிற்கு வரவில்லை. ஆனால் ஆர்மண்டி பற்றிய மற்ற அனைத்தும் நினைவுக்கு வந்தன. கடந்த மூன்று நாட்களில் இத்தகைய நினைவுகள் அவருக்கு அடிக்கடி

வந்தன. அந்த ஹோட்டலுக்குச் சென்று ஆர்மண்டி யுடன் மீண்டும் இரவைக் கழிக்கவேண்டும் எனத் துடித் தார். அவர் மனதில் தனிமை உணர்ச்சி தோன்றி யது. அவர் தனிமையுடன் மிகப் பழகியவர்தான். ஆனல், இதுவோ வேறு விதமான தனிமை! அவர் மனதில் இளமை உணர்ச்சிகள் பொங்கின. தம் வாழ்க்கையின் ஆரம்பக் கட்டத்தைத் தாம் மீண்டும் அடைந்திருப்பதுபோல் அவர் உணர்ந்தார்.

"அடுத்த கோடைக் காலம்வரைதான் இந்த நாடோடி வாழ்க்கை. அதன் பின் வாழ்க்கையைச் சீராக அமைக்க வழிவகை செய்துகொள்ள வேண்டும். குறிக்கோளின்றி இப்படிக் காடு மலைகளில் கண்டபடி சுற்றுவதை நிறுத்திவிட வேண்டும். நல்ல வேளையாக, இப்பொழுதாவது இந்த நல்ல எண்ணம் தோன்றி யதே" என்று அவர் மனதிற்குள் தீர்மானித்துக் கொண்டார். அவர் இதுபோல் தீர்மானித்தது இது முதல் தடவை அல்ல; பலமுறை அவர் இப்படித் தீர் மானித்திருக்கிருர். ஆனல் தீர்மானத்தை நிறை வேற்ற முடியாமற்போனதால் அவர் இதுபற்றி நினைப் பதையே நிறுத்தியிருந்தார்.

கணவாயில் இருள் வேகமாகக் கவிந்து கொண் டிருந்தது. திடீரெனப் பலத்தகாற்று வீசியது. பனித் தூள் அவரது முகத்தில் கடுமையாகத் தாக்கி வேதனை தந்தது. நிமிர்ந்து ஆகாயத்தைப் பார்த்தார். இன்னும் வெளிச்சம் மங்கவில்லை. ஆயினும் பனித்தூள் கடுமை யாகக் கொட்டியதும் அந்த நேரத்தில் கடவுளை நினைத் துக்கொண்டார் மைக். கடவுளுக்கும் அவருக்கும் என்ன தொடர்பு? அவருக்கே புரியவில்லை. ஆனல், கடவுளை



நினைத்ததும் அவர் மனதிலே ஒருவிதச் சாந்தி பிறந் தது. சூரிய அஸ்தனத்தைப் பார்க்கும்போது குறிப்பாக புயல் மழைக்குப்பின்னர் சூரியனைக் காணும்போது— அவருக்குக் கடவுளின் நினைப்புவரும். புயலை நினைத் தாலே அவருக்குக் குலை நடுக்கம்தான். கணவாயின் கடைசி முனையில் வரும்போதுகூடப் புயலை நினைத்து அவர் இரண்டொரு முறை அச்சமடைந்தார். ஆனலும், வெளிச்சத்தைப் பார்த்ததும்? கடவுளை நினைத்ததும் அந்த அச்சம் அகன்று விட்டது. இன்னும் சில நிமிடங்கள் தான்; அவர் மலைஉச்சியை அடைந்து விடுவார்; உச்சியில் நின்றுகொண்டு கீழே விளக்கு களின் பிரகாசத்துடன் மிளிரும் நகரத்தைப் பார்க்கலாம். இதை எண்ணியதுமே அவர் உள்ளத்தில் இன்பம் ஊற்றுகப் பெருகியது. இந்த உற்சாகத்தினல் அவர் நடை வேகமடைந்தது.

"இன்னும் கொஞ்சதூரந்தான். அடிவாரத்தை அடைந்துவிடலாம். கழுதையைக் கொண்டுபோய் வழக்கம்போல் ஜான் ஹாமர்ஸ்மித்தின் லாயத்தில் கட்டவேண்டும். கழுதை படுப்பதற்குப் புத்தம் புதிய வைக்கோலைப் பரப்பிப் போடவேண்டும். பனியும் குளிர் காற்றும் உட்புகாதபடி தொழுவத்தின் கதவுகளை இறுக்க மாக மூடவேண்டும். ஜானிடம் ஒருபடி கொள் வாங்கி வந்து கழுதைக்கு வைக்கவேண்டும். பிறகு என்ன செய்வது? ஆமாம்! நாலாவது வீதியின் கோடியிலிருக் கும் திருமதி, ரைட்டின் இல்லத்திற்குச் செல்லவேண்டும். அங்கு வழக்கமாகத் தங்கும் அறை யில் தன் சாமான்களை வைக்கவேண்டும். அந்த அறை அவ்வீட்டின் முன்புறத்தில் அமைந்திருக்கிறது.

அங்கிருந்து பார்த்தால் நகரின் ஆகாயத்தோற்றம் தென்படும். அப்புறம் சவரம்செய்து கொள்ள வேண்டும். திருமதி, ரைட்டிடம் கத்திரிக்கோல் கடன் வாங்கி, சீரற்று வளந்திருக்கும் தாடியைச் சீர்படுத்த வேண்டும். நீலநிறத் தண்ணீர்த் தொட்டியில் விழுந்து குளித்து விட்டு, மஞ்சள் நிறப் பூவேலைப்பாடுகள் அமைந்த துண்டினுல் உடம்பைத் துடைக்கவேண்டும். கறுப்பு நிற ஆடையை அணிந்து, அதற்குப் பொறுத்தமான கறுப்பு ஜோடையும் மாட்டிக் கொள்ளவேண்டும். தலைக்குக் கறுநிறத் தொப்பி வேண்டுமே! ஓ! அதுவும் இருக்கிறது; அணிந்துகொள்ளலாம். இந்தவிதமாக, பாலைவன வாழ்க்கையை ஒருவகையாக முடித்துக் கொண்டு, பொன்மலை வாழ்க்கையைத் தொடங்கலாம் என மைக் நினைத்துக் கொண்டார். "உலகமாளிகை" உணவு விடுதிக்குச் சென்று; ஆர்தர் மோரிஸைப் பார்த்து வாழ்த்துக்களைத் தெரிவிக்க வேண்டும். சாப்பாட்டு அறைக்குள் போய், அவர்கள் தயாரித்து வைத்திருக்கும் அறுசுவை உணவை உண்டுவிட்டு, இரண்டு கோப்பை சூடானகாப்பியும் குடிக்கவேண்டும். தடித்த உருவம் உடைய அந்தச் சமையற்காரிதான் எனக்குப் பரிமாறுவாள். அவர் சிரித்துச் சிரித்துப் பேசிக் கொண்டே ஆர்தர் மோரிஸ் உள்ளிருந்து கொடுத்தனுப்பும் சூடான பலகாரங்களைக் கொண்டுவந்து வைப்பாள்" என்றெல்லாம் பிரானீன் நினைத்துக் கொண்டார்.

இந்தக் கட்டத்தில் மைக்கின் சிந்தனை சற்று தடம் புரண்டது. நினைத்தபடி நடக்குமா என்ற ஐயம் எழுந்தது. "அந்தப் பருத்த சமையற்காரிதான் பரிமாறுவாள் என்பது என்ன நிச்சயம்?" என்ற கேள்வி எழுந்தது. அவளது உருவத்தை ஒருகணம் தம் மனக்கண் முன் கொண்டு வந்து பார்த்தார். நீண்ட கவுனுடன் சாப்பாட்டு அறையில் அவள் நிற்கிருள். அவளுக்குப் பின்புறம் உள்ள மூலைகளில், மீசையும் தாடியும் வைத்த வாடிக்கைக்காரர்கள் கூட்டம் கூட்டமாக நின்று உரக்கச் சிரித்துப் பேசிக் கும்மாளம் போட்டுக்கொண்டிருக்கின்றனர். அவர்கள் காலித்தட்டுகள் நிரம்பியிருந்த மேஜைகளின் மேல் குனிந்து படுத்துக்கொண்டு பேசிக்கொண்டிருக்கிருர்கள். ஒருவரையொருவர் முதுகில் தட்டுவதும், விலை உயர்ந்த சுருட்டுகளைப் புகைத்துத் தள்ளுவதுமாக இருக்கிருர்கள்—அவர்களெல்லாம் மைக்குக்கு முன்பே பழக்கமானவர்கள்தான். அவர்கள் உட்கார்ந்திருக்கும் மேசைகளுக்கிடையில் உள்ள இடைவெளி வழியாகத் தான் மைக் உள்ளே செல்லவேண்டும். அப்படிச் செல்லும்பொழுது அந்த மனிதர்கள் எல்லாம் அவரைக் கவனிப்பார்கள்; பேசுவார்கள். ஆனுல், அந்த ஓட்டலில் மேசைகள் அதிகம் இல்லாத தனி அறைகளும் இருப்பதை அவர் அறிவார். அங்கு ஒருசிலர்—கவலை தோய்ந்த முகங்களுடன், அருகிலிருக்கும் தொழிற்சாலையில் வேலை செய்துவிட்டு வந்த எண்ணெய்க் கரைபடிந்த அழுக்கு உடைகளுடன் உட்கார்ந்திருக்கிருர்கள். அவர்கள் பேச்சு மைக்கிற்குக் கொஞ்சமும் பிடிக்காது.

அங்கு யார் பரிமாறுவார்? அந்தப் பருமனுன பெண்மணி இருப்பாளா? இருக்கமாட்டாளா? சரி, சரி! யார் இருந்தாலென்ன? அங்கு உணவை

முடித்துக்கொண்டு, கானியான் தெருவிலிருக்கும் "லக்கிபாய்" சலூனுக்குப் போய் வழக்கம்போல் டாம் கனேவரைச் சந்திக்க வேண்டும். கனேவர் வயதில் மைக்கைவிட சிறியவர் தான். அவரது சலூனை அடைந்ததும் மெதுவாகக் கதவைத் திறந்து உள்ளே செல்லவேண்டும்; அங்கு சில கண்ணுடிச் சீசாக்களும், அழகிகளின் படங்களும், சீட்டாட்ட மேசையும், பெரிய அடுப்பும், சுவர் ஓரமாக நாற்காலிகளும் இருக்கும். டாம் தனது இடத்திலிருந்தபடியே தலையை நிமிர்த்தி, 'அடடா? டேய், பசங்களா! இதோ பாருங்கடா வந்திருக்கிறது யாருன்னு! குளிர்காலம் ஆரம்பமாயிடுச்சுன்னு இவரைப் பார்த்தாலே தெரியலே!' என்று கத்துவார். அங்கே சில இளைஞர்களும், சில புதியவர்களும், சில நண்பர்களும் இருப்பார்கள். 'வால்ரஸ்' மீன் போன்ற மீசைக்காரர் ஹென்றி பிரே, மார்க் வில்டன், பாட் கல்லாகர் இவர்களும் இருப்பார்கள். இவர்கள் எல்லோரும் அவரை மகிழ்ச்சியுடன் வரவேற்பார்கள். வரவேற்புப் பிரமாதமாய் இருக்கும். "அடடே! மைக்! வா! வா! எப்போ வந்தே! சௌகியமாய் இருக்கிருயா?" என்று டாம் கர்ஜனை செய்துகொண்டே, தமது பெரிய, கனத்த, மென்மையான வைர மோதிரம் மின்னும் கையை நீட்டி மைக்குடன் கை குலுக்குவார். "என்ன மைக்? ஒரு மாறுதலும் இல்லாமல் அப்படியே இருக்கிருயே?' என்று கேட்கும் டாமுக்கு, ஆம்! அப்படியே தான் இருக்கிறேன்" என்று மைக் பதில் சொல்லுவார். பிறகு, அங்கு பொழுது போவதே தெரியாது. மைக் மற்றவர்களுடன் சீட்டு விளையாடுவார். ஒரே குஷிதான்.



ஆகவே அந்தப் பருத்த சமையற்காரி இருந்தாலும் இல்லாவிட்டாலும் கவலையில்லை. அவர் பொன்மலைக்குப் போகத்தான் போகிருர்.

இப்பொழுது அந்தப் பழைய சாலையின் உச்சியை மைக் அடைந்துவிட்டார்; நின்ருர்; கீழே பார்த்தார். எதையோ இழந்துவிட்டதுபோன்ற உணர்ச்சி ஏற்பட்டது. கானியான் வீதி இன்னும் அதிகமான பிரகாசத்துடன் காட்சியளிக்குமே? ஏன் இப்படி இருள் சூழ்ந்திருக்கிறது? இருள் மத்தியில் வெளிச்சமுள்ள பல ஜன்னல்கள் தெரியும்! ஆனுல், இப்பொழுது ஒரு சில விளக்குகள் மட்டும்தானே அங்குமிங்கும் இலேசாகக் கண் சிமிட்டுகின்றன! செங்குத்தான மலைப்பாதையில் அந்த விளக்குகள் போதிய வெளிச்சத்தைப் பாய்ச்சவில்லை. அதற்கு மாருக மெல்லிய ஒளிக்கதிர்களைத்தான் சிதறிக்கொண்டிருந்தன. அடர்ந்த இருளை விரட்டியடிக்கும் சக்தி இந்த ஒளிக்கதிர்களுக்கு இல்லை. கானியான் தெருவும் இருளில் மூழ்கிக் கிடந்தது. அந்தத் தெருவில் ஒரு சில தெரு விளக்குகளே எரிந்துகொண்டிருந்தன. பனிக்காற்று சுழன்று சுழன்று அடித்து அவ்விளக்குகளை அசைத்துக்கொண்டிருந்தது.

"நீ ஒரு கிழட்டு முட்டாள்!"—மைக்பிரானீன் இப்படி உரக்கவே கூறினர். அப்படிச் சொன்னவுடன் அவர் மனதில் ஒருவித ஆறுதல் ஏற்பட்டது. பொன்மலை இப்பொழுது இப்படித்தான் இருக்கிறது. இருந்தாலும், பொன்மலையின் மீது அவருக்குள்ள பாசம் சற்றும் குறையவில்லை. மனிதன் கிழப்பருவம் எய்துவதேபோல் அந்த ஊரும் கிழத்தன்மை அடைந்திருக்

கிறது. முதிய வயதில் மனிதன் சாவதைப்போலவே அந்த ஊரும் எப்பொழுதாவது மறைய வேண்டியது தான்.

கானியான் தெருவை நோக்கி அவர் மெதுவாகச் சென்று கொண்டிருந்தார். கழுதையும் அவருக்குப் பின்னால் தட்டுத்தடுமாறி வந்துகொண்டிருந்தது. பனிக்காற்று முதுகுப்புறமாகப் பிடித்துத் தள்ள, முதன்முதலில் தெரிந்த விளக்கைத் தாண்டினார். அதன்பின் மீண்டும் இருளில் மறைந்தார். மீண்டும் இரண்டாவது விளக்கைத் தாண்டிச் சென்றார். பிறகு, நடுத்தெருவில் நின்றார்; கழுதையும் அவருக்குப் பக்கத்தில் நின்றது. அப்பொழுது தெருவின் மறு கோடியிலிருந்து பூதாகாரமான பெரிய லாரி ஒன்று பேய் வேகத்தில் வந்துகொண்டிருந்தது. நடுத்தெருவில் கழுதையுடன் சாவதானமாக நின்றுகொண்டிருந்த மைக் பிரானீனைப் பார்த்த லாரி டிரைவர் தலையை வெளியே நீட்டி "ஏய், நாட்டுப்புறம்! ஓரமாகப் போ ஐயா!" என்று கத்திவிட்டுச் சென்றான்.

அவனுடைய கூக்குரல் மைக்கின் காதில் விழவில்லை. அவர் "லக்கிபாய் சலூனையே வெறிக்கப் பார்த்துக் கொண்டு நின்றார். "இங்கும் விளக்கொளியையே காணோமே! ஒரே இருள் சூழ்ந்திருக்கிறதே! சரி, அருகில் சென்றுதான் பார்ப்போமே!" என்று எண்ணியபடி வீட்டை நெருங்கினார் மைக்; கழுதையும் பின் தொடர்ந்தது. பெயர்ப் பலகை தொங்கிய பெரிய ஜன்னல் பலகை அடித்து மூடப்பட்டிருந்தது. கடைசியில் அவர் உள்ளே செல்லும் பாதையை அடைந்தார். அங்கு ஒரு பெயர்ப் பலகை தொங்கியது.



ஆம்; அதில் "லக்கிபாய்" என்று தான் எழுதப்பட்டிருந்தது. டைமண்ட் ஜாக்கி பொம்மைகூட இருக்கிறதே!" தவறான இடத்திற்கு வந்துவிடவில்லை." என்ற முதியவரின் இந்த எண்ணத்திற்கு "ஆமாம்" போடுவது போல், பெயர்ப் பலகை காற்றில் ஆடியது சுவரில் மோதி ஓசை எழுப்பியது சிறிது நேரம் யாராவது வருகிறார்களா என்று கூர்ந்து கவனித்தார். ஆள் நடமாட்டமே தென் படவில்லை. சிறிது நேரங்கழித்துப் பாதை வழியாக ஏதோ ஒரு மனித உருவம் ஆடி அசைந்து வந்தது. மைக் மேலும் கவனத்துடன் பார்த்தார். ஆட்டுத் தோல் கோட்டு அணிந்து கொண்டிருந்த ஒரு மனிதன் வந்து கொண்டிருந்தான். அந்த மனிதன் யாரையும் கவனிக்கவில்லை. தான் எங்கே, போகிறோம்; ஏன் போகிறோம் என்பதை நன்கு தீர்மானித்துக் கொண்டவனைப் போல் நேராகப் போய்க் கொண்டிருந்தான். அம்மனிதன் அநேகமாக மைக்கையும் தாண்டிவிட்டான். இனிமேல் சும்மா இருந்தால் பயனில்லை என்று எண்ணிய மைக், "ஐயா!" என்றார் மெதுவான குரலில். அம் மனிதனைத் தொட்டு நிறுத்தவும் மைக் கையைத் தூக்கினார்; ஆனால், அவனைத் தொடவில்லை. அவன் நின்றான்; "என்ன?" என்று பொறுமையற்ற குரலில் கேட்டான். மைக் தூக்கிய கையை மெல்ல இறக்கிக் கொண்டார். கேள்விக்கு பதில் வராததைக் கண்ட அம்மனிதன், "என்னய்யா வேண்டும்?" என்று மீண்டும் கேட்டான்.

"ஒன்றும் வேண்டாம்; எனக்கு வேண்டியதெல்லாம் நிறைய இருக்கிறது"—என்று மைக் பதிலளித்தார்.

'' சரி, சரி, பின்னே எதற்காகக் கூப்பிட்டீர் ?''

மைக் 'லக்கிபாய்' விடுதியைச் சுட்டிக் காட்டி, 'அது மூடியிருக்கிறதே' என்ருர்.

'' ஆமாம், மூடித்தான் கிடக்கிறது '' என்று அவன் இலேசாகச் சிரித்தான். இப்பொழுது அவன் அவ்வளவு அவசரம் காட்ட வில்லே.

'' அது எவ்வளவு நாட்களாக மூடியிருக்கிறது?''— மைக் வினவினுர்.

'' சென்ற ஜூன் மாதத்திலிருந்து என்று நினேக்கிறேன். அதை நடத்தி வந்த டாம் கனேவர் ஜூன் மாதத்தில் தான் இறந்து போனுர்.''

மைக் இடிவிழுந்தவர் போல் நின்ருர். பிறகு சமாளித்துக் கொண்டு ''டாம் செத்து விட்டாரா ?'' என்ருர்.

ஆமாம் ! சென்ற ஜூனில் தான் இறந்தார்.''

'' ஓகோ !'' என்று கூறிவிட்டு, மைக் சிறிது நேரம் செயலற்று நின்ருர்.

அவருக்கு ஒன்றுமே தோன்றவில்லே. தோன்றுவதற்கு என்ன இருக்கிறது !

''டாம் கனேவரை உங்களுக்குத் தெரியுமா?'' என்று மைக்கிடம் அந்த மனிதன் கேட்டான்.

''முப்பது வருஷமாகத் தெரியும். இன்னும் அதிகமாகக் கூடச் சொல்லலாம்'' என்று விடையளித்த மைக், தனக்கும் டாமுக்கும் ஏற்பட்ட பழக்கம், நட்பாக முதிர்ந்த கதையை யெல்லாம் யோசித்துப் பார்க்கத் தொடங்கினுர். ஆனல் எவ்வளவு வருஷப் பழக்கம் என்பதை அவரால் நிர்ணயிக்க முடியவில்லே, அதனல், ''டாம் என்னேவிட வயதில் மிகவும் இளேயவர் '' எனறு கூறி முடித்தார்.



இதைக் கேட்ட அந்த மனிதர் கிழவரின் அருகில் நெருங்கிவந்து, அவரை உற்று நோக்கினுன். ''ஓ ! நீங்கள் மைக்பிரானினிந்தானே ?'' என்று கேட்டான்.

''ஆம்'' என்ருர் மைக்.

''அடடே ! முதலில் எனக்கு அடையாளமே தெரியவில்லே மன்னிக்கணும்.''

''அதனல் பரவாயில்லே '' என்று மைக் சொன்ருரே தவிர, ''அந்த ஆள் யார் ? அவன் எதற்காக மன்னிப்புக் கேட்டான்?'' என்பது அவருக்குப் புரியவில்லே.

பிறகு அவர் தலேயை இலேசாகத் திருப்பித் தெருவை நோக்கினுர். பனி கடுமையாகப் பெய்து கொண்டிருந்தது. தெரு வெள்ளே வெளேரென்று காட்சியளித்தது. அவர் கழுதை ஆனியைப் பார்த்தார். அது செடிப் பந்தலுக்கு அடியில் ஒதுங்கி நின்றிருந்தது. அதை நோக்கி ஓரடி எடுத்து வைத்தார். அதற்குள் ஏதோ, நினேத்துக்கொண்டு, மீண்டும், வந்த மனிதனிடம் ''ஐயா'' என்ருர். புறப்பட முயன்ற அந்த மனிதன் திரும்பி வந்தான்.

''டாமைப் பற்றி நீர் கூறிய செய்தி என்னேக் கலக்கிவிட்டது.''

''பின்னே, இருக்காதா? அவர் போன்ற ஒரு பழைய நண்பரை லேசில் மறக்க முடியுமா ?

''திருமதி. ரைட்டின் வீட்டுக்கு எந்தப் பக்கமாகப் போகவேண்டும் ?'' எனக் கேட்டார் மைக்.

''திருமதி. ரைட்டா ? யாரது ?

''திருமதி. வில்லியம் ரைட். அவளுடைய கணவர் கூடத் தொழிற்சாலேயில் போர்மென் வேலே பார்த்து வந்தாரே. தீவிபத்தில் இறந்து விட்டாரே''.

''ஓகோ! அவரா?'' என்று சொல்லிவிட்டு அதற்கு மேல் ஒன்றும் பேசாமல் அந்த மனிதன் மைக்கின் உடலை ஏற இறங்கப் பார்த்து நின்ருன்.

''ஒருவேளை அவளும் இறந்து விட்டாளா?'' என்று மைக் தயக்கத்துடன் கேட்டார்.

''ஆமாம்! ஐயா! அவளும் இறந்து விட்டாள் என்ருன் அம்மனிதன். பிறகு திடீரென உற்சாகமான குரலில், இப்பொழுது நீங்கள் போக வேண்டியது திருமதி பிரான்லியின் வீட்டுக்கு என்று சொல்லுங்கள். அதாவது போன குளிர் காலத்தில் நீர் தங்கியிருந்த வீட்டிற்கு?'' எனக் கேட்டான்.

''ஆம்! ஆம்! அங்கேதான்'' என்ருர் மைக்.

''சரி நான் அந்தப் பக்கமாகத் தான் போகிறேன். என்னுடன் வாருங்கள்'' என்ருன் அவன்.

அவர்கள் இருவரும் நடக்கத் தொடங்கினர்கள். கழுதையைக் கொண்டு போய் ஜான் ஹாமர்ஸ்மித்தின் லாயத்தில் விட்டுவிட்டுச் செல்லவேண்டும் என மைக் முதலில் நினைத்தார். ஆனல், அதை அம்மனிதனிடம் கூற அஞ்சினர். கானியான் வீதி வழியாக அவர்கள் நடந்தார்கள். மைக்கின் கழுதை ஆனியும் கூடவே சாக்கடை ஓரமாக நடந்து சென்றது. முதலாவது குறுக்கிட்ட வலது பக்கத்துத் தெருவில் திரும்பி ஒரு செங்குத்தான குன்றில் ஏறி மற்ருெரு சிறு தெருவை நோக்கிச் சென்ருர்கள். அந்தத் தெருவில் ஒரே ஒரு விளக்கு மட்டுமே எரிந்து கொண்டிருந்தது.

அத்தெருவை அவர்கள் பாதி கடந்து கொண்டிருந்த போது, ''அவளும் இந்தக் கோடை காலத்தில் தான் இறந்தாளோ?'' என்று மைக் கேட்டார். கிழவன் சொல்வதைக் காதில் வாங்கிக் கொள்வதற்காகத் திரும்பிய அந்த மனிதன், ''என்ன? சொன்னீர்கள்?'' என்ருன்.



''அவளும் இந்தக் கோடையில்தான் செத்தாளோ?''

''யார்?''

''அவள் தான், திருமதி. ரைட்'' என்ருர் மைக்.

அவன், மைக்கின் முகத்தை வெளிச்சத்தில் உற்றுப் பார்த்தான். பிறகு, ''அவள் இந்தக் கோடையில் சாகவில்லை. அவள் இறந்து ரொம்பக் காலம் ஆகிறதே, ஐயா'' என்ருன்.

''ஓ, அப்படியா'' என்று இழுத்தாற்போல் ஆமோதித்தார் மைக்.

இப்பொழுது அவர்கள் குறுக்குச் சாலைக்கு வந்து விட்டார்கள். பனிக் காற்று கடுமையாக வீசியது. அவர்கள் ஒரு விளக்குக் கம்பத்தைக் கடந்து சென்ருர்கள். அந்த மூவருடைய நிழல்களும் நீண்டுகொண்டே வந்து, கடைசியில் பனித்தூவலில் மங்கி மறைந்தன.

---